# சங்க இலக்கியத்தில் பிரிவுகள்

திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழக
முனைவர் பட்டப் படிப்பிற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர் :

**வெ. ஜெயலெட்சுமி**

**Reg. No. 027999**

ஆய்வு நெறியாளர் :

முனைவர் **கோ.வெ. நடராசன்**

இணைப்பேராசிரியர்

**தமிழ் உயராய்வு மையம்**

**அ. வீரையா வாண்டையார் நினைவு**

**ஸ்ரீ புஷ்பம் கல்லூரி** (தன்னாட்சி),

பூண்டி - 613 503. தஞ்சாவூர் மாவட்டம்.



**செப்டம்பர் - 2015**

*முனைவர்* ***கோ.வெ. நடராசன்***
*இணைப்பேராசிரியர் - ஆய்வு நெறியாளர்,*
*தமிழ் உயராய்வு மையம்,*
*அ. வீரையா வாண்டையார் நினைவு*
*ஸ்ரீ புஷ்பம் கல்லூரி (தன்னாட்சி),*
*பூண்டி - 613 503,*
*தஞ்சாவூர் மாவட்டம்.*

# நெறியாளர் சான்றிதழ்

''**சங்க இலக்கியத்தில் பிரிவுகள்**'' *என்ற தலைப்பில் திருமதி* **வெ. ஜெயலெட்சுமி (Reg. No. 027999)** *அவர்களால் எனது மேற்பார்வையில் 2009 - 2015 ஆம் கல்வியாண்டில் பிஎச்.டி., முழு நேர ஆய்வாளராக ஆய்வு நிகழ்த்தியதன் விளைவே இந்த ஆய்வேடு. இஃது இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்று சான்றளிக்கின்றேன்.*

*இடம் : பூண்டி* — ***(கோ.வெ. நடராசன்)***
*நாள் :* — *ஆய்வு நெறியாளர் கையொப்பம்*

முனைவர் **வீ. சிவபாதம்**
தலைவர், தமிழ் உயராய்வு மையம்,
அ. வீரையா வாண்டையார் நினைவு
ஸ்ரீ புஷ்பம் கல்லூரி (தன்னாட்சி),
பூண்டி - 613 503,
தஞ்சாவூர் மாவட்டம்.

# துறைத்தலைவர் சான்றிதழ்

''**சங்க இலக்கியத்தில் பிரிவுகள்**'' என்ற தலைப்பில் திருமதி **வெ. ஜெயலெட்சுமி** **(Reg. No. 027999)** அவர்களால் முனைவர் **கோ.வெ. நடராசன்** அவர்கள் மேற்பார்வையில் 2009 - 2015 ஆம் கல்வி ஆண்டில் முனைவர் பட்ட முழுநேர ஆய்வாளராக ஆய்வு நிகழ்த்தியதன் விளைவே இந்த ஆய்வேடு. இஃது இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கின்றேன்.

இடம் : பூண்டி **(வீ. சிவபாதம்)**

நாள் : துறைத்தலைவர் கையொப்பம்

**வெ. ஜெயலெட்சுமி**
*முனைவர் பட்ட ஆய்வாளர் (முழு நேரம்),*
**(Reg. No. 027999)**
*தமிழ் உயராய்வு மையம்,*
*அ. வீரையா வாண்டையார் நினைவு*
*ஸ்ரீ புஷ்பம் கல்லூரி (தன்னாட்சி),*
*பூண்டி - 613 503,*
*தஞ்சாவூர் மாவட்டம்.*

# ஆய்வாளர் உறுதிமொழி

*''**சங்க இலக்கியத்தில் பிரிவுகள்**'' எனும் தலைப்பில் முனைவர் **கோ.வெ. நடராசன்** அவர்கள் மேற்பார்வையில் 2009 - 2015 ஆம் கல்வி ஆண்டில் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.*

*இடம் : பூண்டி*
*நாள் :*

(வெ. ஜெயலெட்சுமி)
*ஆய்வாளர்*

# நன்றியுரை

''சங்க இலக்கியத்தில் பிரிவுகள்'' என்ற ஆய்வுத் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத் தார்க்கு நன்றி!

முழுநேர ஆய்வு மேற்கொள்ள இசைவளித்த அ. வீரையா வாண்டையார் நினைவு ஸ்ரீ புஷ்பம் கல்லூரியின் தாளாளர் 'மனிதருள் புனிதர்' **ஸ்ரீமான் கி. துளசிஐயா வாண்டையார்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்லூரியின் முதல்வர் முனைவர் **எஸ். உதயகுமார்** அவர்களுக்கும், கலைப்புலத் தலைவர் பேராசிரியர் **என். இராசேந்திரன்** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **வீ. சிவபாதம்** அவர்களுக்கும் என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணியில் எனக்கு எழுந்த ஐயங்களுக்கெல்லாம் விளக்கமளித்து ஆய்வினை நெறிப்படுத்தி, ஆய்வேடு செம்மையாக உருவாக ஆக்கமும் ஊக்கமும் நல்கிய நெறியாளர் முனைவர் **கோ.வெ. நடராசன்** அவர்களுக்கு என்றும் நன்றியுடையேன்.

ஆய்வுப் பணியில் பல்லாற்றானும் உதவிய தமிழ்த் துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் நான் என்றும் நன்றியுடையேன்.

*கல்வி வளர்ச்சியில் என்னை முந்தியிருக்கச் செய்த என் அன்புத் தந்தையார்* **கோ. வெங்கடாசலம்** *- தாயார்* **விஜயா** *மற்றும் என் ஆருயிர் சகோதரர்* **வெ. இராஜா,** *அன்புச் சகோதரி* **வெ. ஜெயா,** *என் மதிப்பிற்குரிய மாமனார்,* **து. சின்னராசு**, *காவல்துறை (பணி நிறைவு), அன்புக்குரிய அத்தை* **சி. தனலெட்சுமி** *மற்றும் குடும்பத்தினருக்கும் எனது நண்பர்களுக்கும் நன்றி பாராட்டுகிறேன்.*

*என் வாழ்வில் எல்லாமாய் இருந்து கண்ணும் கருத்துமாய் கவனித்து என் உயர்கல்விக் கனவை நனவாக்கித் தரும் என் அன்புக் கணவர்* **சி. மணிகண்டன்,** *துணை வட்டாட்சியர், எங்கள் அன்புச் செல்வம்* **ம. மேகஷ்ஸ்ரீயா** *ஆகியோருக்கும் என் நன்றி எப்போதும் உரியன.*

*எனது ஆய்வேட்டினை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த* **தஞ்சாவூர், முல்லைபாரதி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ்** *நிறுவனத்தாருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

**- வெ. ஜெயலெட்சுமி**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இறை. | - | இறையனார் களவியல் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறுந். | - | குறுந்தொகை |
| செய். | - | செய்யுளியல் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நம்பி. | - | நம்பியகப்பொருள் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| மதுரை | - | மதுரைக்காஞ்சி |
| மேலது | - | மேற்சுட்டிய நூல் |

# முன்னுரை

பாலை நெறிகள் பாலைத்துறைகள் அன்பின் பாலன. நல்வாழ்வுக்கு இனியன. செறிந்த கூடலை அளிப்பன. பிரியாத புணர்ச்சியும், புணராத பரிவும் உள்ளத்தையும், உடலையும் கெடுக்கும். இடையீடு உடைய புணர்வுப் பிரிவு களே அன்பை வளர்த்து ஆர்வத்தை மிகுத்து அறிவைத் தூண்டி நெஞ்சைச் செவ்விதாக்கி, இன்பத்தைத் தரும். பாலைக் கொடுநெறி அன்பின் நெறியைப் பெருக்குதலின், பெருகிய அன்பினைப் புலப்படுத்தலின் சங்கச் சான்றோர் பாலைத் திணையைப் பாடல்சார் திணையாக மதித்துப் பாடினர்.

தொல்காப்பிய அகத்திணையியல் என்பது ஏழு திணைகளின் அடிப் படைக் கோட்பாட்டை, அடிப்படையான இயல்புகளை எடுத்துக் காட்டுகிறது. திணையின் இந்தப் பொது இயல்புகளுடன் மிக முக்கியமாகப் பேசப்பட்ட மற்றொரு கூறு பிரிவு ஆகும். இந்தப் பிரிவு பற்றிய கூறுகளும் வரையறை களும் அகத்திணையிலேயே மிகுதியும் உரைக்கப்பட்டுள்ளதைக் கவனத்தில் கொண்டு திணைக்கோட்பாட்டை ஆராய வேண்டியுள்ளது. நடுவணைந் திணைகள் அனைத்திற்கும் பிரிவு ஒழுக்கம் பொதுவானது என்பதை உணர்த் தும் நோக்கில் பிரிவு பற்றிய தகவல்கள் ஆராயப்படுகின்றன.

**மேவிய சிறப்பின்...**

**ஓண் பொருள் முடியவும் பிரிவே**

இந்த நூற்பா காவற்பிரிவு, பொருள்வயின் பிரிவு எனும் இரண்டையும் பற்றிப் பேசுகின்றது. கணவனின் பயணம் குறித்த மனைவியின் கவலை பாலைக்குரிய ஒழுக்க வடிவமாகும். பிரிவு பற்றிய பாடல்களில் கணவனைக் குறித்த மனைவியின் கவலையானது அவன் கடந்து செல்ல வேண்டிய காடுகள் மலைகளையும் அவ்வழியில் உள்ள கொடிய கொள்ளைக்காரர்களையும் குறித்த வருணகைகளால் நுட்பமாக விளக்கிக்காட்டடப்படுகிறது.

## ஆய்வு நோக்கம்

மக்கள் வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் வாழ்க்கை நூலாகத் தொல்காப் பியம் விளங்குகிறது. தொல்காப்பியப் பொருளதிகாரத்திலுள்ள அகத்திணை, களவு, கற்பு இடம் பெற்றுள்ள வாழ்க்கை முறைச் செய்திகள் ஆராயப்பட உள்ளன. சங்க இலக்கியம் காட்டும் அகத்திணைப் பிரிவு, புறத்திணைப்பிரிவு, பிரிவுகள் காட்டும் சமுதாயத்தை எடுத்துக்காட்டி விலக்குவதை நோக்கமாக வும் கொண்டு இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுச் சிக்கல்

தமிழ் இலக்கண நூல்களான தொல்காப்பியம் நம்பியகப் பொருள், இறையனார் அகப்பொருள். புறப்பொருள் வெண்பாமாலை சங்க இலக்கியத் தில் திணை அடிப்படையிலும் இலக்கிய அடிப்படையிலும் தலைவன், தலைவி பிரியும்போது அவர்களின் மனநிலையும், அவர்கள் இருவரும் பார்க்க முடியாமல் வருத்தம் அடைவதையும், அவற்றில் ஏற்படும் மாற்றங்களும் போன்ற சிக்கலான வினாக்களுக்கு விடைத்தேடும் வகையில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

## கருதுகோள்

எந்தவொரு நிகழ்வும் தொடங்கிய உடனேயே முழுமை பெற்று விடாது. அவை பல்வேறு மாறுதல்கள் அடைந்தபின் தான் முழுமை பெறும். மேலும் காலத்திற்கேற்ப சில கூறுகள் மாறுதல் அடைகின்றது. இதைப்போல சங்க காலத்தில் கூறப் பெறும் செய்திகள்யாவும் திணை, இலக்கிய அடிப்படை யிலும் தொல்காப்பிய அடிப்படையிலும் பிரிவுகள் பற்றிய செய்திகள் யாவும் தலைவன், தலைவி துன்பத்தையும் அடிப்படையாகக் கொண்டு விளங்கு கிறது. அதனால் ஏற்பட்டுள்ள மாற்றங்களும் கூறப்பட்டுள்ளது என்ற கருது கோளின் அடிப்படையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு எல்லை

தொல்காப்பியப் பொருளதிகாரம் காட்டும் அகத்திணை, களவு, கற்பு பற்றிய செய்திகளும், இறையனார் அகப்பொருள், புறப்பொருள் வெண்பா மாலை நம்பி யகப்பொருள் ஆகியவற்றில் கூறப்படும் செய்திகளும், எட்டுத் தொகையில் அகத்தை சார்ந்த பிரிவுகளும், புறத்தைச் சார்ந்த பிரிவுகளும் சங்க இலக்கியப் பிரிவுகள் காட்டும் சமுதாயம் பற்றிய செய்திகளும் ஆய்வுக்கு எல்லையாக எடுத்துக் கொள்ளப்படுகிறது.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாக அமைக்கப்பட்டுள்ளது. அவையாவன:

1. இலக்கண நூல்களில் பிரிவுகள்
2. சங்க இலக்கியத்தில் பிரிவுப் பாடல்கள்
3. அகத்திணைப் பிரிவுகள்
4. புறத்திணைப் பிரிவுகள்
5. சங்க இலக்கியப் பிரிவுகள் காட்டும் சமுதாயம்

இலக்கண நூல்களின் பிரிவுகள் எனும் முதலாவது இயல் மிக விரி வானது இவ்இயலில் பொருளதிகார நோக்கம், பாலை முக்கியத் திணையாக அணுகப்பட வேண்டிய நிலை. இதற்கான சார்பாக அமையும் பாலை நடு வணது எனப்பட்டதற்கான காரணம் ஓதற்பிரிவு, பகை, துணை, காவல், பொருள்வயின் பிரிவு எனும் முக்கிய இடம் அகத்திணையில் விளக்கப்பட உள்ளன.

சங்க இலக்கியத்தில் பிரிவுப் பாடல்கள் எனும் இரண்டாவது இயலில் சங்க இலக்கியப் பாடல்களுக்குத் திணை வரையறுத்துக் குறிப்பிடப்பட்டுள்ள நிலைக்கான அடிப்படைக் காரணங்கள் விரிவாக ஆராயப்பட உள்ளன. அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகியவற்றில் திணை வாரியாகக் கூற்றுகள் அமைந்த பாங்கு விளக்கப்பட உள்ளன.

இலக்கிய அடிப்படையிலும் குறுந்தொகையின் குறிஞ்சித்திணையில் உடன்போக்கு பற்றிய கூற்றும், நெய்தலில் பரத்தையர் பிரிவு பற்றிய கூற்றும் இடம் பெற்றமை, ஐங்குறுநூற்றில் குறிஞ்சித்திணையில் உடன்போக்கும், பரத்தையர் பிரிவும் தொடர்பான கூற்றுகள் இடம் பெற்றுள்ளமை, நற்றிணை யின் நெய்தல் திணையில் களவு பற்றிய பாடல்களும் பரத்தையர் பிரிவு உடன் போக்கு பற்றிய பாடல்களும் இடம் பெற்றுள்ள நிலைகள் விளக்கப்பட வுள்ளன. அகநானூற்றின் நெய்தல் பாடல்களும் பெரும்பாலானவை களவு பற்றிய பாடல்களே. களவு, கற்பு எனும் பொதுவானவையாக இருப்பது முதன்மைப்படுத்திக் காட்டப்படவுள்ளன.

அகத்திணைப் பிரிவுகள் எனும் மூன்றாவது இயலில் இவ்விரு திணை களின் பாலைத்திணையின் பின்னணியாகக் குறிஞ்சியும் முல்லையும் இருப் பது எடுத்துக்காட்டப்படவுள்ளன. உடன்போக்கு பெரும்பாலும் பாலையில்

பொருண்மையாய் பேசப்பட்டிருப்பது. ஐங்குறுநூறு, குறுந்தொகைப் பாடல் கள் வழி எடுத்து விளக்கப்படவுள்ளன. அலர் பற்றிய செய்திகளும், தலைவன் வரவை எதிர்பார்த்துக் கொண்டியிருக்கும் தலைவி, கற்புப்பிரிவில் பரத்தையர் பிரிவுக்குரிய காரணங்கள் ஆகியவை பற்றிய செய்திகள் விளக்கப்படவுள்ளன.

புறத்திணைப் பிரிவுகள் எனும் நான்காவது இயலில் புறத்திணை காட் டும் போர் முறைகள் வெட்சியில் தொடங்கி வாகையல் நிறைவுறுவது என்பது மரபான சிந்தனைப்போக்கு பொதுவாகப் போர் என்பது ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியிலிருந்து தொடங்குகிறது. அதாவது பகைவரின் பசுக்களைக் கவர்தல் இந்தப் பிரிவுகளில் முக்கியமானவை. குறிப்பாகச் சங்க இலக்கியங்களில் பரவ லாகப் பேசப்பட்டவை பொருள் வயின்பிரிவு, பகை, பரத்தையர் பிரிவு எனும் மூன்றே ஆகும். பொதுநலப் பிரிவில் காலில் பிரிவு, கலத்தின் பிரிவு எல்லை அடிப்படையில் பிரிதல் ஆகியவை கொண்டுள்ளன. காலில் பிரிவுக்குச் செல்லும் போது தலைவனுடன் தலைவியும் உடன் செல்வது உண்டு. கலத்தின் பிரிவில் பெண்களை அழைத்து செல்கின்றனர். கடல் கடந்து செல்லும் வழக் கம் பெண்களுக்கு இல்லை. எல்லை அடிப்படையிலும் தலைவியை விட்டுச் செல்வதை ஆராய முற்படுகிறது.

சங்க இலக்கியப் பிரிவுகள் காட்டும் சமுதாயம் எனும் ஐந்தாவது இயலில் தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் சில சமூகப் பிரிவுகள் நிலவி இருந் தன. ஒவ்வொரு சமுதாயமும் மாற்றமடைந்து புதிய சமுதாயம் உருவாகும் போது பொருளாதார நிலையிலும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. அரசன் பாசறையில் உறக்கம் கொள்ளாது கடமை உணர்வோடு செயல்படும் திறத்தைக் காட்டுகிறது. பிறர் உழைப்பினால் உண்டு வாழாது தன் முயற்சியில் பொரு ளீட்டித் தாமுண்டு வாழ வேண்டும் என்று கூறுகிறது. கல்விக்குப் பிரிந்தான் என்பதில் தலைவிக்கு வருத்தமில்லை. பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள

முடியவில்லை. தனிமனித மேம்பாடு, குடும்ப மேம்பாடு, சமுதாய மேம்பாடு சங்க இலக்கியச் சமுதாயத்தில் பெரும் மாற்றங்களையும் இதனால் தலைவன் தலைவி பிரிந்து இருப்பதையும் விளக்க முற்படுகிறது.

சங்க இலக்கியம், தொல்காப்பியம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு செய்யப்பட்டு பெறப்பட்ட குறிப்புகளின் அடிப்படையில் ஆராய்ந்து ஆய்வு முடிவுகள் முடிவுரையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

### முதன்மை ஆதாரம்

தொல்காப்பியப் பொருளதிகாரம். சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை நூல்கள், பத்துப்பாட்டு ஆகியவற்றின் உள்ள பிரிவுகள் பற்றியும் வாழ்க்கை முறைகள் ஆகியவை முதன்மை ஆதாரங்களாகும். இவை மேற்கோளின் அருகி லேயே நூல் பெயரும், பக்கமும் தரப்பட்டுள்ளன.

### துணைமை ஆதாரம்

ஆய்வு நூல்களில் சேகரிக்கப்பட்ட செய்திகள் தொடர்பான நூல்கள், கட்டுரைகள் மற்றும் தொடர்புடைய பிற நூல்களிலிருந்து பெறப்பட்ட செய்தி கள் அனைத்தும் துணைமைச் சான்றாதாரமாகும்.

இயல் ஒன்று

# இலக்கண நூல்களில் பிரிவுகள்

இலக்கண நூல்களில் பிரிவுகள் என்னும் இவ்வியல் தமிழ் இலக்கண நூல்களான தொல்காப்பியம், நம்பியகப் பொருள், இறையனார் அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களில் சொல்லப்பட்டுள்ள பிரிவுகளை வகைப்படுத்தி விளக்கி உள்ளது.

### பாலை பற்றிய பல்வேறு கருத்துக்கள்

தொல்காப்பியர் இயற்கையைக் கூர்ந்து உணர்ந்து சூழ்நிலைத் தாக்கத்தால், மண்ணின் தன்மை பாதிக்கப்படும் என்று அறிந்து, பாலை நிலம் என்ற நிலப்பாகுபாட்டைக் கொண்டுள்ளார் என அறிய முடிகின்றது. இன்றைய நிலவியலாளரும் இதே கருத்தை வெளியிட்டுள்ளனர். பாலைநிலம் எவ்வாறு தோன்றுகிறது என்பதை  உலகின் நிலப்பரப்பால் 113 பாகம் பாலைநிலம் அல்லது பாதி பாலை நிலச் சூழ்நிலைகளைக் கொண்டுள்ளன. இப்பிரிவுடன் துருவம், உபதுருவக் குளிர் பாலை நிலங்கள் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. பாலை நிலம் தோன்றுவதற்கு முக்கிய காரணமாக இருப்பது வறட்சியாகும் என்று கூறுவர்.

வளமுள்ள பகுதிகள் சூழ்நிலைக் காரணிகளால் பாதிப்புக்குள்ளாகிப் பாலை நிலங்களாகத் தோன்ற வாய்ப்புள்ளன. வளமான பகுதிகள் வளம்

குன்றிப் பாலை நிலமானதற்கு அறிவியல் பூர்வமான சான்றுகள் காணப்படு கின்றன.

''இளங்கோவடிகள் கூறியது போன்று உருவான பாலை வளம் உண்பு என்றும், அதற்கு இன்று (எ.கா) இராமேசுவரம் விளங்குகிறது என்றும் கூறுவர் சோமலே. இதை இராமநாதபுரம் மாவட்டத்தைப் பற்றிய அரசுப் பதிப்பேடும் உறுதி செய்கின்றது''[1] என்பர்.

தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றிய பண்டைத் தமிழ் அகப் பொருள் இலக்கண நூலான இறையனார் அகப்பொருள் விளக்கத்திலும் பாலைக்குத் தனி நிலம் கூறப்படவில்லை. அதன் பின்னர்த் தோன்றிய நம்பி யகப் பொருள் என்ற அகப்பொருள் இலக்கணத்தில் நிலப்பாகுபாடு 'ஈரைந் தாகக் கூறப்பட்டுள்ளது.

**களவு**

களவு என்பது காதலர் இருவர் தாமே அன்பு கொண்டு பிறர் அறியாமல் காதலிக்கும் ஒழுக்கம் என்கிறது தொல்காப்பியச் சிறப்பகராதி, மறைந்த ஒழுக்கம் என்று அவர் களவைக் கூறுவதைக் கொண்டு பெற்றோர்கள் காதலர்களாக ஒழுகுவது என்று ப.அருணாசலம் விளக்குகிறார்.

பிறர் அறியாதவாறு ஒழுகும் காதல் ஒழுக்கமே ஈண்டுக் களவு எனப்பட் டுள்ளது. மறை என்பதும் களவு என்பதும் ஒன்றே. எனவே பிறர் அறியாதவாறு ஒழுகும் காதல் ஒழுக்கமே ஈண்டுக் களவு எனக் கூறப்பட்டுள்ளது.

**காமக் கூட்டம் தனிமையிற் பொலிதலின்**
**தாமே தூதாவ ஆதலும் உரித்தே** *(தொல். கள. 1065)*

*களவியல் நூற்பாவில் இச்சொல்லைக் கையாண்டுள்ளார் தொல்காப் பியர் காமத்திணையின் கண்ணின்று உரூஉம் (108) நூற்பாவில் காமத்திணை எனவும் கூறியுள்ளார்.*

***இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு***
***அன்போடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்***
***காமக்கூட்டம் காணுங்காலை*** *(தொல். கள. 1038)*

*எனும் களவியலின் முதல் நூற்பாவில் காமக்கூட்டம் (92) எனப்படும். களவை வேதம் கூறும் பிரமம் முதலான மணங்கள் எட்டினுள் கந்தருவத்தோடு ஒப் புமைப்படுத்திக் கூறியுள்ளார் தொல்காப்பியர். ஆடவன் மேற்கொள்ளக்கூடிய எல்லாவிதமான போராட்டங்களும் முயற்சிகளும் அதன் பயனும் புற வாழ்க்கை என்றே கருதப்படுகின்றன.*

களவுப்பிரிவு

*1. ஒருவழித்தணத்தல்*

*2. வரைவிடை வைத்து பொருள்வயின்பிரிதல் என இரண்டு வகைப் படும். களவு என்பதற்கு இருமுது குரவர் கொடையெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவரும் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலின் இது பிறர்க்குரிய பொருளை மறைவிற் கொள்ளும் களவன்றா யிற்று. இது வேதத்தை மறைநூல் என்றாற்போலக் கொள்க என விளக்கம் தருகின்றார் நச்சினார்க்கினியர்.*

*பிறர் பொருளை அவர் அறியாமல் எடுத்துக் கொள்ளும் களவு (திருட்டு) என்பதைப் போலன்றி மனமொத்த இருவரும் தம்தம் தாய் தந்தையர் அறியாத படி மறைந்து நடக்கும் நடத்தை என்பதால் இது களவு எனப்பட்டது என்கிறார் நச்சினார்க்கினியர்.*

மறைந்த ஒழுக்கம் என்று அவர் களவைக் கூறுவதைக் கொண்டு பெற்றோர்கள் அறியாமல் காதலர்களாக ஒழுகுவது என்று ப. அருணாசலம் விளக்குகிறார். கந்தருவமானது கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தது போல தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது என்பது நச்சினார்க்கினியரின் விளக்கம்.

பிறர் அறியாது மறைந்து ஒழுகும் ஒழுக்கம் என்பதை

**வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**

**ஆயிரண் டென்ப வரைதல் ஆறே** *(தொல். கள. 1086)*

எனும் நூற்பாவில் வெளிப்படுத்தியுள்ளார்.

களவு இருவேறு நிலைகளில் திருமணமாக மாறும் என்பதை இங்கு குறிப்பிடுகின்றார். களவு வெளிப்பட்டபின் வரைதல், களவு வெளிப்படா முன் வரைதல் என்பவையாகும். இங்கு ஆளப்பட்டுள்ள வெளிப்படுதல் வெளிப் படையாமை என்ற சொற்கள் களவு பிறர் அறியாத ஒழுக்கம் என்பதை வெளிப் படுத்துகின்றன.

**வெளிப்படை தானே கற்பினோடு ஒப்பினும்**

**ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக**

**வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை** *(தொல். கள. 1087)*

என்று வெளிப்பட வரைதல் கற்பினோடு ஒத்தது என்றாலும் எனக் குறிப்பிடும் குறிப்பு களவு, கற்பு எனும் இரண்டின் வழிவந்த திருமணத்தையும் வேறு படுத்திக் காட்டும் இயல்பினாக உள்ளன. கற்பியலில் பெற்றோர் கொடுக்கக் கொள்வதே கற்பு எனப்பட்டுள்ளது. தாமே கூடி வரைந்து கொள்ளும் களவு வழிப்பட்ட மணமுறை ஒத்தது அல்ல எனக் கூறப்பட்டுள்ளது. மறையோர் தேயத்து மன்றலுடன் இணைத்துப் பேசப் பெறும் களவு பற்றிய முதல் நூற்பா

குறித்தும் களவு பற்றிய இந்நூற்பா பிறிதோர் உண்மையினையும் புலப்படுத்து கிறது. அந்நாளைய அறிஞர் உலகம் வைதீக மனங்களைப் பற்றிய தெளிவான அறிவைப் பெற்றிருந்தது. அவற்றை ஏற்றுப் பாராட்டவும் செய்தது என்பதே அவ்வுண்மை.

களவு என்பது தனித்தன்மை வாய்ந்ததாகக் கற்பு எனப்படும் கைகோளோடு வைத்துக் கருதப்படாததாக இருந்ததைத் தொல்காப்பிய இயல் பகுப்பே தெளிவுப்படுத்துகிறது. வெளிப்படை கற்போடு ஒத்தது என்றாலும் தொல்காப்பியரும் வெளிப்படுத்துகிறார். களவின் வழிவந்த கற்பு, களவின் வழிவாராக் கற்பு எனும் இரண்டும் வேறுவேறு என்பதைக் கற்பியலிலும் தொல்காப்பியர் வெளிப்படுத்தியுள்ளார்.

**கொடுப்போர் இன்றியும் காரணம் உண்டே**
***புணர்ந்து உடன் போகிய காலையான*** *(தொல். கற். 1089)*

இவை உடன்போக்குத் திருமணம் பற்றியது. காமக்கூட்டம் களவுக் காதலர்களாகிய தலைவனும் தலைவியும் உடன்போக்கை மேற்கொண்டு மணம் செய்து கொண்டாலும் அங்கும் பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்த கரணம் உண்டு என்பதை இந்நூற்பா தெளிவுபடுத்துகிறது.

பெற்றோர் உடன்படாத நிலையில் உடன் போய் மணந்து கொள்வதைப் பெற்றோர் கொடுப்பக் கொண்டு மணத்தலோடு ஒன்றாய் கருதாத நிலையை நச்சினார்க்கினியரின் விளக்கம் வலுப்படுத்துகிறது.

களவியலில் இடம்பெறும்,

***பாங்கன் நிமித்தம் பன்னிரண்டு என்ப*** *(தொல். 1050)*

**முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே**

**பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே** *(தொல். கள. 1050)*

**முதலோடு புணர்ந்த யாழோர் மேன**

**தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே** *(தொல். கள. 1051)*

*முதலாவது நூற்பாவில் சுட்டப் பெறும் பன்னிரெண்டும் பிரமம், பிரசா பத்தியம், ஆரிடம், தெய்வம் எனவும் குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என வும் அசுரம், இராக்கதம், பேய் எனப் பன்னிரண்டாகும். இந்த பன்னிரண்டில் அடங்கும் எண்வகை மணமுறைகளும் அடுத்த நூற்பாவில் பாகுபடுத்தி உரைக் கப்பட்டுள்ளன. காந்தருவம் எனப்படும் களவு மணமே குறிஞ்சி முதலான ஐந்தாகக் கூறப்பட்டுள்ளது. ஐந்து எஞ்சிய ஏழொடும் கூட்டிப் பன்னிரெண் டாகச் சொல்லலாம். யாழோர் கூட்டம் எனப்படும் கந்தருவ மணமுறையை நிலந்தோறும் விரித்து ஐந்தாகக் கூறும் நச்சினார்க்கினியர் யாழோர் கூட்ட செந்திணையை இரண்டாகப் பகுத்து யாழோர் கூட்டத்து ஐந்திணையை முதல் கரு உரியுடன் பெயர் சுட்டாமல் முறை சிறந்து வருவது, பெயர் சுட்டி வருவது என இரண்டாய் வகைப்படுத்திக் காட்டியுள்ளார்.*

*பின்னே வரும் இரண்டு நூற்பாக்களில் முதலாவது எண் வகை மனத்தில் முன் நின்ற அசுரம், இராக்கதம், பைசாசம் மூன்றும் கைக்கிளை பின்னே வருகின்ற பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம் தெய்வம் எனும் நான்கும் பெருந் திணை என எண் வகை மணத்தில் கந்தருவம் ஒழிந்தவற்றைக் கைக்கிளை பெருந்திணைகளுக்கு வகுத்துக் கூறப்படுகிறது. அகத்திணையியலுள் கூறப் படும் கைக்கிளை பெருந்திணைகள் எண் வகை மணப்பாகுபாடுகளை உடை யனவாகக் குறிப்பிடப்படும் களவியலைக் கைக்கிளை பெருந்திணைகளோடு இணைத்துக் கூறாமல் வேறுபடக் கருதி இரண்டையும் வெவ்வேறாகக் காட்டி யுள்ளார்.*[2]

பின் நின்ற இரண்டாவது நூற்பா கந்தருவம் எனப்படும். களவு குறிஞ்சி முதலான ஐந்திணையிலும் வரும் குறிஞ்சிக் களவு முல்லை களவு என்றாற் போன்று களவு ஐந்திணையிலும் வரும் என்பதே கருத்தாகும். இங்கு கந்தருவம் இரண்டாக முதல் கந்தருவம் ஐந்துமேயன்றி அவற்றோடு பொருத்தமுடைய கந்தருவமும் ஐவகைத்தாமென வேறுபடுத்தினார்.

இளம்பூரணர் பாங்கன் நிமித்தம் பன்னிரண்டு என்பதற்குப் பிரமம் முதலிய நான்கும் கந்தருவப் பகுதியாகிய களவும் உடன்போக்கும் அதன்கண் கற்பின் முதலாகிய மூன்றுமென இவை கூறியுள்ளார்.

### உடன்போக்கிற்குக் காரணம்

தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த அன்னை இல்லில் சிறை வைத்தாலும் வெறியயர்ந்தாலும் நொது மலர் வரைவு வந்தாலும் அறத்தொடு நிற்றல் நடைபெறும். அன்னை முதலில் கோபம் கொண்டாலும், அதற்கு உடன்பட்டுத் தன் மகள் கற்பு நெறியில் வழுவாதபடி நினைத்தவனுக்கே மணமுடித்துக் கொடுப்பது சிறந்தது என்று தீர்மானித்துத் தந்தையிடமும் மகன்களிடமும் தெரிவித்து வதுவையாகும்படிச் செய்கின்றாள்.

### உடன்போக்கு களவா? கற்பா?

பெற்றோரை விட்டு அவர் அறியாமல் செல்வதால் களவு என்பதா? தலைவனும் தலைவியும் சேர்ந்து உடன் செல்வதால் கற்பு என்பதா என்ற வினாத் தோன்றும்.

களவிலும் கற்பிலும் கூறுவதற்கு இயைபு இல்லாத இவ்வுடன்போக் கைப் பிரிதல் அதிகாரத் தொடர்பு எண்ணித் தொல்காப்பியர் அகத்திணையிய லில் அமைத்தார். நாற்கவிராச நம்பி இக்கலை உணர்ந்தே உடன்போக்கைக்

*களவியலிலும் கற்பியலிலும் கூறாமல் வரைவியல் என்ற பகுதியில் ஆக்கி அதன் கண் அமைத்தனர்.*

*வரைவு என்பது திருமணத்திற்கு முன் செல்லும் உறுதிப்பாடு என்பதால் உடன்போக்கும் களவுக்கும் கற்புக்கும் இடையிலான ஒரு நிலையாகவே உள் ளதா என்பதும் எண்ணிப் பார்க்கத்தக்கது. மேற்படி நூற்பாவைத் தொல்காப் பியர் கற்பியலில் பேசியிருப்பதாலும் இதை ஒருவகைத் திருமணமாக ஏற்றுக் கொள்வதாலும் இதைக் கற்பு சார்ந்ததாகவே கருதலாம்.*

***அம்பலும் அலரும் களவுவெ ளிப் படுத்தலின்***
***அங்கு அதன் முதல்வன் கிழவனாகும்*** *(தொல். கள. 1085)*

*என அம்பல் அலர் களவை வெளிப்படுத்தும் கருவிகளாகக் காட்டப்பட்டுள் ளன.*

***பட்ட பின்றை வரையாக் கிழவன்***
***நெட்டிடை கிழிந்த பொருள்வயின் பிரிதல்***
***பொருள்வயின் பிரியா தொருவழித் தணத்தலும்***
***புரைவ தென்ப கற்பால் ஆன*** *(இறையனார் களவியல் - 25)*

*களவு வெளிப்பட்ட பின்னர் விரைந்து அடையாத தலைமகன் பொருள் காரணமாகப் பிரியும் பிரிவும். பொருள் காரணமாக பிரியாது ஓரிடத்தில் இருந்தாலும், கற்புக் காலத்தில் பொருந்தும் என்பர். களவு வெளிப்பட்டதைத் தலைமகனின் மனையோர் அறத்தொடு நிலை நின்றமையைத் தலைமகன் எங் ஙனம் அறிதல் கூடும் என வினவலாம். தோழியினால் உணர்த்தப்பட்டு அறி வான்.*

*இப்பிரிவுகள் இரண்டும் வரைவிற்கு வரும் இடையீடுகளாகும். இவ் விரண்டு இடையீட்டின் போதும் தலைமகன் ஆற்றாகி நிற்க அப்பொழுது தோழி அவனை ஆற்றுவித்தலும் அதனெதிர் மொழிதலும் பிறவும் எல்லாம் கற்பிபோடு ஏற்கப்படும். இப்பிரிவு தலைமகன் அறியவே நிகழும். தோழிக் கும் தலைவிக்கும் உணர்த்தி பிரிவான். அவ்வாறு அறிந்திருந்தும் தலைவன் அற்றாகி நிற்க அப்பொழுது தோழி அவனை ஆற்றுவித்தலும் அதனெதிர் மொழிதலும் பிறவும் எல்லாம் கற்பினோடு ஏற்கப்படும். அவன் செல்லுகின்ற கானகத்தின் தன்மையை நோக்கி அவனுக்காகக் காவல் கொண்டு ஆற்றாகி நிற்பாள் தலைவி.*

**வெளிப்படை தானே விரிக்கும் காலைத்**
**தந்தை தானே தன்னையர் என்றாங்கு**
**அன்னவர் அறியப் பண்பாகும்மே** *(இறை. 26)*

*களவு வெளிப்படலை விரிக்கும்பொழுது தலைமகனின் தந்தை, தாய், தமையன் ஆகியோர் அவ்வொழுக்கத்தை அறியப்படும் பண்பாகும்.* [3]

*யாவரும் அறியப்படாத நிலையை உடையது களவு, அது யாவரும் அறிய வெளிப்படுதல் வெளிப்படை எனப்படும். ஊரில் பலரும் அறிந்த பொழுது அலர் எனப்பட்டது. வெளிப்பட்ட காலத்தும் தலைமகன் அறம் அறியாமல் நின்றால் அறத் தோடு நிலை எனக் கொள்ளப்பட்டது.*

*நம்பியகப் பொருளில் கூறுவது தலைவன் தன் ஊருக்குச் செல்வதைத் தோழியிடம் கூறுதல். அதற்குத் தோழி ஏற்றுக் கொள்ளவில்லை. தலைவனைத் தோழி சென்று வரக் கூறுதல், அதனை ஏற்றுக் கொண்டு தலைவன் தன் ஊருக்குச் செல்லுதல், தலைவனைப் பிரிந்த தலைவி கலங்குதல், தலைவிக்குத்*

*தோழி ஆறுதல் கூறுதல் ஆகிய இவை அனைத்தும் ஒருவழித் தணத்திலின் வகைகளாகும்.*

***செலவு அறிவுறுத்தல் செலவு உடன்படாமை***
***செலவு உடன்படுத்தல் செலவு உடன்படுதல்***
***சென்றுழிக் கலங்கல் தோழி ஆற்றுவித்தல்*** *(நம். 167)*

*என்ற பாடலில் உணர்த்துகிறார்.*

***வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல்***
***களவில் தலைவன் கூற்று***

*களவின்ப வேட்கை என்பது தலைவனுக்கும் தலைவிக்கும் பொதுவாக அமைந்துள்ளமையைச் சங்க அகப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. அகத் திணையில் பேசப் பெறும் களவுத் தலைவன் களவில் இன்பம் புணர்வு வேட்டையின் தலைவன் வெறியாட்டு, வேற்று வரைவு ஆகியவற்றை ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை. வழிநெறி அச்சமோ, சமுதாயக் கட்டுப்பாடு குறித்த அச்சமோ அவனது களவுப் புணர்ச்சி வேட்கையை மாற்றுவதில்லை. மாறாக பூரண இன்பத்தைக் களவுக் காலத்தில் துய்க்க அவன் உள்ளம் விழை கின்றது.*

***இருவகைக் குறி பிழைப்பாகிய இடத்தும்***
***காணா வகையில் பொழுதுநனி இகப்பினும்***
***.........................................................***
***கிழவோன் மேன என்மனார் புலவர்*** *(தொல்.கள.1053)*

*பகற்குறி, இரவுக்குறி, இரண்டும் தவறியபோதும் தலைவியைக் காணாது காலங்கடக்கும்போதும் தலைவன் குறியிடத்தற்குத் தவறாது செல் வதில் தவறமாட்டான். அவனைக் காணச் சென்று காணாது, காம வேட்கையில்*

செயற்ற பொழுதும், உணவுண்ணும் நேரமாகிய சமயத்தில் புகுந்து அவரால் நீங்கப்படாத விருந்தினையாகிய போதும், விருந்து புறந்தருளும் இல்லறத்தை விரும்பியும், தலைவன் பொருள் முயற்சிக்காகப் பிரியும் போதும், தலைவிக்கு நாணத்தால் மனம் அலைவதைப் பார்த்து அவளைப் போகுமாறு விடுத்தற் கண்ணும், திருமணம் நிகழ்த்துவதற்காகத் தோழி கூறும் குற்றமற்ற கூற்றை ஏற்ற பொழுதும், வரைவுக்கு உடன்படுமிடத்து அதனைத் தவிர்த்துக் குற்ற முண்டாகத் திருமணத்தை மறுத்தலும் ஆகியன தலைவன் கூற்றுகளாகும்.

### களவில் தலைவியின் கூற்று

களவில் தலைவி தனக்கேயுரிய அச்சமும், நாணமும், மடனும் நிரம்பப் பெற்றவள். தலைவனோடு கொண்ட காதலால் புணர்வு வேட்கையும் களவு பற்றிய ஊராரின் புற மொழியால் வரைவு வேட்கையும் கொண்டவள். அலர், வெ றியாட்டு, இற்செறிப்பு, தலைவனின் ஆற்றாமை போன்ற துன்பமான சூழல்களுக்கு அஞ்சுபவள்.

> ***மறைந்து அவன்காண்டல், தன்காட்டுறுதல்***
> ***நிறைந்த காதலில் சொல் எதிர் மழங்கல்*** *(தொல்.கள. 1057)*

தான் மறைந்து நின்று தலைவனைப் பார்த்தல், தன்னை அவன் பார்க்கு மாறு நிற்றல், பதில் கூறாது மழங்குதல், தலைவன் கொள்வது போல் வேட்கை யுடன் நெருங்குவதை மறுத்தல், பின்பு ஏற்று எதிர்கொள்ளுதல், சிறிது புன் னகைத்தல் இவை ஆறும் புணர்ச்சிக்கு முன் நிகழும் மெய்ப்பாடுகள்.

### தலைவனைத் திருமணத்திற்குத் தூண்டுவன

தலைவன் வரும் வழியிடை நேரும் ஆபத்தை அறிவுறுத்திக் கலங்குதல், பெற்றோர் இற்செறிக்கும் கடுமையால் கையற்று வருந்துதல், குறியிடமும் நேரமும் குறித்ததைக் காப்பு மிகுதியால் விலக்கித் தலைவியது காதல் மிகுதி

யைக் கூறலும் நாடும் ஊரும் வீடும் குடியும் பிறப்பும் சிறப்பும் ஆகியன பற்றி மிக விரிவாகத் தலைவனிடம் கூறி திருமணத்திற்குத் தூண்டுவாள்.

அறத்தோடு நிற்றல்

தோழி தலைமகனை வரைந்து கொள்ளுமாறு பலவிதமாக வேண்டியும் அவன் செய்யாது களவொழுக்கத்தையே நோக்கமுடையவனாக இருப்பான். இந்நிலையில் தலைவிக்கு ஆற்றாமை மிக்க ஏதம் பலவாக வரல் கூடும். தோழி இனி இக்களவினை உறவினருக்கு வெளிப்படச் செய்து அவரால் குறித்த தலைவனுக்கே கொடுக்கச் செய்தல் தக்கது என்று நினைத்து அவர்களுக்குக் களவொழுக்கத்தை மெல்ல வெளிப்படுத்தத் தொடங்குவாள். இதனையே அறத்தோடு நிற்றல் என்று கூறுவர். அறம் என்பது இங்கு முறை தக்கது என்ற பொருளில் அமையும். சில சமயம் அம்பலும் அலரும் களவு வெளிப்படுத்தற்குக் காரணங்களாய் அமையும்.

**அம்பலும் அலரும் களவு வெ ளிப்படுத்தலின்**
**அங்கு அதன் முதல்வன் கிழவனாகும்** *(தொல். கள. 1085)*

இந்த இரண்டிற்கும் தலைவனே காரணம் என்று கூறுவர்.

நம்பியகப் பொருளில் சொல்லப்படுவது மணம் உறுதியான பிறகு அத்திருமணச் செலவுக்கு வேண்டிய பொருள் கொண்டுவரத் தலைவன் தன்னூர்க்குச் செல்வான். இது வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல் எனப்படும். மணத்தின்முன் பொருளுக்காகத் தலைவியைப் பிரிந்து செல்வதெல்லாம் பொருள் பிரிவு எனப்படும். தலைவன் பொருள் கொண்டு வந்ததும் திருமணம் நடைபெறும்.

***வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவோர்***
***இருதுவின் கண்ணுடைத்து என் மனார் புலவர்*** *(நம். 41)*

*வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல் இரண்டு திங்களைக் கொண்ட ஒரு பருவத்திற்கு உட்பட்ட வரையறையை (59 நாட்கள்) உடைய தெனச் சொல்லுவர்.*

***என் பொருள் பிரிவு உணர்ந்து ஏந்திழைக்கு என்றலும்***
***நின் பொருள் பிரிவுரை நீ அவட்கு என்றலும்*** *(நம். 170)*

*தலைவன் பொருள்வயின் பிரிவு மேற்கொள்வதைத் தலைவியிடம் போய் கூறுமாறு பாங்கியிடம் தலைவன் கூறுகின்றான். தலைவியிடம் நீ போய் கூறுக எனத் தலைவனிடம் தோழி மறுமொழி கூறுகின்றான். காலம் நீட்டிக் காமல் விரைவில் திரும்பி வந்துவிடுவேன் என்று தலைவன் பாங்கியிடம் கூறு கின்றான். பாங்கி தலைவன் பிரிந்து சென்றதைத் தலைவிக்கு உணர்த்துதல், அந்தப் பிரிவை கேட்டுத் தலைவி வருந்துவாள், எதற்காக வருத்தம் அடை கின்றார் எனத் தோழி வினவினால் கவலை வேண்டாம் என்று தலைவரை வற்புறுத்துவாள். தலைவன் கார் பருவத்தைக் கண்டு தலைவி புலம்புகிறாள். இது கார்காலம் இல்லை என்று தோழி தலைவியைத் தேற்றுதல், தலைவி தோழியின் சொல்லைக் கேட்கவில்லை. இது கார் பருவம் தான் என்று கூறு கிறாள். கார்காலம் தலைவனின் வருகையைச் சொல்லும் தூதாக வந்தது எனத் தோழி கூற, அதைக் கேட்டு தலைவி பொறுமையாக இருந்தாள்.*

*பொருள் ஈட்டச் சென்ற தலைவன் அச்செயலை முடித்து தலைவியை நினைத்துப் புலம்புகின்றாள். மீண்டும் வருகின்ற தலைவன் விரைவாகத் தேரை ஓட்டும்படி பாகனிடம் கூறுகிறான். தலைவன் வரும் வழியில் மேகத்*

தைப் பார்த்து தலைவன் வருகிறான் என்று கூறுதல், வலம்புரிச் சங்கின் ஓசையைக் கேட்டுத் தலைவன் வரைவைப் பாங்கி தலைவிக்குத் தெரிவித்தல், தலைவன் வரைவை உணர்த்திய வலம்புரிச் சங்கைத் தலைவி வாழ்த்துதல், தலைவனிடம் தலைவி தாங்கள் வந்ததையும், பிரிந்தவிடத்தும் எம்மை அதற்குத் தலைவன் நினைத்து இருந்ததைத் தலைவன் கூறுகிறான். பிரிந்து இருந்த தலைவியை ஆற்றி இருக்கச் செய்த தோழி தலைவனிடம் கூறுதல், இவை அனைத்தும் பொருள்வயின் விரியாகும். [4]

கற்பு

தொல்காப்பியர் காலத்தில் ஆண், பெண் சேர்ந்து இல்வாழ்க்கை நடத்துதல் களவொழுக்கம் தொடங்கியே நடைபெற்றது என்று எண்ண வேண்டியிருக்கின்றது. தலைவன் தலைவியிடையே பொய்ச் சொல்லும் வழுவிய செயலும் ஏற்பட்ட பின்னரே சடங்கு என்னும் கட்டுப்பாட்டைக் குலத் தலைவர்கள் ஏற்படுத்தினர். இதனைத் தொல்காப்பியர்,

**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் காரணம் என்ப** (கற். 1091)

என்று கூறுகின்றார். [5]

தொல்காப்பியர் காலத்திலேயே பொய்யும் புனைவும் தோன்றிவிட்டன என்பது பெறப்படுகிறது. பொய்யாவது செய்த ஒன்றினைச் செய்திலேன் என்பதாகும்.

ஒருவனுக்கு ஒருத்தி என வாழும் பெண்ணின் மனப்பாங்கு என தொல்காப்பியர் கற்பியல் முதல் நூற்பாவில்,

**கற்பு எனப் படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபில் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே** *(கற். 1088)*

என்பார்.

பெண்ணைக் கொடுக்கும் இயல்பினை உடையவராகிய தாயும் தந்தையும் சடங்கோடு பொருந்திய நிலையில் பெண்ணைக் கொடையாகக் கொடுக்கும் இயல்பினை உடைய தலைவனுக்குத் தலைவியைக் கொடுப்பது கற்பு எனக் குறிப்பிட்டுள்ளது.

பாலையொழுக்கமாகிய பிரிவு

1. ஓதற்பிரிவு
2. பகைப்பிரிவு
3. துணைப்பிரிவு
4. தூதிற் பிரிவு
5. காவற்பிரிவு
6. பொருட்பிரிவு
7. வரைவிடைப் பொருட்பிரிவு
8. இட்டுப் பிரிவு
9. பரத்தையிற் பிரிவு

என ஒன்பது வகைப்படும்.

வரைவிடைப்பிரிவு, இட்டுப்பிரிவு - களவிற்கே உரியவை ஓதற்பிரிவு, பகைப்பிரிவு, தூதிற்பிரிவு, பரததையின் பிரிவு - கற்பிற்கே உரியவை துணைப் பிரிவு, காவற்பிரிவு, பொருட்பிரிவு - களவு, கற்பு இரண்டிற்கும் உரியவை.

1. ஓதற்பிரிவு

ஓதல் பிரிவானது - அயல் நாடுகளுக்குச் சென்று அந்நாட்டுப் பழக்க வழக்கங்களைக் கற்றுவரத் தலைவன் தலைவியைப் பிரிதல், வேற்று நாட்டுக் குச் சென்று அந்நாட்டு மொழியை ஒருவாறு பேசிப் பழகி, அந்நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களையும், கலை நுட்பங்களையும் தொழில் நுணுக்கங்களை யும், வாணிக இயல்பையும், அரசியல் முறையையும் நாகரிக நல்வாழ்வையும் கற்றுத் தெரிந்து வருவர் என்பர். [6]

**ஓதல் பகையே தூது இவை பிரிவே** (தொல். 971)

என்று தொல்காப்பியம் கூறுகிறது. காதல் வாழ்விலும் இல்லற வாழ்விலும் காதலர்களுக்கு இடையே ஏற்படும் பிரிவுகள் அவர்களுக்கு இன்பத்தை அதிக மாக்குவதாகவே அமையும். தலைவன் வெளிநாட்டிற்குக் கல்வி கற்கச் செல்வ தால் அப்போது இருவருக்கும் பிரிவு ஏற்படும். அரசன் ஆணையால் பகை மன்னர் நாட்டுக்குப் படையெடுத்துச் செல்வதும் பிரிவு என்று கருதப்படும். வேற்று நாட்டு வேந்தனின் தூதுவனாகச் செல்வதாலும் பிரிவு ஏற்படும்.

**அவற்றுள்**

**ஓதலும் தூதும் உயர்ந்தோர்மேன** (தொல்.கற். 972)

ஓதல் என்பது கல்வி கற்றல், தூது என்பது தூதாகச் செல்லுதல் ஓதல், தூது காரணமாக பிரிந்து செல்லும் பிரிவுகள், ஐவகை நிலத்திலும் வாழும் மக்களால் உயர்ந்தோராகக் கருதப்படும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நான்கு பிரிவினருக்கும் உரியவாகும்.

ஓதற் பிரிவின் கால அளவு மூன்றாண்டைக் கடந்து செல்லக் கூடாது. (கற்-47) மூன்றாண்டுக்கு உட்பட்டே நிகழும். வெளிநாடுகளுக்குக் கடல் கடந்து போய் அங்குள்ள நாடுகளைச் சுற்றிப் பார்த்து, அந்நாட்டு நாகரிகச் சிறப்

பினைத் தெரிந்து கொண்டு வரவேண்டுமானால் ஓதற்பிரிவுக்கு ஓராண்டிற்கு மேல் ஆகும்.

''இன்று மக்களில் செல்வம் மிக்கவரும் அறிஞரும், அரசியல் தலை வரும் ஐரோப்பா, அமெரிக்கா, உரசை(ரஷ்யா) சீனா முதலிய வெளிநாடுகளில் சுற்றுப்பயணம் செய்து அந்நாட்டு கலை, தொழில், நாகரிகம் முதலியவற்றின் நுட்பங்களைக் கற்றறிந்து வருவது போல அன்றும் கடல் கடந்து மேல்நாடு கீழ் நாடுகளுக்குச் சென்று அந்நாடுகளில் கற்றுத் தெரிந்து வந்தனர். நம் முதியோர் என்பது அந்தக் காலத்தில் அரேபியா, கிரேக்கம், எகிப்து, உரோம் முதலிய மேல்நாடுகளுடனும், கீழ்நாடுகளுடனும் தமிழ்நாடு நடத்தி வந்த கடல் வாணி கமே''[7] இதற்குச் சான்றாகும்.

கல்வியின் பொருட்டுத் தலைவன் பிரிவான் என்பதனைத் தலைவன் அது காறும் கல்வி கற்றிலன் என்று கருத வேண்டியது இல்லை. இதற்கு முன்னே அவன் நல்லாசிரியனை அடைந்து, அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு குறிக்கொள் பொருள்களை உணர்த்தும் நூல்களை முறைப்படிக் கற்றவன், எவ்வளவுதான் கற்றாலும் கல்வி கரையில ''கற்றது கைமண் அளவு கல்லாதது உலகளவு''[8] என்று சான்றோர் கூறியுள்ளனர். பல பட்டங்களைப் பெற்று ஆராய்ச்சித்திறன் மிக்க அறிஞர்கள் வெ ளிநாடு சென்று பல அறிவியல் துறைகளிலும் தொழில்நுட்பத் துறைகளிலும் மேலும் கற்று வருகின்றனர். ஓதற்பிரிவு என்பதற்கு இளம்பூரணார். 'நமது நாட்டகத்து வழங்காது பிற நாட்ட கத்து வழங்கும் நூல் உளவன்றே அவற்றினைக் கற்றல் வேண்டிப் பிரிதல்' என்று கூறியிருத்தல் இன்று வெ ளிநாடுகளுக்குச் சென்று கல்வி பெறும் வழக் கத்தை நினைவுபடுத்துகிறது.[9] இவ்வாறு நாள்தோறும் அறியாமையைக் காட்ட வல்ல ஒப்பற்ற கல்விச் செல்வத்தைப் பெறச் செல்வோரை, பரணர் என்ற சங்கப் புலவர்,

**கைதொழ மரபில் கடவுள் சான்ற**

**செய்வினை மருங்கற் சென்றோன்**

என்று குறிப்பிடுகிறார். கடவுள் சான்ற செய்வினை என்பது ஓதற்பிரிவினை உணர்த்துகின்றது.

**தலைவனுக்குக் கூற்று நிகழும் இடங்கள்**

நூல் கல்வி கற்பதற்காகப் பிரிந்து செல்லும் பொழுதும் தொழில் கல்வி யாகிய படைக்கலம் எடுத்துப் பயிலுதல் முதலான போர்க்கல்வியின் பொழு தும், சிற்பம் கற்றல் முதலிய கலைக்கல்விக்காகவும் நாட்டினைப் பாதுகாத்து நிற்றல் ஊரினைக் காத்து நிற்றல் ஆகிய அறங்காவல் காரணமாகப் பிரிந்து செல்லும் பொழுதும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

காவல், தூது, போர், பொருள் கருதியும் பரத்தையை நயத்தும் பிரிவும் பிரிவினும் ஓதற்பிரிவு சிறப்புடையதாதலின் இது பண்டைய நூல்களில் முதற் கண் வைக்கப் பெற்றுள்ளது. இப்பிரிவு பெரும்பாலும் பார்ப்பனர்க்குரிய தாகும்.

இவ்வோதல் பிரிவின் நிகழ்ச்சி முறையைப் பார்ப்போம். காதல் மனை யாளுடன் முறையின் இல்வாழ்ந்து இன்பத் துய்த்து நின்ற தலைவன் காமத்தே காலங்கழித்தல் அறிவுடைமையாகாதென்று வெளியூர் சென்று மேலோரை யுற்று, கற்றும் கேட்டும் தன் கல்வியை முற்றுவிக்கும் கருத்துடையனானான் என்னதற்குப் பிரிவு அவசியமாகின்றது. தன் கருத்தைத் தன் மனைவிக்கு வெளிப்படையாகக் கூறத் துணியாத தலைவன், கல்வியின் மேம்பாட்டையும் மாந்தரானோர் முற்றக் கற்க வேண்டிய அவசியத்தையும் எடுத்துரைக்கும் முகத்தான், தன் கருத்தைக் குறிப்பால் உணர்த்துவான்.

பரத்தை, ஓதல், காவல், தூது பொருள் என்று பிரிவை, நாற்கவிராச நம்பி, தமது அகப்பொருள் விளக்க நூலில் வரிசைப்டுத்தியுள்ளார். மணிவாசகர் பாடிய திருக்கோவையாரில் ஓதற்பிரிவே முதற்கண் வைக்கப் பெற்றுள்ளது. அவன் போக்கும் குறிப்பை உணராத தலைவி ஐய கல்வியிலும் சிற்றுயிர்க்கு உற்றதுணை.

**குஞ்சி யழகுங் கொடுத்தானைக் கோட்டழகும்**
**மஞ்சள் அழகும் அழகல்ல – நெஞ்சத்து**
**நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையின்**
**கல்வி யழகே அழகு**

என்பதற்கு ஐயமுண்டோ? உமது கல்வியின் நலத்தையும் அறிவின் நுண்மை யையும் மகிழ்ந்த நான், உம்மோடு ஒக்கவுண்டு அனுபவித்ததற்குப் போதிய கல்வி எனக்கு இல்லாமை குறித்து நான் வருந்துவதுண்டு, ஏதோவொரு காரணத்தால் உமது அறிவுரை கேட்டு மகிழ்தலுக்கு இடையூறு நேரின் அதை நான் பெற்றேன் என்றான். தலைவியின் உரை தனது கருத்திற்கு முற்றிலும் மாறுபட்டதாய் இருக்கக் கண்டு, இனி

**பிரியாமையும் உயிரொன்றுவதும் யாயின் பெரிதும்**
**தரியாமையும் ஒருங்கே நின்று சாற்றினர் தையல் மெய்யின்**
**பிரியாமை செய்து நின்றொன்றில்லை பேரியல்**
**புரியாமையும் இதுவே. இனிமெண் நாம் புகழ்வதுவே**

என்று கூறிக் கொண்டு இசைந்தாள்.

தலைவியின் இசைவைப் பாங்கி அவனுக்கு அறிவிக்க அவனும், நல்ல தோர் நாளில் மீளும் பருவத்தைக் குறிப்பிட்டு அவளிடம் விடைப் பெற்றுச் சென்றான். தலைவனது பிரிவை ஆற்றுவித்த தலைவி அவன் குறித்த பருவம்

கடந்தும் வாராது போகவே. அவனுக்கு அயலூரில்யாது நிகழ்ந்ததோ என்று எண்ணி இரங்குவாள். யாழிசையும் 'மாலைக்காலமும், சந்திரனும், தென் றலும், அவனது ஞாபகத்தை மிகுவிக்க 'அவள் ஆற்றாது தவித்தலும், தோழி அவளை ஆற்றுவித்தலும் நிகழ்பவை[10] என்பர்.

### வாகைத்திணையின் இலக்கணம்

வாகை என்னும் புறத்திணை, பாலை என்னும் அகத்திணைக்குப் புற னாகப் பாடப்பெறும். உலகத்தில் வாழும் மக்கள் அனைவரும் குற்றமற்ற கொள்கையினைத் தத்தமக்கு உரிய அறிவு, ஆண்மை, பெருமை பற்றிய கூறு பாடுகளை மற்றவர்களைவிட மிகுதியாகப் பெற்று மேன்மை அடைதலே வாகையின் இலக்கணம் ஆகும். அதனால் வாகை என்பது வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பைப் போலப் போர்த்திணை அல்ல என்பது புலனாகும்.

**வாகைதானே பாலையது புறனே**
**தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**
**பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப** *(புறத். 1019)*

### அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்

பார்ப்பனர் என்போர் அந்தணர் ஆவர். அந்தணர் வாழ்வில் அறுவகைத் திறன்கள் சுட்டப்பெற்றன. அவை 1.ஓதல், 2. ஓதுவித்தல், 3. வேட்டல், 4. வேட் பித்தல், 5. ஈதல், 6. ஏற்றல் என்பன. இவ்வறுவகை ஒழுக்கத்தால் ஏனைய அந் தணரினின்று மேம்பட்டு உயர்தல் வாகை என்று கூறப்படும். இத்துறைகளில் வல்லவரான பிற இனத்தார்களிலிருந்து உயர்வடைதலும் வாகைத் திணையின் துறையாகக் கொள்ளப்பெறும் அந்தணர் என்பவர்கள் ஓதுவதற்குரிய வேத நூல்களையும் கலைகளையும் சாத்திரங்களையும் குறைவறப் பயிலுதல் ஓதல். அந்தணர்கள் தாம் ஓதியவற்றைப் பிறர்க்குப் பொருள் பெற்றுக் கொண்டு சொல்லிக் கொடுத்தல் ஓதுவித்தல் என்று கூறப்படும்.

மறை விதித்துள்ள வேள்விகளை அவர்கள் தவறாது செய்வதை வேட்டல் எனலாம்.

பார்ப்பனர்கள் மறைவிதித்த வேள்விகளைப் பிறரைப் புரியச் செய்தல் வேட்பித்தல் எனப்படும்.

அந்தணர்கள் தங்களிடம், வறுமையுற்று வந்து இறப்போர்க்கு இல்லை என்று கூறாது ஈகை புரிதல் ஈதல் என்று கூறப்படும். [11]

பார்ப்பனர்கள் வேள்விக்களம், அரசவை முதலிய இடங்களில் இயல் பாக ஈகை நிகழும்பொழுது அவற்றை விலக்காது ஏற்றுக் கொள்ளுதல் ஏற்றல் எனப்படும். இவ்வாறு ஆறு தொழில்களில் முனைந்து நிற்றலைப் பார்ப்பன ரின் திறனைக் குறிக்கும் என்றார் இளம்பூரணர். ஆறுவகைத் தொழில்களின் திறனை, அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம் எனக் குறித்துள்ளார் தொல்காப் பியர்.

பிறர் மூவருக்கும் மனைவியருடன் கடல் கடந்து கலத்திலேறிப் பிரிதல் இல்லை. பாசறைக்கும் மனைவியரை அழைத்துப் போகார். அவ்வாறு போனால் குற்றமாகும்.

மேலே கூறிய கல்வி (ஓதல்) முதலான ஐந்து பிரிவினும் தலைவன் பிரிந்து போதலும் உண்டு. போக நினைத்தவன் பிரியாது தங்குதலும் உண்டு. (அழங்கல் தங்கி விடுதல்) இல்லத்து அழங்கலும், இடைச்சுரத்தில் அழங் கலும், அதாவது போகாது திரும்புதலும் அவர்க்கு உண்டு. தலைவியையும் தன் மனத்தையும் தேற்றுதல் காரணமாகவே சில பொழுது போகாது தங்குவானே தவிர தலைவன் பிரியமாட்டான் என்பதில்லை.

*ஓதல் பிரிவு மூன்றாண்டு எல்லையினை உடையது. தூதிற் பிரிவும் அரசனுக்குத் துணையாய் உற்றுழி உதவி புரியவும் பொருள்வயின் பிரிவும் ஓர் ஆண்டு எல்லையை உடையது.*

***படைக்கலம் பயிறலும் பகடுபிற ஊர்தலும்***
***படைத்தொழில் அவர்க்கு என உரைத்திசினோரே** (நம். 71)*

*கல்வி காரணமாகப் பிரிந்த தலைமகன் வரவை, கார்ப்பருவத்தைக் கண்ட தலைவி புலம்புகின்றாள். பொதுவாக மக்கள் பிறப்பினர் எல்லாருக்கும் கல்வி இன்றியமையாத ஒன்றாகையால் ஓதல் யாவர்க்கும் பொதுவானதாகும். எளியார்க்கு ஒன்றாதலும் எடுத்த காரியத்தை முடிக்க இயலாதவர்க்கு உதவு தலும் எல்லார்க்கும் ஒத்த கடமையாகும். எனவே சொல்லாலும், பொருளா லும் உடலாலும் பிறர்க்கு உதவுதலும் எல்லாருக்கும் ஏற்ப முடிந்த பொதுத் தொழிலாகும். அரசர் குற்றம் செய்தோரை ஒறுத்தே மக்களைக் காக்க வேண் டும்.*

***யாணர்க் குழன் மொழி யென்செய்கு வேன் கல்வியெல்லை***
***காணப் பிரிந்தவர் காண்கில ராற்கடன் மெய்ந்து யெல்லாங் தஞ்சை***
***வாணற் கெதிர்ந்தவர் மங்கையர் போலுமென் வல்லுயிரின்***
***ஊணற்ப மென்னவெண்ணுவரு மெகமுருமுடனே***

*ஓதற்குப் பிரிந்த கார்ப்பருவம் கண்டு வருந்திய தலைவிக்குத் தோழி ஆறுதல் கூறுகின்றாள்.*

2. தூதிற்பிரிவு

*பகை கொண்ட இருவரை, அந்தப் பகை நீக்கி ஒன்று கூட்டப் பிரிதல். இது சந்து செய்தல் எனப்படும் சந்து உடன்பாடும் தூது, தூதிற்பிரிவு அந்தணர்*

அரசர்க்குப் பெரும்பான்மையும், வணிகர் வேளாளர்க்குச் சிறுபான்மையும் உரித்தாகும். இப்பிரிவால் பழந்தமிழர்கள் போர் வெற்றியைப் புகழ் வெற்றி யெனக் கருதாமல் போர் உண்டாகாமல் எவ்வளவு தடுக்க முடியுமோ அவ் வளவு தடுத்து, நாட்டில் அமைதி நிலவச் செய்து வந்தனர்.

ஓதல், பகை, தூது என்னும் இம்மூன்று பிரிவும் நாட்டு மக்களின் நல வுரிமையைப் பாதுகாக்கும் பொதுநலப் பிரிவாகும். வெளிநாடுகளுக்குச் சென்று கற்றறிந்தவற்றை அந்த நாட்டிற்கும் பயன்படச் செய்தலின் ஓதற்பிரி வும் பொதுநலத் தொண்டாயிற்று.

எளியவரும், அறிவுள்ளவரும் வெளிநாடுகளுக்குச் செல்லுதலும் அறி விலார் தூது சென்று உடன்பாடு செய்தலும் முடியாதாகையால் செல்வமும் அறிவுமுள்ள உயர்ந்தோரே ஓதல், தூது என்னும் இருவகைப் பிரிவுக்கும் உரியவராவர்.

இத்தன்மையால் அந்தணர் தூது உரைத்தமையும் அரசன் தூது உரைத் தமையும் பாரதக் கதை வழியும் அறியலாம். தருமன், உலூகன் என்பவனைத் திருதராட்டிரனிடத்துத் தூது அனுப்பியமையும், திருதராட்டிரன் சஞ்சயன் என்பவனைத் தருமன்பால் தூது அனுப்பியமையும், பின்னர்க் கண்ணபிரான் தருமனுக்காகத் தூது சென்றமையும் காணலாம். உயர்ந்தோர் செல்வமும் அறிவும் உள்ளவர். உயர்ந்தோர் என்பது பெரியோர் என்பது போலப் பெயர் குறித்து நின்றது. உயர்ந்தோர் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்போர் அரசியல் முறை, வணிக முறை, பயிர்த்தொழில் முறை இவற்றைக் கற்கவும் அந்தணர் இம்மூன்றையும் ஒழுங்காகக் கற்கவும் பிரிவு நேர்ந்தன.

தம் முன் கருத்து முரண்பாடு கொண்ட அரசர் இருவரையும் அவர் தம் பகை உணர்வு போகுமாறு நீங்கி அவர்களிடையே நட்பும், உறவும் வளர்ந்து

*சிறந்ததற்காகத் தூதாகச் செல்லுகின்ற இடத்திலும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.*

***வேதமாந்தர் வேந்தர் என்று இருவர்க்கும்***
***தூதுபோதல் தொழில் உரித்து ஆகும்*** *(நம். 75)*

*தூது போகின்ற தொழில் அந்தணர், அரசர் ஆகிய இருவருக்கும் உரிய தாகும். அரசர் தூதராகச் சென்றதைக் கண்ணனின் தூதால் அறிய முடிகிறது.* [12]

***மடந்தாழ நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்***
***கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசைவும் போற்றப்***
***படர்ந்து ஆ ரணம் முழங்கப் பஞ்சவரக்குத் தூது***
***நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே***
***நாராயணா என்ன நாவென்ன நாவே*** *(சிலம்புப் படர்க்கை - 3)*

*என்னும் இளங்கோவடிகள் கூற்றால் அறியலாம்.*

***சிறப்புப் பெயர் பெறின் செப்பிய இரண்டும்***
***உறற்குரி மரபின ஒழிந்தார் இருவர்க்கும்***

*அரசனால், ஏனாதி, காவிதி போன்ற சிறப்புப் பெயர் பெற்ற வணிக ருக்கும், வேளாளர்க்கும் நாடு, காவல், தூது போதல் ஆகிய தொழில் இரண்டும் பொருந்திய மரபினை உடையனவாகும் என்பர்.* [13]

3. பகைவயின் பிரிவு

*இதுவும் அரசற்கே உரிய பிரிவாகும். அரசன் தானே அல்லது படைத் தலைவனையோ உதவிக்கு அனுப்புதலும் உண்டு. அப்பொழுது வினைமேற் செல்வது இப்பிரிவு.*

இப்பிரிவின்கண் தலைவன் போர்க்களத்தில் ஓராண்டு தங்கவும் நேர லாம். தலைவி இப்பிரிவிக்கு எளிதில் உடன்படாள் என்பதற்குத் தலைவன் தோழியின் மூலம் தன் கருத்தைத் தெரிவித்து எடுத்துச் சொல்லின் அரசு என்னும் பெயருக்கு மாறாக நன்மையில் இருந்து மாறுபட்டு, நாட்டின் அமைதி குலைய மக்களின் அச்சத்தைத் தவிர்த்து போர் தொடங்கினாரை அடக்கப் பிரிதல் துணைவயின் பிரிவாகும். மன்னர் இருவர் தம்முள் பகை கொண்டு போர் தொடங்கிய பின் அவர்களில் ஒருவருக்குப் படைத்துணை யாகச் செல்லுதல் துணைவயின்பிரிவு எனப்படும்.

**தானே சேறலும் தன்னொடு சிவணி**
**ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே** *(தொல். அகத். 973)*

வேந்தன் தானே முற்பட்டுப் பிரிதலும் அவனுக்கு உறுதுணையாக ஏனையோர் உடன்பட்டுப் பிரிதலும் ஆகிய இரண்டு வகையிலும் வேந்தர் பிரிவு நிகழும்.

அரசன் தலைமகனாகப் பகைவர் போல் சொல்லுதலாகிய பிரிவு இத் தன்மையில் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கு சிலையெடுக்கும் போது தானே வடபுலத்து இமயத்தை நோக்கிப் புறப்பட்டு கனகவிசயரை வெல்ல பகைமேற் சென்றமை நினைவு கூறத்தக்கது. குலோத்துங்க சோழன் கலிங் கத்தை நோக்கி படைக்கொண்டு பகை நோக்கி செல்லும் வகையில் அவ்வரசன் பொருட்டு கருணாகரத் தொண்டைமான் பகைமேற் சென்றமையும் எண்ணத் தக்கது.[14] இத்தன்மையில் வேந்தன் பொருட்டாக இருவகையாகிய பிரிவையும் கொண்டுள்ளனர்.

***வஞ்சி தானே முல்லையது புறனே***

***எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்***

***அஞ்சுதகத் தலைச் சென்று அடல் குறித் தன்றே*** *(புறத். 1008)*

போர்முறைகள்

*வஞ்சியென்பது முல்லையென்றும் அகத்திணையோடு தொடர்புள் ளது. அடங்காத மண்ணாசை கொண்டு படையெடுத்து வந்த வேந்தனை அறங்கருதும் மற்றொரு வேந்தன் படையெடுத்துச் சென்று அவனோடு போர் செய்வது.*

***துன்பை தானே நெய்தலது புறனே*** *(புறத். 1015)*

***மைந்து பொருளாக வந்த வேந்தனைச்***

***சென்று தலையழிக்கும் சிறப்பிற் றென்ப*** *(புறத். 1016)*

*துன்பை என்பது நெய்தல் என்னும் அகத்திணையோடு தொடர்புடை யது. தனது ஆற்றலை உலகம் புகழ வேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு போர் புரிய வந்த அரசனை எதிர்த்துச் சென்று போர் புரிந்து அவன் கர்வத்தைப் போர்க்களத்திலே அழிக்கும் சிறந்த செயலாகும். போர் தொடங்கு வதற்கு முன்பே எதிரியின் பசுமந்தைகளைக் கவர்ந்து செல்வது அக்கால வழக்கம் இது தான் போருக்கு ஆரம்பம். பசுமந்தையைக் கவரும் எதிரிகளைக் காவலர்களும் ஊரர்களும் எதிர்த்து சண்டையிடுவர் அப்போது அவர் இறந்து படுவர். இதனை,*

***ஊர் கொலை ஆகோள்***

*என்கிறது.*

பகைவரால் அஞ்சப்படும் தானைநிலை முதல் துறையாகும் தும்பை பெரும்போர் ஆதலின் படைப்பெருக்கம் பார்த்தே பகைவர் அஞ்சுவர் என்பது இத்துறைப் பொருளாகும். வீரர்கள் அற்புதமாகச் செய்யும் போர்த்திறங்களைப் பொறுத்துக் கொண்டு அவர்களை எதிர்த்து நிற்கும் வலிமையில்லாத பகைவர் களை அஞ்சி நடுங்கச் செய்யும் காலாட்படையின் செயலே தானைநிலை என்று கூறப்பெறும். [15]

*தார்நிலை*

போர்க்களத்தில் புகுந்து முன்னேறிச் சென்று போரிட்டு வெற்றி ஈட்டும் தன் வேந்தனை பகைப்படை வீரர் சுற்றிச் சூழ்ந்து கொள்வர். வேறொர் இடத் தில் போர் செய்யும் வீரன் ஒருவனைக் கண்ட வேந்தனின் நண்பன், தான் புரியும் போரைக் கைவிட்டு முன்னணிக்கு விரைந்து வந்து தன் வேந்தனோடு போரி டும் பகைவரைத் தடுத்து வேந்தனுக்கு துணை நிற்பான். பகைவரை வீழ்த்தும் வீரச் செயலைக் கூறுவது தார்நிலை என்னும் துறையாகும். இதனை, வேல்மிகு வேந்தனை மொய்த்த வழி ஒருவன் தான் மீண்டு எறிந்த தார்நிலை என்பர் தொல்காப்பியர்.

மக்கள் போர்களின்போது தொடர்ந்து இம்முறையையே பின்பற்றி உள்தால் பிற்காலத்தில் புறத்திணை இலக்கணமும் இவ்வாறே வகுக்கப் பட்டது. வெட்சிப் போர் தொல்காப்பியர் காலப்போர் முறை அன்று அவருக்கு முற்பட்ட வீர ஊழிக்காலப் போர் முறை. தொல்காப்பியர் காலம் வீரமும் காத லும் கொடையும் நிலையாமையும் ஒரு சேரப் பேசப்பட்ட காலம் எனினும் களவைப் போற்றியது போல வரலாற்றுமுறைப்படி வெட்சியையும், பழைமை கருதி முதலில் போற்றுவர். வேற்றுமை ஏழு என்ற முன்னோர் தம் கருத்தைக் கூறி வேற்றுமை எட்டு என்ற தம் கருத்தை நிலை நாட்டுவர். ஒவ் வொரு கருத்தையும் விளக்கும்போது அதனது வரலாற்றை விளக்குவது. தொல்

காப்பிய நோக்கமாக இருந்தது போலும் என்ற க.ப. அறவாணனின் கூற்று இதற்கு அரண் சேர்க்கும்.

நிரை கவர்தல் வெட்சி எனவும் மீட்டல் கரந்தை எனவும் பெயர் பெறும் தொல்காப்பியம் வெட்சித் திணையின் இலக்கணமாக,

**வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின்**
**ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்** *(தொல். 1003)*

என்கிறது. வேந்தனால் விடப்பட்ட வீரர் பகைப்புலத்திற்குச் சென்று களவினால் ஆக்களைக் கொணர்ந்து பாதுகாத்தல் வெட்சி என்பது இதன் பொருள் நிரை கவர்தல் என்ற பழைய வழக்கத்தைப் போரின் தொடக்கமாக கவர்ந்த தொல்காப்பியர் அவற்றைப் பாதுகாத்தல் வேண்டும் என்று தம் கருத்தையும் இணைத்துக் கூறியுள்ளார். இந்நூற்பாவிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் ‘இருபெரு வேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலிய தீங்கு செய்யத் தகாத சாதிகளை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினாற்றாமே கொண்டு வந்து பாதுகாத்தலும் தீதெனப்படா அறமேயாம்’[16] என்பார்.

### அகத்திணைக் களவு

அகத்திணைக் களவில் ஒருவனும் ஒருத்தியும் ஊழின் பயனாய் எதிர்பட்டு அன்பினால் ஒருவரையொருவர் இன்றியாமையாததாய் உலகத்தார் அறியாது. மறைந்தொழுகுதல் களவு என்றும் கூறப்படுகின்றது.[17]

வெட்சித்திணையில் களவு என்பது வேற்றுநாட்டின் கண் சென்று களவினானே ஆனிரைக் கொணர்ந்து பாதுகாக்கும் செயலைக் குறிக்கின்றது. இத்தகைய ஆனிரைக் களவு பழங்காலத்தில் போர் எழுவதற்கும் காரணமாய் இருந்தது.

*ஆகவே, போர்க்குரிய காரணம் களவு என்பதும் ஒரு காரணமாய் அமை கின்றது. போரைத் தூண்டுதற்குரிய களவும் பொருளாக இருந்த ஆனிரை பிற் காலத்தில் தனிமனிதன் மற்றும் மனிதக் கூட்டங்களின் பொருண்மையாக மாறி யிருந்த நிலையிலே வேந்தன் ஏவினால் ஆனிரைக் களவு நடத்திருக்கிறது.*

***வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும்***
***சென்றிகன் முனை ஆதந்தன்று***

*எனப் புறப்பொருள் கூறுகிறது. இதனைப் பேராசிரியர் கு.வெ.பாலசுப்பிர மணியனார் கீழ்க்கண்டவாறு விளக்குவர்.*

*''இனக்குழு மக்களிடையே போர்க்குரிய பொருளாக கவர்ந்து பாது காத்துத் தம் செல்வநிலை பேணுதற்குரியதாக இருந்த ஆனிரை, தொல்காப்பி யர் காலத்தில் வேந்தனின் ஏவலால் கவரப்படுவதாக போரைத் தூண்டும் களவுச் செயற்குரியதாக அமைந்தது. போருக்கும் களவுக்கும் உரியதாக வேந்த ரும் தனி ஊராரும் போர் தோன்ற வழக்காக அமைந்து.''* [18]

### போர்கள்

*இக்காலத்தில் போர் ஆயத்தத்திற்கு எனப் படைகளைப் பெருக்கும் வல்லரசுகள் கூறுவதென்ன? அமைதியை நிலநாட்டவும் வன்முறையால் காரணமின்றி ஈடுபடும் அரசை அடக்கவும் தற் காப்புக்காகவும் போர்க்கருவி களைப் பெருக்குவதாகக் கூறிக் கொள்கின்றனர். இதுவே அன்றி தொல்காப் பியர் வஞ்சி என்பதற்கும் தும்பை என்பதற்கும் கூறும் இலக்கணமாகும்.*

***எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்***
***அஞ்சுதகத் தலைச் சென்று அடல் குறித்தன்றே*** *(தொ.புறத். 1008)*

*என்று கூறுகின்றார். ''அதாவது தனது வலிமையொன்றினையே உலகில் நிலை நாட்ட எண்ணங்கொண்டு படையெடுத்து வந்த வேந்தனைத் தன் நாட்டு*

எல்லையைக் கடப்பதற்கு முன்பே சென்று அவன் வலிமையை அழித்து வெல்லுதல் வேண்டும் என்பதாகும். ஆகவே போர் என்பது தற்காப்புக் காகவும், முறை கடந்து நாடு பிடிக்கும் விருப்பினும் வலிமையை நிலைநாட் டும் நோக்கிலும் வரும் அரசரை அடக்கிச் செந்நெறிப்படுத்துவதற்காகவும் மேற்கொள்ள வேண்டிய ஒன்று என்பர். [19]

**வேந்தூறு தொழிலே யாண்டின தகமே** *(தொல்.பொருள். 189)*

வெள்ளிய பூவையுடைய வேளைச் செடியையும், சுரைக்கொடியையும் கட்டுகளின் மேல் படர விட்டுள்ளனர். இன்றும் இவ்வழக்கம் இராணுவத் தினரிடையே உள்ளன. தாங்கள் தங்கியுள்ள கூடாரத்தைத் தங்கியுள்ள இடத் தின் வண்ணத்திற்கு ஏற்ற துணியால் அல்லது செடிகொடிகளால் அமைத்துக் கொள்வது உண்டு. இவ்வாறு செயற்கையாகக் கட்டுகள் அமைக்கப்பட்டாலும் இவை பகைவர்க்கு அச்சத்தைத் தருகின்றன.

**போர்க் காரணங்கள்**

ஒருவன் தன் இன்ப வாழ்வுக்கு இடையூறானவற்றைக் களைய முற்படு கின்றான். இடையூறு விளைவிக்கும் பிற செயல்களைத் தடுத்து நிறுத்த முயல் கின்றான். அம்முயற்சியில் வெற்றி கண்டால் இன்புற்று வாழ்வான். இல்லை யேல் துன்புற்று வீழ்வான். இதுபோன்று ஒரு நாட்டு மன்னர் அந்நாட்டுக்குப் பிறநாட்டு வேந்தர்கள் தீமை செய்ய முற்படும் பொழுது தன் படை வலிமை யைக் கொண்டு அத்தீமைகளைப் போக்க முற்படுகிறார். அவன் வென்றால் புகழ் பெற்று வாழ்வதாகவும் இல்லை என்றால் இகழ்வுற்றுச் சாவதாகவும் கூறு கிறான். இது நாட்டு மக்களின் இன்ப வாழ்வின் கடமையைத் தூண்டிய போர் முயற்சியாகும்.

போர் வினைக்குரிய காரணங்கள் ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என ஆறுவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஆசை என்பது மண், பொன், புகழ் என்பவை காரணமாக ஏற்படும். பகை என்பது எதிர்ப்பு, போட்டி, பொறாமை என மூவகைப்படும்.

### புறத்திணையும் போர்க்காரணங்களும்

போரின்கண் தோற்றுத் தம் கணைகளையும் வேல்களையும் இழந்தவர் களையும் தடுத்துப் புண்பட்டோரை முன்னர் கொண்ட வெற்றியைக் கூறி ஆறுதல் கூறுவர். இதனை முதுமொழி வஞ்சி என்பர்.

**உழிஞை தானே மருதத்துப் புறனே**
**முழுமுதல் அரணம் முற்றுலும் கோடலும்**
**அனைநெறி மரபிற்றாகும் என்ப** (தொல். 1010)

பகைவரது கோட்டையை முற்றுகையிடுதலும் கோட்டைக்குள் இருக் கும் அரசன் அதைத் தடுத்துக் காத்தலும் ஆகிய இரண்டு தன்மையைக் கொண் டுள்ளன.

பகைவரது நட்பினைத் தான் கொள்வதற்கு முன்னமேயே தான் கொண்டவன் போல விரும்பியவாறு வேண்டியவர்களுக்குக் கொடுத்தலை எண்ணி வெற்றியைப் போற்றுவர். எடுத்துக்காட்டாக இலங்கையை வெற்றி கொள்வதன் முன்னரே இராமபிரான் வீபீடனுக்கு இவ்வரசைக் கொடுத்தான். தான் கருதியதை முடிக்கும் வேந்தனது சிறப்பினை அவன் படைத்தலைவன் முதலியோரும் வேற்று வேந்தன் பால் தூது செல்வோரும் எடுத்துரைத்தல் ஆகும். [20]

பகைவயிற் பிரிவுக்கு உரியோர்

*அரசன் தான் கொண்ட பகைக்குத் தானே படை வேந்தர்களுக்காகவும் குறுநில மன்னர்களுக்காகவும் துணையாகப் படையெடுத்துச் செல்லுதலும் உண்டு. பகைவயின் பிரிவு அரசனுக்கே உரியதாக அமைக்கப் பெற்றது.*

***உதவி அந்தணர் ஒழிந்தோர்க்கு உரித்தே** (நம். 77)*

*வேந்தர்க்கு அந்த இடத்தில் உதவும் தொழிலானது அந்தணரைத் தவிர்த்து ஏனைய வருணத்தவராகிய அரசர், வைசியர், சூத்திரர் ஆகிய மூன்று வகையினர்க்கும் உரியது.*

காவற்பிரிவு

*நாட்டைப் பாதுகாத்தல் என்பது வேந்தனுக்கே உரிய கடமையாகும். வேந்தனது குடியில் பிறந்தோர் அவனுக்குப் பிறகு ஆட்சியில் அமரும். தகுதி படைத்தவர்கள் என்பதால் அவர்களைத் தலைமக்களாகக் கொண்டு பிரிதல் ஆகும்.*

***மன்னர்பாங்கின் பின்னோர் ஆகும்** (தொல். 976)*

*வணிகரையும், வேளாளரையும் குறிப்பதாக உள்ளது. வேந்தனுக்கு உரிய நாட்டைக் காக்கும் காவல்பிரிவு அவனுக்குப் பின் வைத்து எண்ணப் படும் வணிகரும், வேளாளரும் அவ்வேந்தனின் ஆணையினால் பிரிதலுக்கு உரியவர்களாகக் கருதப்படுவர் என்பது இளம்பூரணார் கருத்தாகும்.*

*சீர்க்கேட்டைத் திருத்தி அமைத்தல்*

*ஒரு நாட்டில் எப்போதும் நம்மை செய்யும் மக்களும் தீமை செய்கிற மக்களும் இருப்பது இயல்பு. நன்மக்களாகவே இருப்பின் அரசு தேவை*

யில்லை. நாட்டு மக்களிடையே உண்டாகும் சீர்க்கேட்டைத் திருத்தியமைத்து பின்னர் அத்தகைய சீர்கேடு உண்டாகாமலும் அரசியல் அலுவலாளர்களால் நாட்டு மக்களுக்கு இடையூறு உண்டாகாமலும் காத்தல் பொருட்டும் தன்னால் ஏற்படுத்தப்பட்டுள்ள வரியை ஒழுங்காக வாங்குதற் பொருட்டும் அரசர்க்குப் பிரிவு ஏற்படும். இவை காவற்பிரிவு எனப்படும்.

மக்கள் மனவேறு பாட்டாலும் அலுவலாளர்களின் முறைகேட்டாலும் நாட்டில் ஒழுக்கக் கேடுகள் ஏற்படும். அவ்வாறு ஏற்படாமல் இருத்தல் பொருட்டும் ஒழுங்காக வரிவாங்குதல் பொருட்டும் நாட்டை மேற்பார்வை யிட அரசனுக்குப் பிரிவு ஏற்படும்.

## பொதுமக்களின் நன்மைகள்

ஊரில் செல்வாக்குள்ள இருவர் தங்கள் தலைமையின் கீழ் ஊர் மக்களை இரண்டாகப் பிரித்து வைத்துச் செல்வாக்குடன் வாழ்ந்து வருவர். இவை ஊர்க்கட்சிகள் எனப்படும். இத்தகைய கட்சி வேறுபாட்டால் ஊரில் ஒற்றுமை குலைந்து ஊர் நலம் கெடும். ஊர் பொதுக் காரியங்கள் ஒழுங்காக நடை பெறாது. ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கு எளிது என்ற வழக்கப்படி ஊர்க் கட்டுப்பாடு ஒழியும், அக்கட்சிப் பூசலால் ஊர்ப் பொது மக்கள் பெருந் தொல்லைக்குள்ளாவர். இத்தகைய நல்லூர்களையுடைய நாடே நல்ல நாடா கும். ஊர்களில் ஏற்பட்டுள்ள இத்தகைய கட்சி வேற்றுமைகளைப் போக்கி மறுபடியும் அவை தோன்றாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

## வரி வாங்கும் முறை

அரசியல் அலுவலாளர்கள், நாட்டு மக்களிடையே ஓரவஞ்சனையாக நட்பும், பகை பாராட்டுதலும், கைக்கூலி வாங்கிக் கொண்டு காரியம் செல்லு தலும் முறை பிறழவரி வாங்குதலும், குடிகளை வருத்தி வரி வாங்குதலும் ஆகிய முறை கேடுகள் உண்டாகும். நாட்டில் அத்தகைய முறைகேடுகள்

நேராமலிருக்கவும் ஒரு சில இடங்களில் நேரின் மறுபடியும் அவ்வாறு ஏற்படாமல் இருக்கவும் பார்த்துக் கொள்ள வேண்டும். [21]

வரி வாங்கும் தொழில் ஒழுங்காக நடைபெறும் படியும் பார்த்துக் கொள்ள வேண்டும். வரி விதிப்புப்படி ஒழுங்காக வரி வாங்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். அதிகாரிகள் திறம்பட அதிகாரம் செலுத்தி வருக்கின்றனரா என்பதை அறியும் பொருட்டுத் திறம்பட அதிகாரம் செலுத்தும் பொருட்டு அரசன் அடிக்கடி நாட்டை சுற்றிப் பார்த்து வர வேண்டும். இதற்காக அரசனுக்குப் பிரிவு நேரும். ஏனோர் (அதிகாரிகள்) பிழைத்து பிழையாது காத்தற் பொருட்டும் அரசனுக்குப் பிரிவு நேரும். தொலைந்த பொருள் ஒழுங்காக வாங்குதற் பொருட்டும். மேற்பார்வையிட அரசன் பிரிவான். நாட்டை மேற்பார்வையிட அதிகாரிகள் பிரிவதும் அரசனுக்காகவே பிரிவதால் அரசன் பிரிவில் அடங்கும்.

இன்றும் மாநிலத் தலைவரும் (கவர்னர்) மாவட்டத் தலைவரும் (கலெக் டர்) நாட்டைச் சுற்றிப் பார்த்தலும் நிலவரி பார்வையார் (RI) ஒழுங்காக நடத்தற்பொருட்டும், ஊராளர் வரி வாங்குதல் முதலிய அலுவல்களை ஒழுங்காகச் செய்தல் பொருட்டும் கூற்றத் தலைவரும் (தாசில்தார்) பல் கூற்றத் தலைவரும் (RDO) மேற்பார்வையிட்டு வருதலும் இப்பிரிவை நினைவுறுத்தும்.

அரசன் தனக்கு ஈடாகத் தன் தொழில் முடிக்க வணிகரையும், வேளாளரையும் ஏற்படுத்துவான். அவர்கள் அரசன் சார்பினராக ஆணையராக தலைமை தாங்கிச் சென்று அரசன் தொழிலான பகை வெல்லல், நாடு காத்தல், பொருளீட்டல், உடன்பாடு செய்தல் ஆகியவற்றைச் செய்வர்.

**அறப்புறங் காவல் நாடு காவல் எனச்**
**சிறுப்புறு காவல் திறம் இருவகைத்தே** (நம். 72)

மேன்மை மிக்க காவலின் வகை இரண்டு. அவை அறநெறி வழுவாது காப்பது தீங்கு. அச்சம் முதலானவை சூழாது காப்பதும் ஆகும்.

நாடு காத்தற்குப் பிரியும் பிரிவானது நாட்டில் இருக்கும் மூத்தோர்களும், பெண்டிர்களும் இருகை முடவரும், கூனரும், குருடரும், பிணியுடையோரும் ஆகிய இவர்களுக்குரிய கருமங்களை முறைப்படி செய்து முடிப்பதற்கும் காட்டில் வாழும் உயிர்கள் ஒன்றினையொன்று துன்புறுத்துகின்றன. அவற்றின் துன்பத்தைப் போக்குவதற்கும் வளம் இல்லாத இடத்து வளம் உண்டாக்குதல் பொருட்டும் தேவகுலம் சாலை, அம்பலம் ஆகியவற்றை ஆராய்வதற்கும் துன்பப்படும் குடிகளைப் பார்ப்பதற்கும் பிரியும் பிரிவாகும்.

**அறப்புறம்காவல் அனைவர்க்கும் உரித்தே** *(நம். 73)*
**மற்றைக் காவல் கொற்றவர்க்கு உரித்தே** *(நம். 74)*

அறப்புறம் என்பது அறநெறியின்பால் ஒழுகும் பண்புடைமையைக் குறித்தல் ஆகும். இது மக்கள் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டிய பொறுப்புணர்வைச் சுட்டுவதாகும். அதனால் நால்வகை வருணத்தாரும், கடைப்பிடிக்க வேண்டிய ஒழுகலாறு ஆகும்.

ஒரு நாடு அறநெறியால் ஒழுக வேண்டிய நிலையில் மக்கள் கடமை என்பது அறநெறி பேணுதல் ஆகும். அந்நாடு அயலாரின் தலைமையிலிருந்து பாதுகாக்கும் உரிமை மற்றைக் காவல் எனப்பட்டது. இது பகைவரிடமிருந்து எத்தன்மையிலும் தீங்கு உண்டாகாதபடி நாட்டைக் காப்பது ஆகும்.

**வேஞ்சின மாற்றான் விடுத்த வேந்தன்**
**காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று**

தன் பகைவனான வஞ்சிவேந்தன் போர் மேற்கொண்டு வந்து தன் நாட்டிடத்தே நின்றான். அந்நாட்டிற்குரிய அரசன் காஞ்சி மாலையைச் சூடிக் கொண்டு தன் காவலிடத்தைக் காக்கக் கருதியது. ஒரு மன்னன் தன் பகை நாட்டின் மீது படை கொண்டு வந்த பொழுது அந்நாட்டினைக் காக்கும் பொருட்டு அந்நாட்டு அரசன் காஞ்சி மாலை சூடி அப்பகை மன்னனை எதிர்த்தது.

காவற்பிரிவு என்பது நாட்டைப் பாதுகாக்கும் பொருட்டு பிரியும் பிரிவு. இதனால் நாட்டில் எளியோர்களை நலிவோர் என்று நினைக்க வேண்டியதில்லை. ஒரு நாட்டில் பல இடங்களில் தமக்குள்ள குறைகளை நேரில் வந்து சொல்லுவதற்கு இயலாத மூத்தோர், பெண்டிர், இருக்கை முடவர், பிணியுடையோர் முதலியவர்கள் இருத்தல் கூடும். அவர்களை நேரில் சந்தித்து அவர்கள் குறைகளைக் கேட்டு அவற்றினைப் போக்கும் பொருட்டுப் பிரிவது ஆகும். [22]

### 5. பொருட்பிரிவு

ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத் துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லோர்க்குந் துய்த் துணரப்படுதலானும், இவை இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் அவை புறமெனவே படும் என்பர். [23]

முன்னோர் வைத்துச் சென்ற பொருளன்றித் தன் முயற்சியால் அப் பொருள் ஈட்டும் காரணமாகப் பிரியும் இப்பிரிவு, பொருள்வயின் பிரியும் பிரிவாகும். வறியவர் போற்றுதல், சுற்றத்தாங்கல், விருந்தோம்பல், தேவகாரியங்

களைச் செய்தலாகிய இல்லற தர்மம் இனிதே நடப்பதற்குப் பொருள் இன்றி யமையாதது. எனவே, பொருளீட்டல் அரசர்களே அன்றி மற்ற வருணத்தாருக் கும் அவசியமாகும். எனவே இப்பிரிவு எல்லா வகுப்பினருக்கும் உண்டு.

''பகை அடக்கியும் கொடுங்கோல் மன்னனை வென்றும் பொருள் தேடல் அரசர்க்குரிய வழி ஓதுவித்தும் வேள்விக்கு உதவியும் அரசர்களுக் கிடையே தூது சென்று பகை தணிவித்தும் சன்மானமாகப் பொருள் பெறல். அந்தணர் பொருளீட்டும் வழி என்பர்.''[24]

வைசியர் வியாபாரத்தின் மூலமும், நான்காவது வருணத்தார் உடல் உழைப்பால் கைவினைத் திறமைகாட்டியும் பொருளீட்டுவர்.

இப்பிரிவுப் பொருளைக் கொண்டு புலவர்கள் அரிய கற்பனைகளைச் செய்துள்ளார்கள். பொருள்வயின் பிரிய நினைத்த தலைவன் இரண்டொரு தினங்களுக்குத் தன்னை பிரிந்திருக்கத் தன் கருத்தைத் தோழியைக் கொண்டு தெரிவித்தும், பின்னர் தலைவி தானே நேரில் வேண்டியிருந்தும் விடை சொல் வது வழக்கம்.

### பொருளுக்காகப் பிரிதல்

எல்லா நில மக்களை விட அந்தணர் என்போர் உயர்ந்தோராகக் கருதப் படுகின்றனர். அந்தணர்கள் தம் பிறப்புக்கு ஏற்ற நல்ல ஒழுக்கத்தினாலும் கற்றுக் கொண்ட கல்வி சிறப்பாலும் பொருள் ஈட்டுவதற்காகப் பிரிந்து செல் லும் பிரிவுகளும் பாலைத் திணையில் ஏற்றுக் கொண்டு பாடல் பாடப்பெறும்.

**பொருள் வயின் பிரிதலும் அவர் வயின் உரித்தே**
**உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான** *(தொல். அகத். 979)*

அவர் வயின் உரித்தே என்னும் தொடருக்கு இளம்பூரணர் மேற்சொல் லப்பட்ட வணிகர், வேளாளர் என்று பெயர் கூறுகிறார்.

## பொருள் தேடுவதற்கு உரிய காலம்

தொல்காப்பியர் ஐந்திணை ஒழுக்கங்களைக் குறிப்பிடும்பொழுது அத்திணைக்குரிய செயல்பாடுகளையும் கொண்டுள்ளார். தலைவன் பொருள் தேடப் பிரிந்து செல்லும் பருவத்திற்கு வேனிற் காலத்தையும் அவன் பொருளீட் டிக் கொண்டு வரும் வருகைக்குக் கார்காலத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

**நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலோடு**

**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே** (தொல். அகத். 955)

என்கிறார். ஐந்திணைகளுள் பொருளீட்டல் செய்வதற்கு வேனில் காலமும் பாலைத் திணையும் பொருத்தமானதாக இருப்பதால் பாலைத்திணை நடுவன தாக வைக்கப்பட்டது என்பர். திருமணம் நடந்து இல்லறம் நடத்தத் தொடங் கிய பின்னர் தலைவனுக்கு நிகழும் பிரிவு பொருவயில் பிரிவாகவே இருக்கின் றது. மேலும் இல்லற வாழ்வில் ஈடுப்பட்ட தலைவனுக்கு ஓதல், காவல், பகை, தூது, வேந்தர்க்கு உற்றுலி உதவி செய்தல் ஆகியவற்றாலும் பிரிவு ஏற் படும் என்றாலும் அப்பிரிவுகளின் அடிப்படை நோக்கம் பொருளீட்டுவ தாகவே அமைகின்றது எனலாம்.

மலர்தலை உலகத்து என்பது பரந்த இடத்தையுடைய தமிழ் நாட்டகத்து என்றவாறு, புலவோர் ஆய்ந்த அருந்தமிழ் அகப்பொருள் என்பது இடைச் சங்கத்தோடும் கடைச்சங்கத்தோடுமாகிய சான்றோரால் ஆராயப்பட்ட அரிய தமிழ் நூலகத்து என்பதாகும்.

### பொருளீட்டலின் நோக்கம்

காடுகளில் ஒன்றினையொன்று நலியும் உயர்சாதிகளைக் கண்டு தீமை செய்வனவற்றை முறை செய்வதற்கும், கொடிகளில் சிக்குண்டு அல்லலுறும் விலங்குகளின் குறை தீக்குதல் பொருட்டும், வளம் குன்றிய இடங்களில் தன் காரணத்தை ஆய்ந்து வளம் தோற்றுவந்த கோவில், சாலை, பொதுவிடங்கள் இவற்றினை ஆராய்வதற்கும் தன்னால் பாதுகாக்கப் பெறும் உயர் சாதிகள், குடிகள் முதலியோர்க்குத் தனது ஊக்கம் காட்டுவதற்கும் இப்பிரிவு கூறப்படும்.

### அரசனுக்குரிய பிரிவு

நாட்டு மக்களிடையே உண்டாகும் சீர்கேட்டைத் திருத்தியமைத்து பின்னர் சீர்கேடு உண்டாகாமலும் அரசியல் அலுவலர்களால் நாட்டு மக்களுக்கு இடையூறு உண்டாகாமலும் காத்தற்பொருட்டும் தன்னால் ஏற்படுத்தப்பட் டுள்ள வரியை ஒழுங்காக வாங்குதற் பொருட்டும் அரசனுக்கு காவற் பிரிவும், பொருட்பிரிவும் ஏற்படும்.

ஆனால், பொருள் முயற்சியை மேற்கொள்வோர் ஒரு நாட்டை மட்டும் அல்லாமல் மலை வழியையும் கடந்து பல நாட்டையும் கடந்து சென்று வேற்று நாட்டு மக்களிடையில் அயலராய் வாழ்வர். தனிப்பட்டவனின் முயற்சி ஆதலின் பல திங்கள் கழிந்தும் செய்தி அனுப்ப வழியின்றித் திகைப்பர்.

### ஈட்டிய பொருளைச் செலவிடும் முறை

தேவைக்குரிய பொருளை ஈட்டிக் கொண்டு வருதல் அவற்றைத் தாமுண்டு மற்றவர்க்கும் பகிர்ந்து கொடுத்தல், அறிவைக் கூ ர்மைப்படுத்திக் கல்வி வளம் சேர்த்துப் பெருக்கிக் கொள்ளல், போருக்கு வந்த பகைவரைத் தங்களது வீரத்தால் புறமுதுகு காட்டியோடச் செய்தல், வாழ்வியல் நினைவு ஒழுக்கங்கள் பின்பற்றுதல் என, அனைத்து வகையிலும் சிறப்போடு வகைப் படுத்தி வாழ்ந்தவர் தமிழர் என்பது.

***அறத்தால் பொருளீட்டல் அவ்வழி ஈதல்***

***திறத்தால் கல்வி வளம் சேர்த்தல் - மறத்தல்***

***..... வகைப்படுத்தி வாழ்ந்தார் வழக்கு***

*என்று நூற்பாவில் அறியலாம்.*

## தொல்காப்பியத்தில் பொருளீட்டு நெறி

*இல்வாழ்க்கையினை மேற்கொள்ளும் தலைவன், தன்னைச் சார்ந்த மனைவி, மக்கள், பெற்றோர், உற்றார் உறவினர்களையே பாதுகாக்கும் கடமை உடையவனாகின்றான். தன் சுற்றத்தாருக்கு வேண்டிய உணவு, உடை, உறையுள் கொடுக்கத் தவறியவர்களையும் வாழ்வில் அறத்தை மேற்கொள்ளாதவனையும் இவ்வாழ்வான் என்று சொல்வதில்லை. இல்வாழ்வான் குறித்து திருவள்ளுவர்,*

***இவ்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்***

***நல்லாற்றின் நின்ற துணை*** *(குறள் 41)*

*என்கிறார்.*

*பொருள் காரணமாகப் பிரிவு என்றால் அதற்கு முன்னர் பொருள் இல்லாதவன் என்று பொருள் இல்லை. பொருளில்லாதவனானதால் பொருள் ஈட்டப் பிரியும் என்பதன்று முன்னோரால் பெற்ற பல்வேறு வகைப்பட்ட பொருள்களையும், உடையவனே அவன். அப்பொருள்களைக் கொண்டு அனுபவித்து வாழ்வது ஆண்மைத்தன்மையன்று எனக் கருதி தன் முயற்சியால் பொருளீட்டப் பிரியும் தன்மை உடையவன் என்பதாகும்.* [25]

## 6. பரத்தையர் பிரிவு

*பரத்தையை - அயன்மை, பரத்தையர், அயலார் களவொழுக்கம் ஒழுகி மணஞ்செய்து கொண்டு கற்பொழுக்கம் ஒழுகும் இல்லறம் நடத்தும் தலைவி*

*யல்லாத பிற மகளிர், அதாவது களவொழுக்கம் ஒழுகாமலும் மணஞ்செய்து கொள்ளாமலும் காமத்திற்காக ஆடவருடன் கூடா நட்பு வாழும் பெண்டிர். இவர் காமக்கிழத்தியர், காதற் பரத்தையர், சேரிப்பரத்தையர் என மூன்று வகைப்படுவர்.*

*இன்று சமயக் கன்னிப் பெண்கள் இருப்பது போல, ஆனால் இன்பத்தை வெறுக்காமல் அதற்காகவே பண்டு மணஞ்செய்து கொள்ளாது சில பெண்கள் இருந்து வந்தனர். அவர்கள் தன்னுரிமையுடேனே வாழ்ந்து வந்தனர். அவர் களே இம்மூவகையினரும் ஆவர்.* [26]

**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
***ஐயர் யாத்தனர் காரணம் என்ப***

*என்பதால் தமிழரிடை களவொழுக்கம் ஒழுகி, காரணம் இன்றி பலரறிய மணம் செய்து கொள்ளாது கற்பொழுக்கம் ஒழுகி இல்லறம் நடத்தி வந்த காலமும் ஒன்று இருந்து வந்தது. ஒருவனும் ஒருத்தியுமாக, காதல் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தனர். திருமணம் என்பதே அன்றில்லை. பின்னர்தான் திருமணம் குலப் பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் இப்பரத்தை யர் களவொழுக்கம் ஒழுகாது காமம் நுகர்பவர் முன்பு தூய ஒழுக்கமாகும். ஆனால் இப்பொழுது தீய ஒழுக்கம் காணப்படுகிறது.*

**களவும் கற்பும் அலர் வரைவு கின்றே** *(தொல். கற். 1108)*

*என அலர் கற்பிற்கும் களவிற்கும் உரியதாகக் காட்டப்பட்டுள்ளது. இவ்வலர் தலைவன் தலைவியரின் காமம் சிறந்தற்குக் காரணமாக அமைவது என்பதை யும் (163) குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியர் களவு, கற்பு எனும் இருவகை யாகப் பேசப்படுவதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ளன. எனவே அலரை மட் டுமே அடிப்படையாகக் கொண்டு களவுப்பாடல் எனப் பாடலின் கை கோளைத் தீர்மானித்துவிட முடியாது.*

***பின்முறையாக்கி பெரும்பொருள் வதுவைத்***

***.... கலங்கலு முரியன் என்மனார் புலவர்*** *(தொல்.பொ.கற். 172)*

*எனும் இது கற்பியலில் இடம் பெறும் ஒரு முக்கிய நூற்பாவாக உள்ளது. இது பின்முறை வதுவை. தொன்முறை மனைவி என இரு மனைவியரைப் பற்றி பேசும் நூற்பாவாக அமைந்துள்ளது. தலைவன் பரத்தைமையிலிருந்து நீங்கு தற்கு உரிய சூழல் இதில் கூறப்பட்டுள்ளது.*

*காமக்கிழத்தி*

*ஊரறிய வாழ்க்கைப்படுத்திய மங்கை நல்லாளைக் கைவிடும் நீ எம் போல்வாளைக் கைவிடாதிருப்பாய், தவற்றினை நன்கு உணர்க மலரைக் கருக விடற்க என்று இல்லறநெறிப்படுத்துகின்றாள் இப்பரத்தை.*[27] *ஆகவே ஐந் திணைப் பரத்தையைத் தொல்காப்பியரும் மனையோள் ஒத்தலின் என நிகர் படக் கூறுவர். இப்பெண்டிர்களை பொட்டுப் பெண்டிராக, விலைமாதர் களாகத் தொல்காப்பியமும் குறிப்பிடவில்லை. சங்க நூல்களும் காட்ட வில்லை. தொல்காப்பியம் இத்தகைய பரத்தையைக் காமக்கிழத்தி என்று கூறு கிறது. இதனால் இவர் உயர்வு பெறப்படும். பண்டைச் சமுதாயத்தில் கணிகை மடந்தையருக்கு ஒருவகை செல்வாக்கும் இருந்தது.*

***பாணர் கூத்தர் விறலியர் என்றிவர்*** *(கற். 1096)*

*என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதியால் பரத்தை கற்பினில் கூற்றுக்கு உரியவளாக எண்ணப்பட்டிருப்பது நினையத்தகும்.*

***காமக்கிழத்தி மனையோன் என்றிவர்***

*இவர் தலைவனது செல்வநிலை அறிந்து வாழ்க்கை நடத்தும் குண முடையராகி தலைவன் மீது, அன்பு பூண்டு வாழ்க்கை நடத்தும் அயல் மகளிர்,*

இன்னும் சில பெண்கள் மணம் செய்து கொள்ளாது தமக்கு விருப்பானவரோடு இருந்து மனைவியர் போலவே இல்லறம் நடத்தி வருதல், குடும்பம் நடத்துதல் உண்டு, தக்க பருவத்தே காதலுற்று முறையாகக் களவொழுக்கம் ஒழுகாமலும் மணம் செய்து கொள்ளாமலும் காமத்திற்காக கொண்ட மனைவி-இவர் இப்பரத்தையர் எனவும் படுவர். இல்லறம் குடும்பம் இப்பரத்தையர் ஒருவனோடு கூடி மனைவியர் போல குடும்பம் நடத்தும் பரத்தையர்.

**காதல் பரத்தையர்**

இவர் தலைவனிடம் அன்பு கொண்டு இன்பம் துய்ப்பவர். ஆனால் காமக்கிழத்தியர் போல தலைவனோடு உடனிருந்து வாழ்க்கை நடத்தாமல் தனி வாழ்க்கை வாழ்பவர். தலைவன் குடும்பத்திற்கும் இவர்களுக்கும் எந்த ஒரு தொடர்பும் கிடையாது. பரத்தையர் என்பதே இதற்குச் சான்றாகும். அய லவர் இன்று ஏதாவது ஒரு வேலையில் இருக்கும் ஒரு சில பெண்கள் வைத்துக் கொண்டிருப்பது போன்றது. இவர் தலைவனை நம்பி வாழாமல் தாம் தேடும் பொருளால் தன்னுரிமையுடன் வாழ்பவர். காதற் கிழத்தியோடு நகமும் சதை யும் போல் இயைந்து இல்லறம் முயன்ற தலைவன், தன் நண்பர்களுடன் ஒரு நாள் ஆடல் மகளிர் வீதி செல்ல நேர்ந்தது. அங்கிருந்த ஒரு மனையினுள் ஆட லும், பாடலும் நடக்க அவன் அம்மனையுட் சென்றான். அங்கு ஆடிக்கொண்டி ருந்த கணிகையின் ஆடற்கலைப் புலமையும், எழுதரிய வனப்பும் அவனைக் கவர, அவன் வீடு செல்லும் வழக்கமுடையவனானான்.

ஒரு நாள் ஆடலும், பாடலும் முடிந்த பின்னும் மனை திரும்பாமல் அங்கேயே அவன் இருக்கக் கண்ட கணிகை, பெருந்தகையீர், உங்களைப் போன்ற பெருமக்கள் எமது சிறுகுடில் வந்தருளியும் பெருந்தவம் செய்திருக்க வேண்டும் என்று உபசாரமொழி கூறி அவனைப் பள்ளியறைக்கு அழைத்துச் சென்றாள்... அவன் தந்த போகத்தின் புதுமை அவனைக் கருத்தழியச் செய்தது.

கணவனது நடத்தையை பார்த்த தலைவிக்கு அவன் நம்பத் தகுந்தனவும் நம்பத் தகாதனமான பல பொய்களைக் கூறி வந்தான். நாள் செல்லச் செல்லப் பகலில் உண்பதற்கும் மனை வருதில்லை. பொய் ஒரு நாளல்ல ஒரு நாள் வெளிப்பட வேண்டியதுதானே! அவனது புறவொழுக்கத்தை வெளியொரு வருக்கு கூறவேண்டாமென்றும், அவன் மனை வாருங்கள் அவனோடு மாறு கொள்ள வேண்டாமென்றும் கூறினாள்.

இரண்டோரு மாதங்கள் செல்ல, அவன் மனையோடு மனைவியையும் அடியோடு மறந்து பரத்தையின் மனையில் தங்கிவிட்டான். அவனுடன் தேரேளித் திருவிழாக்கள் காணச் செல்பவனுமான ஊரறிந்து தூற்றவே தலைவி மிக வருந்தினாள்.

தலைவியின் துயரையும் யாக்கை தளர்ச்சியையும் காணப் பொருந்தாத உயிர்ப்பாங்கி, பண்டைய வழக்கப்படி சேடியொருத்திக்குச் செம்பட்டிபத்தி யும், செஞ்சாந்து அணிவித்தும், செம்மணிக் கலன்கள் பூட்டியும், தலைவனை அழைத்து வருமாறு அவனைப் பரத்தை மனை போக்கினான்.[28]

### சேரிப் பரத்தையர்

இவர் தமக்கென ஒருவரை வைத்துக் கொள்ளாமல் விருப்பமுள்ள போது விரும்பியவரைக் கூடி வாழ்பவர். இவர் தலைவன் மீது அன்பின்றித் தலைவன் கொடுக்கும் பொருள் மீது அன்புடையவர். இவர் தாம் வள்ளுவர் கூறும் வரைவின் மகளிர் ஆவர். இவர்கள் ஒரு சில பெருஞ்செல்வரால் உண் டாக்கப்பட்டு நாளடைவில் தாமாகவே உண்டாகி ஒரு தனிக் கூட்டம் ஆனவர் போலும். ஆடவரில் சிலரும் முறையாக மணஞ்செய்து கொள்ளாமல் மூவகை மகளிர் போலவே வாழ்க்கை நடத்தி வருதல் அந்த காலத்தை தொடர்ந்தே இன்றும் வருகின்றன.

**ஒழுங்கம் உடைமை குடிமை இழுக்கம்**

**இழிந்த பிறப்பாய் விடும்** *(குறள் - 133)*

*என உயிரினும் ஒழுக்கமே பெரிதெனக் கொண்ட நம்முன்னோர்கள் ஒரு சில அடங்கா மனிதர்கள் ஒழுக்கத்தை மதியாதவர்களால் உண்டான இத்தீமை, தமிழ் இனத்திற்கே ஒரு களங்கமாக விளங்கி வருகிறது. இது தொடர்ந்து ஆண், பெண் இரு பாலரிடத்தும் ஒப்ப நடந்து வந்தன.*

**பெண்ணிய ராடுரெல்லாங்குங் கண்ணீற் பொதுவுண்ட**

**நண்ணேன் பரத்தநின் நடப்பு**

*என்னும் தலைவி கூற்றால் விளங்கும். பின்னர் அது ஆடவர் தம் காதலை காமத்தை கழித்துக் கொள்ளும் கருவியாக ஒரு வகுப்பினரையே உண்டாக்கி விட்டது. அத்தீமை சென்னை திருவாட்டி டாக்டர் முத்துலெட்சுமி அம்மையார் அவர்களால் சட்டம் மூலம் ஒழிக்கப்பட்டது. எனினும் இன்னும் வேறு வடிவில் நடைமுறையில் இருந்து கொண்டு தான் இருக்கிறது. ஆடவர்கள் அனைவரும் ஒழுக்கக் கட்டுப்பாட்டைவுடையவர்கள் ஆனாலன்றி அத்தீமை ஒரு நாளும் ஒழியாது. ஆண் மக்களுக்கு ஒழுக்கக் கட்டுப்பாட்டுணர்ச்சி உண் டாக்க வேண்டும் என்பர்.*[29]

**ஊரும் சேரியும்**

*கொற்கை நகரில் முத்துக்குளிப்பவர் சேரியும், சங்கு எடுப்பவர் சேரியும் குறிக்கப்பட்டுள்ளன. (ம.கா.அடி. 135-6) மதுரை மாநகரில் சேரிகள் இருந்தன. (ம.கா. அடி. 615) நன்னன் தலைநகரிலும் சேரிகள் இருந்தன. (ம.கா. அடி. 619) சேரி என்பது இக்காலத்தில் சிற்றூர்க்கு வெளியில் தாழ்த்தப்பட்டவர் வாழும் தெருக்களைக் குறிக்கின்றது.*

**ஏமப்பேரூர்ச் சேரி** *(தொல். அகத். 983)*

என்னும் தொடர் வந்துள்ளது. பாதுகாவல் பொருந்திய பெரிய ஊரைச் சேர்ந்த சேரி என்பது இத்தொடரின் பொருளாகும். எனவே ஊருக்கு வெளியே அவ் வூரை அடுத்து இருந்த குடியிருப்பு, சேரி என்று பெயர் பெற்றது என்பது இதனால் தெரிகிறது. இந்த உண்மையை,

**ஊரும் சேரியும் உடனியைந்து அலர் எழ**

என்ற அடிகள் காட்டும்.

உள்ளுறை பொருளாவது

இங்கு நீர் என்பது பரத்தையர் சேரியாகும். அதன் கண் மலர்ந்த நீலமலர் கருங்குவளை-காமச்செல்வி உடைய பரத்தையராவர். மலர்களை விற்பவர் பரத்தையரைத் தேரேற்றிக் கொண்டு வருபவர். அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாவான். யானை மத நீர் சேரிப்பரத்தையர் - இரவு முல்லை, இற் பரத்தை பழைய இருப்பிடமாய் குளம்-தலைவனது வீடு-குளத்தின் மலர் - தலைவி.

பாணர்கள் தேரேற்றிக் கொண்டு வந்து பரத்தையருடன் வந்து சேரிப் பரத்தையுடன் மகிழ்ந்திருந்து விட்டு, இற்பரத்தையுடன் இரவில் கூடி, தலைவியை மறந்துவிட்டான். தலைவன் என்பதே இப்பாட்டின் உள்ளுறை பொருளாகும்.

பரத்தையுடன் கூடி வந்த தலைவனுடன் ஊடல் கொள்ளும் தலைவி, தலைவன் நடத்தையைத் தான் அறிந்திருப்பதை மறைமுகமாகக் கூறுகின்ற முறையில் அமைப்பது படிப்போர்க்கு இன்பச் சுவை நல்கும் பெற்றியது [21] என்பர். [30]

**ஏழறு கிளவி சொல்லிய எதிரும்** (தொல்.கற். 1092)

***காமக் கிழத்தியர் நலம் பாராட்டிய***

***தாயர் கண்ணிய நல்லணிப்புதல்வனை***

***மாயப் பரத்தை யுள்ளிய வழியும்***

***பரத்தை மறுத்தல் வேண்டியும்*** *(கற். 1104)*

***பரத்தையிற் பிரிந்த காலை***

***பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே*** *(பொரு. 1170)*

***கற்பு வழிப்பட்டவள் பரத்தை ஏத்தினும்*** *(பொரு. 1179)*

இப்பரத்தைமை காரணமாகத் தலைவன் பிரிந்தால் வீட்டிற்கு வந்துவிட வேண்டிய காலம் சுட்டியுணர்த்தப்படுகின்றது. அக்காலம் மக்கள் தொகை பெருக வேண்டுமென்று எண்ணிய காலம். இக்காலம் போல் குழந்தைகளைப் பெறாதே என்று கூறினர் இலர். குழந்தைகளைப் பெறுக என வாழ்த்தினர். குழந்தைகளைப் பெற வேண்டுமென்றால் கருத்தரிக்கும் காலத்தில் மனைவி உறைதல் வேண்டும். கருத்தரிக்கும் காலம் பூப்பூத் தோன்றி மறைந்த நாள் முதல் பன்னிரண்டு நாட்களே. அன்றைய ஆராய்ச்சியாலும் இது உறுதிப்படுத் தப்படுகின்றது. பூப்பு வெளிப்பட்ட பத்தாம் நாளிலிருந்து பதினைந்தாம் நாள் வரையில் தான் கருத்தோன்றும் என்பர் மேரி உடோப்சு. ஆகவே தமிழர்கள் இத்துறையிலும் கருத்துச் செலுத்தியிருந்தனர் என்று அறிகின்றோம்.

### பரத்தையின் குணத் தன்மை

தலைவியன்பு பண்புகளுக்கு நேர் எதிரானவர் பரத்தை. ஆனால் இப் பரத்தையர் பொருட் பெண்டிர் அல்லர். தொல்காப்பியர் பரத்தையரைக் காமக் கிழத்தியர் என்னும் பெயரால் சுட்டியுள்ளார். தலைவன் பரத்தையர் மீதும், பரத்தையர் தலைவன் மீதும் கொண்ட காமத்தால் இச்சொல் படைக்கப் பட்டிருக்கவேண்டும்.

***மனையோள் ஒத்தலின் தன்னோர் அன்னோர்***

***மிகைப்படக் குறித்த கொள்கைகக் கண்ணும்*** *(தொல்.பொ.கற்.நூ.1097)*

*மனைவியை ஒத்தவள் என்ற கருத்தினால் தன்னை ஒத்த ஏனைய மகளிரினும் மனைவியை ஒத்தவன் என்ற கருத்தினால் தான் உரிமையுடைய வள் என்று பரத்தை நினைக்கும் பாங்கை அறிய முடிகிறது. வீதிவீதியாய்த் திரியும் கீழ் மகள் அல்லள். பரத்தைக் குலத்தவளேனும் இல்லறத்தின் பகைத் தியல்லள். சிலப்பதிகாரத்தின் மாதவி போன்று ஆடலும் பாடலும் சான்றவள். கலை பயின்றவள் பெரும்பாலான குடும்பப் பண்பு உடையவள் என்பர்.* [31]

*பரத்தையின் ஆடல் பாடலில் மயங்கினான் எனக் கேட்ட தலைவி அப் பரத்தையை இழித்துரைக்கிறாள். பரத்தை தன்னைப் பழித்தமையைக் கேள்வி யுற்றுக் காவிரி வெள்ளத்தில் தன் கணவனை இழந்து ஆதிமந்தி வருந்தியது போன்று இவளும் (தலைவியும்) வருந்துமாறு செய்வேன் என்று பரத்தை சூளுரைப்பதை இப்பாடல் விளக்குகின்றது.*

***புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்***

***இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்*** *(தொல்.பொருள்.கற்பு.310)*

*என்ற நூற்பாவால் புலனாகும்.*

**பரத்தையின் பிரிவின் வகை**

*நம்பியகப் பொருளில் கூறப்படும் பிரிவுகள் அயல்மனைப் பிரிவு அயற்சேரியின் அகற்சி, புறநகர்ப் பிரிவு என்று மூன்று வகையாக உள்ளன.*

*1. அயன்மனைப் பிரிவு - தலைவன் காமக் கிழத்தியின் பொருட்டு அயன்மனை பிரிவான்.*

*2. அயற்சேரிப்பிரிவு - பின்னர் வரைந்த பெதுமைக்காகவும் இனிமை பொருந்திய விழாக்களுக்காவும் தலைவன் அயற்சேரிக்குப் பிரிவான்.*

*3. புறநகர்ப் பிரிவு - புதிய பரத்தையைப் பெரிய தேரில் ஏற்றிக் கொண்டு இளமரக் காவல் விளையாட்டிற்கும் (காசோலை) புலையாடுதற்கும் தலைவன் நகர்ப்புறத்தே செல்வான், இதனால் தலைவியிடம் ஊடல் நிகழும்.*

அயல்மனைப் பிரிவு

***கெழீஇய காமக்கிழத்தியர் பொருட்டாத்***
***தழிஇய அயல்மனைத் தலைவன் பிரியும்*** *(நம். 64)*

***பின்னர் வரைந்த பெதும்மையும் பரத்தையும்***
***.... அவன் அயற்சேரியின் அகலும் என்ப*** *(நம். 65)*

***இளமரக் காவில் வினையா டற்கும்***
***புனல் ஆடற்கும் புறநகர் போகும்*** *(நம். 66*

*மனம் பொருந்திய காமக்கிழத்தியின் காரணமாகத் தலைவன் தன் வீட் டிற்கு அருகியுள்ள தலைவன் மீது அன்பு கொண்டு வாழ்க்கை நடத்தும் அயல் மகளிர்.*

*இவர்கள் திருமணம் செய்து கொள்ளாமலே வாழ்க்கை நடத்துவர். குடும்பம் நடத்தும் அயல் மகளிர் தலைவன் அயன்மனைப் பிரிவு நிகழ்வதற் குக் காரணம் நட்பின் மிகுதியாகும். தலைவன் தன்மனை பிரிந்து அயர் மனை கொள்ளுதற்குக் காரணமாக இருப்பது ஆங்கு இருக்கும் நட்பு மிகுந்த காமக் கிழத்தியர் ஆவர்.*

இளம் வயதுடைய பெண்ணும் காதற்பரத்தையும் இனிய தன்மைக் கொண்ட விழாக்கள் நடைபெறும் போது அதன் காரணமாகக் கொண்டு தலைவன் அயற்சேரியல் அடைவதற்குக் காரணமாகும்.

மரம் செடிகள் அடர்ந்த தோப்பு சோலைகள் மிகுந்துள்ள இடங்களில் விளையாடுவதற்கும், அருவி அல்லது ஆறு முதலிய இடங்களில் நீராடி மகிழ்வதற்கும் பரத்தையை தேரின் மீது ஏற்றிக் கொண்டு தலைமகன் புகர்ப்புறம் செல்வான்.

### தலைவிக்கு ஊடல் நிகழும் இடம்

ஊடல் நிகழும் கிழத்திக்கு மேற்குறித்த அயல் மனைப்பிரிவு, அயற்சேரிப் பிரிவு, நகர்ப்புறம் போதல் ஆகிய மூன்று காரணங்களால் தலைவி தலைவன்மீது ஊடல் கொள்வான்.

### ஊடலைத் தீர்க்க உதவும் வாயில்கள்

தூதுவர்கள், இசை வல்ல பாணன், பாடினி, கூத்தர், இளையர், (வேலையாட்கள்) கண்டோர், பார்ப்பனப் பாங்கன், ஏனையப் பாங்கன், தேர்பாகன், பாங்கி, செவிலி, அறிவர், காமக்கிழத்தி ஆகியோர் ஊடல் நோயைத் தீர்க்கும் மருந்தாகிய வாயில்கள் ஆவர்.

**வாயில் வேண்டல் வாயில் மறுத்தல்**
**வாயில்நேர் வித்தல் வாயில் நேர்தல் என்று**
**ஆய பரத்தையின் அகற்சிநால் வகைத்தே** *(நம். 204)*

தலைவியின் உடல் போக்கத் தலைவியின் தோழியைத் தூதாக வேண்டுவர். வாயில்களை அணுகாமல் தலைவி மறுத்து கூறுவர். வாயிலைத் தலைவி

*ஏற்கும்படி செய்வர். வாயிலை ஏற்றுக் கொண்டு தலைவி ஊடல் தீர்தல் ஆகிய நான்கும் பரத்தையர் பிரிவின் வகைகளாகும்.*

***ஊடல் வகைகள்***

*பரத்தையர் காரணமாகத் தலைவன் பிரிந்து செல்வான். அதனால் தலைவிக்கு தலைவன் மீது கோபம் ஏற்படும். பிறகு அது ஊடலாக மாறும், வாயில்கள் எடுத்துச் சொல்லத் தலைவி ஊடலைத் தீர்வது ஊடலைத் தீர்க்க அவர்கள் கொண்டு வந்த பொருள்களை ஏற்காமல் சொன்ன சொற்களைத் தலைவி நீட்டிப்பது ஆகும்.*

***காதற் பரத்தை எல்லார்க்கும் உரித்தே*** *(இறை.அக.சூ.40)*

*பரத்தையர் பிரிவு என்பது எல்லா பிரிவினர்க்கும் உரியதாகும். காதல் பரத்தையர் பிரிவானது பரத்தை என்பதற்குத் தலைவனால் காதலிக்கப்பட்ட பரத்தை என்று பொருள்.*

*பரத்தையரின் ஆடல், பாடலையும் ஒரு பொழுது கண்டவன் மீண்டும் விரும்பிப் போதல் இயல்பு, தலைமகனுக்குப் பரத்தையர் பிரிவு நிகழ்ந்தால் ஊடல், புலவி உண்டாதல் இயல்பே, இவை உண்டானால் பின்னர் நீங்கி, பிறகு கூடும்பொழுது பெரியதோர் இன்பத்தைக் காண்பர்.*

***பரத்தையர் பிரிவே நிலத்திரிபின்றே*** *(இறை.அக.சூ.42)*

*பரத்தையர் பிரிவில் இட மாறுபாடு இல்லை. நாடு இடையிட்டும் காடு இடையிட்டும் பிரியும் பிரிவு பரத்தையர் பிரிவில் இல்லை. பரத்தையர் பிரி வானது ஓர் ஊரில் அல்லது ஓர் இடத்திலேயே நிகழும்.*

***பரத்தையின் பிரிந்த கிழவோன் மனைவி***

***பூப்பின் புறப்பாடீரறு நாளும்***

***நீத்தகன் நுறைதல் அறத்த தன்றே*** *(இறை.சூ.43)*

*தலைவிக்குப் பூப்புத் தோன்றிய நாள்முதல் மூன்று நாள் தலைவன் அவளுடைய சொல் கேட்டிருத்தல் நிகழும். அவன் பரத்தையர் வீடு சென்றதனால் அவள் பொறாமை, பிணக்குக் கொண்டிருப்பாள். அம்மூன்று நாளும் சொல் கேட்பதன் மூலம் அவை நீங்கப் பெறும். அந்தக் காலத்தில் நாடுகளுக்கிடையே அடிக்கடி போர் நிகழும். வயது வந்த ஆடவர் அனைவரும் போருக்குச் செல்லுவதற்குரியவர். ஆகவே ஆடவர் தொகை நாளுக்கு நாள் குறைந்து வரும். எனவே ஆடவர் பலர் மகளிரை மணக்க வேண்டி வந்துள்ளது. மனைவியாக வாழ முடியாது போனாலும் பரத்தையாக வேணும் வாழ முற்பட்டிருக்க வேண்டும். செல்வப் பெருக்குடைய ஆடவர் அழகிய இளம்பெண்களுடன் பொழுது போக்குதலைத் தேடிக் கொண்டனர். பரத்தையின் தோற்றம் இவ்வாறு நிகழ்ந்தது. இப்பரத்தையர்கள் முதலில் ஒருவனுக்கே உரிமை மகளிராக இருந்தனர். ஆனால் காலப்போக்கில் விலை மகளிராக மாறும் நிலை ஏற்பட்டு விட்டது.*

*இந்து மதக் கொள்கைப்படி ஒருவனுக்கு ஒருத்தியென வாழ்வதாகக் காட்டிக் கொள்வோம். ஆனால் எந்த ஆடவனும் தன் மனைவியை அன்றி பிற பெண்ணை நாடாது இருக்கின்றானா? கடற்கரையிலும் நாடக மன்றங்களிலும் பிற இடங்களிலும் வேறு பெண்ணின் தொடர்பைப் பெற்று மகிழ்ந்து கொண்டு தான் இருக்கிறான். ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்ளை தோற்று விட்டது என்பர்.* [32]

*ஆகவே, ஆடவர் ஒரே பெண்ணோடு வாழ்வது என்பது மிக மிக அரிது. பண்டைத் தமிழகத்தில் பரத்தையர் இருந்தனர் என்று எண்ணி நாணமுறுதல்*

வேண்டாம். வேற்று நாட்டில் உள்ளது போல் அரசு வருவாய்க்குரியதாகப் பரத்தமை கொள்ளப்படவில்லை. அரசுரிமை அளித்து வரிப்பெற்று பரத்தை யரைத் தொழில் புரியுமாறு நம் முன்னோர் செய்து கொள்ளவில்லை. இப் பரத்தைமையும் இலக்கியங்களில் மருதத்திணையில் ஊடற்பொருளை மிகுத்துக் காட்டக் கொள்ளப்பட்டதேயன்றி வாழ்வில் உண்மையாகக் கொண் டோர் அரசரும் வீரரும் ஆகும்.

### கைக்கிளையும் பெருந்திணையும்

அகத்திணையும் என்றதனாலே கைக்கிளையும், பெருந்திணையும் சுட்டி ஒருவர் பெயர் கொண்டுங்கொள்ளாதும் வருமெனவும் கொள்க. அகத்திணை எனவே அகமென்பது நடுவுநின்ற ஐந்திணையாதலிற் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் நிற்றலின் அகப்புறமென்று பெயர் பெறுதலும் உண்டு. [33]

### அகமும் புறமும் இணைப்பு

கைக்கிளையும், பெருந்திணையும் அகத்திணை என்பதைத் தொல்காப் பிய நூற்பாவால் அறிய முடிகிறது.

> **அடியோர் பாங்கினும் வினைவிலர் பாங்கினும்**
>
> **கடிவரையில புறத்து என்மனார் புலவர்** *(தொல்.அகத். 969)*

என்று கூறியிருப்பது உரையாசிரியரும் அதற்கு ஏற்ப புறநானூற்றுத் தொகுப் பாசிரியர் கைக்கிளை, பெருந்திணைகளைத் தொடுத்தனர். அவர் குறிப்பிற் கேற்ப இலக்கண நூல்களும், கைக்கிளையும் பெருந்திணையும் அகத்தின் புறம் என்றே கொண்டுயுள்ளன.

> **கைக்கிளை என்றா பெருந்திணை என்றாங்கு**
>
> **அகத்திணை இரண்டும் அகத்திணைப் புறனே**

***ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டும் ஆயுதங்கள்***

***காந்தல் கலிமடன்மா ரானாதல்***

*என வரும் பன்னிருபடல மேற்கோள் நூற்பாக்கள் அகத்திணை, பெருந்திணை இரண்டையும் அகப்புறம் என தனியே எடுத்துக்காட்டுகின்றன என்பது க.ப. அறவாணனின் கருத்தாகும்.*

*மேலும் நம்பியகப் பொருளில்,*

***காமம் சாலா இளமையோன்வயின்***

***…இறப்பர் கூறுவது அகப்புறக் கைக்கிளை*** *(நம்பி.அகப். 241)*

*உரையாசிரியர்கள் பலரும் கைக்கிளை பெருந்திணைகளை அகத்தினின்று மெல்ல அகற்றி அகப்புறம் எனப் பெயரிட்டுப் பின்னும் அகற்றிப் புறம் ஆக்கிவிட்டதைப் பிற்கால நூல்கள் காட்டுகின்றன. கைக்கிளை, பெருந்திணைகள் அகப்புறத்திணை என்று கூறினும் முன்னையோர் அகத்திணைக்குள் அவற்றை அடக்கிவிட்டனர்.*

**கைக்கிளை**

*ஆண், பெண் எனப்படும் இருசாராருள் ஒருவர் மட்டும் காதலித்தல் ஆகும். காதலைப் பற்றி அறிந்து அதன் இன்பம் துய்க்கும் பக்குவம் பொருந்தப் பெறாத இளையாள் ஒருத்தியிடம் ஒருவன் தன் காதல் குறிப்பை அறிவித்து அவளிடம் அதற்குரிய வாய்ப்பினைப் பெறாது வருந்துவான். வருந்துங்கால் இவனை யான் தலைவியாகக் கொண்டால் தான் உயிர் வாழ்வேன். இல்லையேல் என் வாழ்வால் பயனில்லை. என் காதல் நோய்க்கு இவன் மருந்தாவாள். அங்ஙனமிருந்தும் இவளும் விரும்பிலாள். இவள் பெற்றோரும் இவளை எனக்கு மணம் செய்ய எண்ணிலரே என வருந்திப் பலவாறு கூறவும், அக்கூற்றுக்கு மாற்றாகக் காதலிக்கப்பட்டவரோ அவள் சுற்றத்தாரிடமிருந்தோ எவ்வரைவும் பெறாமல் தானே நினைந்து சொல்லி அச்சொல்லுதலிலே இன்பம்*

காணுவான். காதல் எண்ணம் அவனிடம் இருக்கின்றது. அவளிடம் இல்லை. ஆகவே ஒருதலைக் காதல் ஆயிற்று.

பெருந்திணை என்பது பொருந்தாத காதல். அது நான்கு வகைப்படும். காதலியைத் தான் விரும்பியவாறு அடையப் பெறாமல் மடலேறி அடைய முயலுதல், மணப் பருவத்திற்குரிய இளமை கழிந்த பின்னர் மணக்க விரும்பு தல், தெரிவிக்க முடியாதவாறு அடைய முடியாத காதல் வயப்பட்டு வருந்து தல், காதல் மிகுந்து வலிமையால் கட்டாயப்படுத்திக் கூடுதல் என்பனவே அவை நான்கும் இவை ஓரோரிடங்களில் காணப்படும் நிகழ்ச்சிகளே. [34]

தொகுப்புரை

தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாட்டில் பாலைத்திணைக் கோட்பாடு மிக மிக முக்கியமானதாக உள்ளது. பாலையில் நானிலப் பொதுமையை எடுத்துக்காட்டுகின்றன. பாலை, பிரிவு பற்றியதாக இருப்பதே இதற்கு அடிப்படைக்குரிய பிரிவு நிகழும் என்பதைத் தெரிவிக்கின்றது.

ஓதல், பகை முதலான பிரிவுகள் எல்லாம் அகத்திணையிலே பேசப் பட்டிருப்பதைப் போல் காதலர்களின் முக்கியச் செயற்பாடும், காதலர்கள் செயல்பாடுமாகிய உடன்போக்கும் தொல்காப்பிய அகத்திணையில் பேசப் பட்டுள்ளது. உடன்போக்கு தொடர்பான கொண்டு தலைக்கழிதல், போர் முறைகள் ஆகியவை அகத்தில் கொண்டுள்ளன. கற்பியலில் மட்டுமே பரத்தை யர் பிரிவு பேசப்பட்டுள்ளது.

சான்றெண் விளக்கம்

1. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 83
2. மேலது, ப. 150
3. இராகவையங்கார், தொல்காப்பிய பொருளதிகாரம் ஆராய்ச்சி, ப. 68
4. ச. பாலசுந்தரம், தொல்காப்பிய ஆராய்ச்சி அகத்திணையும் புறத்திணையும், ப.40
5. மேலது, ப. 58
6. வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம், அகத்திணை, ப. 80
7. மேலது, ப. 48
8. மேலது, ப. 52
9. மேலது, ப. 55
10. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 105
11. கே. ராஜகோபாலாச்சாரியார், இலக்கண விளக்கம் (பொருளியல்), ப. 150
12. மேலது, ப. 70
13. மேலது, ப. 110
14. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 156
15. ச. பாலசுந்தரம், தொல்காப்பியம், புறத்திணையியல், ப. 260
16. மேலது, ப. 78
17. மேலது, ப. 84
18. மேலது, ப. 92
19. மேலது, ப. 98
20. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 52
21. மேலது, ப. 60
22. ஆ. சிவலிங்கனார், தொல்காப்பிய உரைவளம், ப. 157
23. புலவர் குழந்தை, தொல்காப்பிய காலத் தமிழர், ப. 70

24. மேலது, ப. 78

25. மேலது, ப. 84

26. கே. ராஜகோபாலாச்சாரியார், இலக்கண விளக்கம் (பொருளியல்), ப. 20

27. புலவர் குழந்தை, தொல்காப்பிய காலத் தமிழர், ப. 70

28. கே. ராஜகோபாலாச்சாரியார், இலக்கண விளக்கம் (பொருளியல்), ப.86

29. மேலது, ப. 70

30. ஆ. சிவலிங்கனார், தொல்காப்பிய உரைவளம், ப. 320

31. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 28

32. மேலது, ப. 86

33. மேலது, ப. 189

34. மேலது, ப. 190

இயல் - இரண்டு

# சங்க இலக்கியத்தில் பிரிவுப் பாடல்கள்

### சங்கப் பாடல்களில் நால்வகைத் திணைப் பகுப்பு

குறிஞ்சி புணர்தலும் புணர்தல் நிமித்தமும் எனக் கூறினாலும் மணத் திற்கு முற்பட்ட நிலையைக் கூறுவதே, திருமணத்திற்கு முன்னைய களவு ஒழுக்கத்தைக் குறிஞ்சி என்றும் திருமணத்திற்குப் பின்னைய பிரிவு (பாலை), இருத்தல் (முல்லை), இரங்கல் (நெய்தல்), ஊடல் (மருதம்) ஆகிய இவற்றைக் கற்பு என்றும் கொள்ள வேண்டும். சங்க இலக்கியத்தில் முல்லைத் திணைப் பாடல்களிலும் நெய்தல் திணைப் பாடல்களிலும் களவு ஒழுக்கம் பேசப் படினும் குறிஞ்சித் திணைப் பாடல்களில் கற்பு ஒழுக்கம் அருகிய நிலை யிலேயே பேசப்படுகிறது. எனவே குறிஞ்சியினைக் களவு எனக் கூறுவது பொருந்துவதாகும். இவ்வாறே பாலையைக் கற்புக்கு மட்டுமே உரியதாகக் காட்டுவதும் பிரிவைக் கற்புக்கு மட்டுமே உரியதாகக் காட்டுவதோடு பொருந் தும் களவு பற்றிய பாடல்கள் பிற திணைகளிலும் விரவி வருகின்றன. இதைப் போலவே பிரிவு பற்றிய பாடல்களும் பிற திணைகளில் விரவி வருகின்றன.

### பாலைத்திணை

பாலை என்பது பொது வரையறையாக இருந்தாலும் பாலையில் எல் லாப் பிரிவுகளும் அடங்கவில்லை என்பதும் பரத்தையர் பிரிவு பெரும்பாலும் மருதத்திலும் வினைவயிற் பிரிவு வரையறுத்த நிலையில் முல்லையிலும்

வருகின்றன. பாலைப்பாடல்களின் முக்கியச் செயற்பாடாகக் காட்டைக் கடப் பதும் சுரத்தைக் கடப்பதும் பேசப்பட்டுள்ளமை அகநானூற்றுப் பாலைப் பாடல்கள் வழி அறிய முடிகிறது. உடன்போக்கு பெரும்பாலும் பாலையில் பொருண்மையாய் பேசப்பட்டிருப்பது ஐங்குறுநூறு, குறுந்தொகை பாடல்கள் வழி அறிய முடிகிறது. அகநானூற்றில் உடன்போக்கு பற்றிய பாடல்கள் வேறு எந்த திணையிலும் இடம் பெறாமல் பாலையில் மட்டுமே வந்திருப்பதையும் காண முடிகிறது.

### சங்க இலக்கியங்களின் பிரிவுப்பாடல்களின் வகையும் தொகையும் பத்துப்பாட்டுகளின் தனித்தனிப் பெயரீடு

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பாடல்களுக்குப் பாடல்களில் இடம் பெற்றுள்ள தொடர் அடிப்படையிலும் பாடுபொருள் அடிப்படையிலும் பெயரீடுகள் அமைந்துள்ளன.

திருமுருகாற்றுப்படை என்பதற்கு முக்தியைப் பெற்றானொருவன் பெறுதற்குப் பக்குவனாகிய ஓரிரவலனை அது பெறும் பொருட்டு ஸ்ரீ சுப்பிர மணிய சுவாமியிடத்தே வழிப்படுத்தலையுடைய பிரபந்தமெனப் பொருள் கூறுக என்று குறிப்பிடுகின்றார்.

முருகனது அருள் பெற்ற புலவன் ஒருவன் முருகனது அருளைப் பெற அவாவும் புலவன் ஒருவனை அப்பெருமான்பால் ஆற்றுப்படுத்தும் முறையில் பாடப்பட்டதாகும். ''திருமுருகாற்றுப்படை என்னும் பெயர் ஆற்றுப்படை அமைப்பில் முருகனைப் பாடுதல் என் னும் காரணத்தால் ஏற்பட்டது எனல் பொருந்தும். பாடல் தலைவன் பெயரைத் தாங்கி வரும் முதல் நூல் திருமுரு காற்றுப்படையாகும்''[1] என்று முருகனைப் பாடியதால் இப்பெயர் வைக்கப் பட்டது என்றும் பாடல் தலைவனால் பெயர் பெற்ற முதல் நூல் என்றும் குறிப் பிடுகின்றார். ஆற்றுப்படை மரபில் ஆற்றுப்படுத்தப்படுபவர் பெயரில் கூத்தர்,

பாணர், பொருநர், விறலி, ஆற்றுப்படை எனப் பெயரீடு அமைந்திருக்க இதுமட்டுமே ந.செயராமன் குறிப்பிடுவதைப்போல் பாட்டுடைத் தலைவன் பெயரில் அமைந்துள்ளமை ஆற்றுப்படையின் பெயரீட்டில் ஏற்பட்ட மரபு மாற்றம் எனலாம்.

## பத்துப்பாட்டு - தொகுப்பு முறை

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பாடல்களின் தொகுப்பு குறித்து ஔவை துரைசாமிப்பிள்ளை, மாயாண்டிபாரதி ஆகியோரும் திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை வைப்பு குறித்துப் பொ.வே. சோமசுந்தரனாரும் திருமுருகாற்றுப்படை குறித்து ஆறுமுகநாவலர், கி.வா. ஜகந்நாதன், தமிழண் ணல் ஆகியோரும் மலைபடுகடாம் வைப்பு முறை குறித்து லெ.ப.கரு. இராம நாதன் செட்டியாரும் கருத்து தெரிவித்துள்ளனர். பத்துப்பாட்டுத் தொகுப்பு குறித்து முறையே நிறுத்தி வேறுபாடுகள் ஐந்தினை இடையே நிறுத்தி இறுதி யில் கூத்தராற்றுப்படையை வைத்துப் பத்துப்பாட்டு தொகுக்கப்பட்டுள்ளது. இத்தொகுப்பில் உள்ள பாட்டு பத்தினுள் செம்பாகம் ஆற்றுப்படையாகவே இருப்பதும், தொடக்கத்தில் நான்கு ஆற்றுப்படைகளை நிறுத்தி இறுதியிலும் ஆற்றுப்படையே நிற்கத் தொகுத்திருப்பதும் காணுமிடத்து ஆற்றுப்படை யென்பதும் இதனால் அறியப்படும். பத்துப்பாட்டு இவற்றின் முறை வைப் பினை நோக்குழி காலத்தின் ஏற்றத்தாழ்வு கருதியோ, பொருட்சிறப்பினைக் கருதியோ அடிகளின் அளவு கருதியோ அமைக்கப்பட்டதாகக் கூறுதற்கில்லை. வேறு எக்கருத்து பற்றி முறைப்படுத்தினர் என்பதை உறுதிப்படுத்தும் சான்றும் கிடைத்திலது.

**முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வள மதுரைக் காஞ்சி, மருவினிய**
**கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி பாட்டினப்**
**பாலை கடாத் தொடும் பத்து**

என்ற வெண்பாவால் அறியலாம். முருகு பொருநாறு என்ற பாடலில் சுட்டப் பட்டுள்ள வரிசை முறையைக் குறிப்பிடுகின்றார். இது பத்துப்பாட்டு இவை என்பதை அந்நூலின் வைப்புமுறை அடிப்படையிலேயே கூறும் பிற்காலப் பாடலாய் உள்ளது. பதிப்பித்த அனைவருமே இந்நிரலிலேயே பதிப்பித்துள் ளமை ஓலைச்சுவடிகளிலேயே இவ்வைப்புமுறை இருந்ததைத் தெரிவிக்கிறது. திருமுருகாற்றுப்படை பத்துப்பாட்டில் முதலில் வைக்கப்பட்டது குறித்து பொ.வே. சோமசுந்தரனார் குறிப்பிடுகிறார்.

நிலையுதலின்றி அழிதன் மாலைத்தாகிய பொருள்களை வழங்கும் மானிட வள்ளலைப் பாடிய ஏனைய ஆற்றுப்படைகளிலும் அழிதலில்லாத வீட்டின்பத்தையே வழங்கும் அழிவற்ற இறைவனைப் பாடும் இவ்வாற்றுப் படை எவ்வாற்றாலும் சாலச் சிறந்ததெனக் கருதியே பத்துப்பாட்டுள் முதற் பாட்டாக நிறுத்தியுள்ளனர் என்று இறைவனைப் பாடியதால் முதலில் வைக்கப் பெற்றுள்ளது.

பாட்டுடைத் தலைவன் திருமுருகன் ஆற்றுப்படுத்தப்பட்டவன் அத் தெய்வத்தின் அருள் பெறுதற்குரிய புலவன் எக்காரணம் பற்றியே பத்துப் பாட்டில் திருமுருகாற்றுப்படை முதலில் வைக்கப்பட்டது என்கிறார் கி.வா. ஜகந்நாதன்.

திருமுருகாற்றுப்படை முருகன் பெருமையைச் சொல்வது. ஆகவே, முருகன் சங்க நூல்களில் முதலில் நிற்கிறான். நிலத்தில் முதல் திணையாக நிற்பது குறிஞ்சி அந்தக் குறிஞ்சிக்குத் தலைவனாக முருகன் இருப்பதனால் அந்த நூலைப் பத்துப்பாட்டில் சங்க நூல்களுக்கு எல்லாம் முதலிலே வைத்துப் போற்றினார்கள் என்று புலவர் அடிப்படையிலோ கால அடிப்படையிலோ திருமுருகாற்றுப்படை முதலில் வைக்கப்படாமல் முருகனைப் பாடியதால்

முதலில் வைக்கப்பட்டுள்ளமையைக் குறிப்பிடுகின்றார். பத்துப்பாட்டிற்குத் தனிக் கடவுள் வாழ்த்துப் பாடிச் சேர்க்காமல் இதையே கடவுள் வாழ்த்தாக முதலில் வைத்தனர் என்கிறார் தமிழண்ணல்.

''கூத்தராற்றுப்படை என்ற பெயர் இளம்பூரணர், சேனாவரையர் ஆகிய உரையாசிரியர்களால் தொல்காப்பிய உரையில் எடுத்தாளப் பெற்றிருத்தலால் இப்பாட்டிற்கு இப்பெயர் உரையாசிரியர் காலத்திற்கு முன்பே வைக்கப் பெற்றது என்பது புலனாகும். மேலும் தொல்காப்பியனார் கூத்தராற்றுப்படைக்கு இலக்கணம் கூறியிருத்தலும் நினைத்தற்குரியது.''[2]

அவ்வாறாயின் பத்தாவதாக அமைந்திருக்கும் இப்பாட்டு மற்றைய நான்கு ஆற்றுப்படைகளுடன் சேர்க்கப் பெற்று ஐந்தாவதாக இருக்கலாமே என்ற எண்ணம் எழுகின்றது. ஐந்தாவதாகத் தொகுத்தல் முறையாயினும் மலைபடுகடாம் என்ற பெயர் பெற்றமையால் இப்பாட்டின் இச்சிறப்பு நோக்கி இதனை இறுதியில் சேர்த்தனர் என்று மலைபடுகடாம் இறுதியில் வைக்கப் பெற்றமைக்குக் காரணம், பாடல் சிறப்புக் கருதப்பட்டமையே ஆகும் என்று குறிப்பிடுகின்றார்.

பத்துப்பாட்டின் காலமுறை குறித்து ஆராய்ந்துள்ள எஸ். வையாபுரிப் பிள்ளை, பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பாடல்களை,

1. பொருநராற்றுப்படை
2. பெரும்பாணாற்றுப்படை
3. பட்டினப்பாலை
4. குறிஞ்சிப்பாட்டு
5. மலைபடுகடாம்

6. மதுரைக்காஞ்சி

7. நெடுநல்வாடை

8. முல்லைப்பாட்டு

9. சிறுபாணாற்றுப்படை

10. திருமுருகாற்றுப்படை

இவற்றுள் சிறுபாணாற்றுப்படை முதல் எட்டு நூல்களுக்கும் 2 அல்லது 3 தலைமுறைகள் பிற்பட்டுத் தோன்றியிருக்கலாம். முருகாற்றுப்படை இவற்றிற்குப் பல நூற்றாண்டுகள் பிற்பட்டு இயற்றப்பெற்றிருக்க வேண்டும் என வரிசைப்படுத்துகின்றனர். ச.அகத்தியலிங்கம் பத்துப்பாட்டின் தொகுப்பைக் கால அடிப்படையில்,

1. பொருநராற்றுப்படை

2. பெரும்பாணாற்றுப்படை

3. பட்டினப்பாலை

4. மலைபடுகடாம்

5. குறிஞ்சிப்பாட்டு

6. மதுரைக்காஞ்சி

7. நெடுநல்வாடை

8. முல்லைப்பாட்டு

9. சிறுபாணாற்றுப்படை

10. திருமுருகாற்றுப்படை என வரிசைப்படுத்துகின்றார்.

**எட்டுத்தொகை**

**அக இலக்கியத் தொகுப்புநெறி**

**அகநானூறு**

எட்டுத்தொகையுள் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய மூன்று நூல்கள் அடியளவிலான தொகுப்பில் காணப்படுகின்றன. அகநானூறு தொடர்பான வெ ளியான அனைத்துப் பதிப்புகளும் மூலப்பிரதிகளின் பாடல் வைப்பில் எவ்வித மாற்றமும் இன்றி மரபான திணை அடிப்படையிலான தொகுப்பிலேயே அமைந்துள்ளன.

அகநானூறு என்ற பெயரே முந்தியது என்பது குறித்து அகநானூற்றுச் சொற்பொழிவுகளில் ஆர்.வேங்கடாசலம் பிள்ளை குறிப்பிடுகிறார்.

**தொகுப்பு முறை**

அகநானூற்றுத் தொகுப்பில் இரண்டு விதமான தொகுப்பு முறைகள் காணப்படுகின்றன. 120,180,200 எனப் பாடல்களை மூன்று தொகுதிகளாய்ப் பிரித்து முத்தலைப்பில் வெளியிட்டமை ஒன்று அகநானூற்றின் ஒட்டு மொத்தப் பாடல்களையும் திணை அமைப்பில் முறைப்படுத்தி அமைத்தமை பிறிதொன்று.

**மூன்று தொகுதிகள்**

அகநானூறு களிற்றியானை நிரை, மணிமிடைப் பவளம், நித்திலக் கோவை என்னும் மூன்று தலைப்புகளுடன் மூன்று தொகுதிகளாய்த் தொகுக் கப்பட்டுள்ளது. மணிமிடைப்பவளம் என்ற தொடர் மணிமிடைப் பவளத்துள் காணப்படாத மற்றிரண்டு பகுப்பினுள் காணப்படுவதைச் சுட்டிக்காட்டிக் கருத்தாலும், நடையாலும் உவமையாகு பெயராக இடப்பட்டுள்ளது என்று குறிப்பிடுகின்றார். நித்திலக்கோவை என்பதற்கு நித்திலம்- முத்து கோவை - கோக்கப்பட்ட மாலை, நித்திலக்கோவை முத்துமாலை ஓரின மணியாகிய முத்துக்களால் கோக்கப்பட்ட முத்துமாலை போல நடையாலும் கருத்து

வெளிப்பாட்டாலும் ஒத்த இயல்புடைய பாக்களால் தொகுக்கப்பட்ட நூலுக்கு நித்திலக்கோவை என்னும் பெயர் உவமையாகு பெயராய் வழங்கப்பட்டுள்ளது எனக் கருத்து தெரிவித்துள்ளார்.

''களிற்றுயானை நிரை, மணிமிடைப்பவளம், நித்திலக்கோவை என்ற ஒவ்வொரு தொகுதியும் பாலைத்திணையில் தொடங்கி நெய்தல் திணையில் நிறைவு பெற்றுள்ளது. இவ்வியைபு ஒன்று தான் மூன்று தொகுதிகளிலும் காணப்படும் பொதுத் தொகுப்பு மரபாய் உள்ளது. குறிஞ்சிப் பாடல்கள் எண்பதில் 40 பாடல்கள் 2-ஆம் எண் கொண்டவையாயும் எஞ்சிய 40 பாடல்கள் 8-ஆம் எண் கொண்டவையாகவும் வைக்கப்பட்டுள்ளமையால் 2-ஆம் எண்ணில் முடியும் பாடல்கள் 1-ஆம் எண்ணில் முடியும் குறிஞ்சிப் பாடல்கள் 7-ஆம் எண்ணுள்ள பாலைப் பாடலை அடுத்தும் அமைகின்றன. இவ்வாறு 80 குறிஞ்சிப் பாடல்களும் இத்தொகுப்பில் அமைக்கப்பட்டுள்ளன.'' [3]

### தலைமகள் கூற்று

தலைமகள் கூற்றில் மொத்தம் 100 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் 86 பாடல்களுக்கு ஒரு கூற்று சுட்டப்பட்டுள்ளது. தலைமகள் கூற்றில் 182 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

### தோழி கூற்று

அகநானூற்றுப் பாடல்களில் மிகுதியான பாடல்கள் தோழி கூற்றுப் பாடல்களாகவே உள்ளன. தோழி கூற்றில் 142 பாடல்கள் காணப்படுகின்றன.

### திணைக் குறிப்பு

அடியளவு அடிப்படையில் தொகுக்கப்பட்ட தொகை நூல்களுள் அகநானூற்றில் மட்டுமே திணை அடிப்படையிலான தொகுப்பியைபு காணப்படுகின்றது.

உ.வே. சாமிநாதையர் குறுந்தொகைப் பாடல்களுக்குப் பழங்குறிப்பு களினடிப்படையில் கூற்று எழுதி கூற்றடிப்படையில் தலைப்பிட்டுப் பதிப் பித்துள்ளார்.

### கூற்று கேட்போர் அடிப்படையிலான இயைபு

குறுந்தொகையில் தலைமகன், தலைமகள், தோழி, கூற்றுகளில் கூற்று, கேட்போர் அடிப்படையில் சில இடங்களில் இயைபு காணப்படுகின்றது.

### கேட்போர்

குறுந்தொகையில் தலைமகனைக் கேட்போனாகக் கொண்டு 60 பாடல் கள் காணப்படுகின்றன. குறுந்தொகைப் பதிப்புகளில் கூற்று, திணை, திணை யும் கூற்றும் - புலவர் பெயர், பாடலில் இடம் பெற்றுள்ள சொல் பாடுபொருள் என்கின்ற ஆறு அடிப்படைகளில் பாடல்களுக்குத் தலைப்பிட்டுப் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

### நற்றிணை

எட்டுத்தொகை நூல்களில் திணை என்னும் பெயரீடு பெற்றுள்ள நற் றிணையில் திணை, கூற்று, பாடலாசிரியர் அடிப்படைகளில் எவ்விதமான தொகுப்பினையும் இடம் பெறவில்லை. அடியளவு ஒன்றினாலேயே இத் தொகுப்பு நூல் வரையறைப்படுத்தப்பட்டுள்ளது.

### திணை

நற்றிணைப் பாடல்களுக்கான திணைகள் தொகுத்தவர்களால் கொடுக் கப் பெறவில்லை. பதிப்பித்தவர்களே திணை குறிப்பிட்டுப் பதிப்பித்துள்ள னர். அ.நாராயணசாமி ஐயர் பதிப்பில் பாடல்களுக்குத் திணை குறிப்பிடப்பட் டுள்ளது. ஆனால் திணை எந்தச் சுவடியை அடிப்படையாகக் கொண்டு வரை யறை செய்யப்பட்டது என்பதற்கான காரணங்கள் குறிப்பிடப் பெறவில்லை.[4]

### ஐங்குறுநூறு

எட்டுத்தொகையுள் ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய இரண்டும் திணை வாரியாய்த் தொகுப்பட்டுள்ளன. தனித்தனிப் புலவர்களால் பாடப் பட்ட ஐந்திணைப் பாடல்களின் தொகுப்புகளாய் இவை உள்ளன. ஐங்குறு நூற்றின் அடிவரையறையில் குறைந்த அளவான 3 அடியிலும், அதிக அளவான 6 அடியிலும் முறையே 54 பாடல்களும் 23 பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

எஞ்சியுள்ள அடியளவில் 4 அடியில் 248 பாடல்களும் 5 அடியில் 173 பாடல்களும் காணப்படுகின்றன.

### ஐங்குறுநூற்றின் திணை வைப்பிற்கான காரணங்கள்

ஐங்குறுநூற்றுப் பாடலில் திணைகள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளமைக் கான காரணம் குறித்து உ.வே. சாமிநாதையர் (1957) நூலின் முன்னுரையில், முதன் முதலில் இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் முறையே மலை நாட்டுப் புலவரும் மலை நாட்டரசருமாதலால் ஆதனவினியென்னுஞ் சேரனைத் தலைவனாய்ப் பெற்ற முதற்பத்தையுடைய மருதம் முதலிலும் தொண்டிப்பத்தையுடைய நெய்தல், மருதத்தின் பின்னும் மலை நாட்டரசர் களைப் பாடி மலைநாட்டிற் பெரும்பாலும் வதிந்து, மலைவளம் பாடுதலிற் புகழ்பெற்ற கபிலர் பாடிய குறிஞ்சி நெய்தலின் பின்னும் நோக்கப்  பெற்றன வென்று இம்மூன்றிற்கும் ஒருவாறு முறை கூறலாமாயினும் பாலையும் முல்லையும் இவற்றின் பின்னர் முறையே அமைக்கப் பெற்றதற்குக் காரணம் ஒருவாற்றாலும் விளங்கவில்லை என்கிறார். [5]

### கலித்தொகை

தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய மூன் றிலும் திணைப்பாடல்கள் கலந்து காணப்படுகின்றன. ஆனால் ஐங்குறுநூறு,

கலித்தொகை இரண்டிலும் குறிப்பிட்ட திணைப்பாடல்களை ஓரிடத்தில் வைக்கும் திணை அடிப்படையிலான தொகுப்பியைபு இடம் பெற்றுள்ளது.

### பாவகையும் பெயரீடும்

எட்டுத்தொகையில் ‘பா’ வேறுபாட்டுவுடன் படைக்கப்பட்டவை கலித்தொகையும் பரிபாடலுமே ஆகும்.

### திணை வைப்பு

சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே என்பதனால் கலித் தொகைப் பாடல்களுக்கான திணை வைப்பு சொல்லாத முறையிற் சொல்லப் பட்டுள்ளது என்று கலித்தொகைக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியரும், பதிப்பித்த சி.வை.தாமோதரம்பிள்ளையும் சிவ. கண்ணுசாமியும் தமது பதிப்பு முன்னுரையில் குறிப்பிடுகின்றனர். கலித்தொகைப் பாடல்களுக்குக் கூற்றுகள் வகுக்கப் பெற்றுள்ளன.

### மன்னர் தொகுப்பியைபுகளும் அறிஞர் கருத்துகளும்

புறநானூற்றுப் பாடல்களில் வேந்தர், குறுநில மன்னர், சீறூர் மன்னர் ஆகியோருடன் தொல்குடி மன்னர் எனச் சுட்டப்பெறும் முதுகுடி மன்னர்களும் (பெ.மாதையன், 1989:51) இடம் பெற்றுள்ளனர். இந்நால் வகை மன்னர் குறித்த பாடல்களுள்ளும் சில நிலைகளில் தொகுப்பினைக் காண முடிகின்றது.

### தொகுப்பியைபு

புறநானூற்றுப் பாடல்களின் வைப்பு முறையைக் கொண்டு புற நானூற்று பாடல்களின் தொகுப்பியைபை நோக்க, மன்னர் நிலையிலும், திணைத் துறையமைப்பிலும் ஒருவகைத் தொகுப்பியைபு இருப்பது தெரிய வருகின்றது. புறநானூற்றுள் எல்லாப் பாடல்களும் ஒருவகைத் தொகுப்பு

நெறிக்கு உட்பட்டு அமைந்துள்ளனவெனக் கூறவியலாதெனினும், ஆங் காங்கே இவ்வைப்பில் ஒருவகை ஒழுங்கமைவு இருப்பது புலனாகின்றது.

### குறுநில மன்னர்

புறநானூற்றுப் பாடல் வரிசையில் மூவேந்தர்களை அடுத்துக் குறுநில மன்னர்களின் தொகுப்பமைவு காணப்படுகின்றது. குறுநில மன்னர்களுள் வள்ளல்கள் படைத்தலைவர்கள், நிலக்கிழார்கள் என்ற வகையில் தொகுப் பமைவு அமைந்துள்ளது. இவற்றைப் பாடல்களின் வரிசை முறையை அடிப் படையாகக் கொண்டு வள்ளல் பற்றியன பிற குறுநில மன்னர் பற்றியன என இரண்டாகப் பாகுபடுத்தலாம்.

புறநானூற்றுப் பாடல்களின் திணைத் தொகுப்பியைபில் சில இடங் களில் பாடல்கள் இயைபோடு காணப்படுகின்றன. ஆனால் புறநானூற்றுப் பாடல்கள் முழுமையிலும் திணைத் தொகுப்பியைபு பின்பற்றப்படவில்லை. இயைபோடு தொகுக்கப் பெற்றிருக்குமானால் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல் எனத் திணைத் தொகுப்பியைபோடு பாடல்கள் அமைந்துள்ள இடங்களிலேயே அவ்வத் திணைக்குரிய அனைத்துப் பாடல்களும் இடம் பெற்றிருக்க வேண்டும்.

### பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்து சேர மன்னர்களைப் பற்றிய பாடல்களின் தொகுப்பாக உள்ளது. திணை குறிப்பிடப் பெறவில்லை என்றாலும் பதிற்றுப்பத்தின் பாடல்கள் அனைத்தும் பாடாண் திணைக்கு உரியவை என்றும், பதிற்றுப்பத் துப் பாடல்களுக்குத் தொல்காப்பிய மரபு அடிப்படையில் திணையே குறிப் பிடப் பெறவில்லை என்றும் இரண்டு விதக் கருத்துக்கள் நிலவுகின்றன. நச்சி னார்க்கினியர் ஔவை துரைசாமிப்பிள்ளை, சு.அருளம்பலவனார், லெ.ப.கரு இராமநாதன் செட்டியார், இரா.தண்டாயுதம், சுந்தரசண்முகனார் ஆகியோர்

பதிற்றுப் பத்தின் பாடல்கள் அனைத்தும் பாடாண்திணை சார்ந்தனவே என்று குறிப்பிடுகின்றனர்.

துறை

பதிற்றுப்பத்துப் பாடல்களுக்கான துறைகள் தொல்காப்பியம், பன்னிரு பாட்டியல், புறப்பொருள் வெண்பாமாலை, புறநானூறு ஆகிய துறைகளோடு அறிஞர்களால் ஒப்பிடப்பட்டுள்ளன.

பதிகம்

பதிற்றுப்பத்தில் காணப்படுகின்ற பதிகங்களை இயற்றியோர் நூல் ஆசிரியரோ அல்லது தொகுத்தோரோ அல்லர் என்றும் தொகுத்தவர்களாலேயே இயற்றப்பட்டன என்றும், தொகுத்தவர் காலத்துக்கும் உரையாசிரியர் காலத் துக்கும் இடைப்பட்ட காலத்தில் இயற்றப்பட்டன என்றும் கூறுவர்.

பரிபாடல்

பரிபாடலை முதன்முதலாகப் பதிப்பித்த உ.வே.சாமிநாதையர் (1980-12) தமது பதிப்பு முன்னுரையில் பரிபாடல் உறுப்புகள் குறித்து,

''இந்நூல் உரைப்பிரதிகளின் பாடல்களுக்குத் தரவு முதலிய உறுப்புகள் வரையப்படவில்லை. தொல்காப்பிய உரையில் மேற்கோள்களாக வந்த பாடல் களுள் ஆயிரம் விரிந்த வானாரெழிலி என்பனவற்றிற்கு மட்டுமே இளம்பூரண வடிகள் முதலியோரால் உரிய இடங்களில் உறுப்புகள் வரையப் பெற்றிருந் தமையின் அவ்விரண்டு பாடல்கள் மட்டுமே அங்ஙனமே பதிப்பிக்கப் பெற் றன எனக் குறிப்பிடுகின்றார்.

### அடியளவு

*தொல்காப்பியர் (செய்யு.நூ.120) 400 அடியைப் பேரெல்லையாகவும் 25 அடியைச் சிற்றெல்லையாகவும் கொண்டு பரிபாடல்கள் அமையுமென வரை யறைப்படுத்துகின்றார். பரிபாடலின் அடியளவு குறித்து இரா.சாரங்கபாணி (1972:32) கிடைத்த பரிபாடல்களைக் கொண்டு நோக்கும்போது 32 அடிகளை யுடைய கேசவனார் பாடலே (பரி-14) சிற்றெல்லையுடையதென்றும் 140 அடி களையுடைய ஆசிரியர் நல்லந்துவனார் பாடலே (பரி.11) பேரெல்லையுடைய தென்றும் அறிகிறோம் எனச் சிற்றெல்லை பேரேல்லைகளைக் கிடைத்துள்ள பாடலடிப்படையில் வகைப்படுத்துகின்றார்.*

*எழுபது பரிபாடல்களை வகைப்படுத்தும் பழைய வெண்பாவில் திரு மால், செவ்வேள், வையை, மதுரை என்ற வைப்பு முறை காணப்படுகின்றது. தவிர, கிடைத்துள்ள 22 பாடல்களில் திருமாலுக்கு 6 (1,2,3,4,13,15) பாடல்களும் செவ்வேளுக்கு 8 (5,8,9,14,17,18,19,21) பாடல்களும் வையைக்கு 8 (6,7,10,11,12, 16,20,22) பாடல்களும் காணப்படுகின்றன.*

### திணை அடிப்படையில் பிரிவு

### அகவாழ்க்கை

*அகவாழ்க்கை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் எல்லா நிலங்களிலும் நிகழ்ந்திருந்தபோதிலும் அதன்பின் ஐந்திணை அக வாழ்க்கைக்குரியவர் அல்லாதார் என்னும் பிரிவினரை இவை நடுவண் ஐந் திணைக்குரிய தலைமக்களைக் கூறி அதன் புறத்தனவாகிய கைக்கிளை, பெருந் திணைக்குரிய மக்களை உணர்த்துதல் என்று உரையாசிரியார் குறிப்பிடுகின்ற னர். அடியோர்களும் வினைவலர்களும் அன்பின் ஐந்திணைக்கு உரியர் அல்லர். அவர்கள் கைக்கிளை, பெருந்திணை ஆகிய திணைகளுக்கே உரியவர் கள் என்று இந்நூற்பா விளக்குகிறது.*

பொதுவாக காதல் என்பது ஏற்றத்தாழ்வுகள் மறையுமிடம் என்று பலர் கருதுவதுண்டு. தமிழ்க் கவிஞர்கள் இக்கருத்தையே உரைக்கின்றனர். காதல் அடைதல் உயிர் இயற்கை என்று பாரதிதாசன் சுட்டுகிறார். [6]

மனித இனம் மட்டுமல்ல எல்லா உயிர்களுக்கும் இக்காதல் பொது வானது என்று விளக்குகிறார். மாறாக உழைக்கும் வர்க்கத்திற்கு அன்பின் ஐந் திணைக் காதல் இல்லை எனக் கட்டுப்படுத்துவது சங்ககாலச் சமுதாயத்தைப் பற்றி கொண்டுள்ள மதிப்பை சிறிது குறைப்பதாக அமைகிறது. அதற்குக் காரணம் இளம்பூரணர் இந்நூற்பாவுக்கு வழங்கிய உரை எனலாம்.

உரிப்பொருள்

புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனும் ஐந்திணை ஒழுக் கங்களுக்கு உரியவர்கள் உயர் வருணத்தாரே என்றும், பிறருக்கு அடித்தொண்டு செய்து வாழும அடியோரும் உழைத்துப் படியளிக்கும் வினைவலரும் ஐந் திணை ஒழுக்கத்திற்கு உரியராகார் என்பதும் தொல்காப்பியம் காட்டும் சமு தாய நீதி என்று தொல்காப்பியர் சாதி நெறிக்கு உட்பட்டு உயர்ந்தோர்க்கு ஒரு நீதியும், தாழ்ந்தோர்க்கு ஒரு நீதியும் கூறியுள்ளதாகக் குறிப்பிடுகிறார்.

காதல் என்பது எந்த இலக்கண ஆசிரியனுடைய ஆத்திரத்திற்கும் கட்டுப் பட்டு வருவதன்று. அது யாரையும் கேட்டுக்கொண்டு வருவதில்லை. சமு தாயத்தில் பொது மக்கள் வாழ்கின்ற வாழ்க்கையில் காதல் எவ்வாறு இடம் பெறுகிறது என்பது இலக்கண ஆசிரியர்களின் விதிமுறைகளைக் கொண்டு வருவதில்லை. சங்க காலத்தில் பல்வேறு வகையில் மக்களிடையே பாகு பாடுகள் இருந்தன. எல்லாருக்கும் சமமான உரிமையும் உணர்ச்சியும் உண்டு என்பது ஒரு சிலரின் கருத்தாகும். பொதுவாக வறியவர், செல்வர், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பேதங்கள் சங்க காலத்தில் இருந்திருக்கின்றன. குலம், தொழில் ஆகியவற்றை எல்லாம் கடந்தது காதல் என்று போற்றினாலும்

வாழ்க்கை நடைமுறையில் காதலுக்குக் கட்டுப்பாடுகள் உயர்வு, தாழ்வு அடிப்படையில் விதிக்கப்பட்டிருக்கலாம்.

### புறவாழ்க்கை

பண்டைய குறிஞ்சி நில மாந்தர்கள் ஒன்றாகக் கலந்து வாழ்ந்த வாழ்வே முதன் முதலில் சமுதாயத் தோற்றத்திற்கு வித்திட்டது என்று அறிஞர்கள் குறிப் பிடுகின்றனர். சமுதாய வாழ்க்கை, கட்டாயத்தின் அடிப்படையில்தான் குறிஞ்சி நிலத்தில் உருவாக்கப்பட்டிருந்தன என்கிறார். [7]

புறவாழ்க்கை என்பது போர்க்களத்தில் வீரம் காட்டுதல் மட்டுமன்று. புறவாழ்க்கை என்பது பரந்துபட்ட எல்லையைக் கொண்டது. மனம் ஒத்த ஆணும், பெண்ணும் அடுத்தவரிடத்துப் பகிர்ந்து கொள்ள முடியாத அன்பின் நுணுக்கங்களை அனுபவித்து வாழ்வது அகவாழ்க்கை. மற்றவை எல்லாம் புறத்தையே சாரும். போர்க்களத்தில் நடத்துகிற வீரச்செயல்கள் மட்டுமன்று. தன்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்காக ஆடவன் மேற்கொள்ளக் கூடிய எல்லாவிதமான போராட்டங்களும் முயற்சிகளும் அதன் பயனும் புற வாழ்க்கை என்றே கருதப்படுகின்றன.

தமிழ் இலக்கியத்திற்குத் தொடக்கமாய் அமைந்த சங்கப்பாடல்கள் தற்கால இலக்கியங்களுக்கு முதன்மையாகவும் முன்னோடியாகவும் திகழ்கின் றன. பண்டைக் காலத் தமிழ் மக்களின் அகவாழ்க்கையில் காதலும், இல்லற மும் போற்றப்படுவதைப் போல புற வாழ்க்கையில் வீரமும் கொடையும் திகழ் வதைச் சங்க இலக்கியங்களில் காணலாம் என்பர். [8]

### குறிஞ்சித்திணை

களவின்பத்திலேயே ஈடுபட்டு வரைவு நீட்டிக்கும் தலைவனுக்குத் தலைவியின் துன்பம் அறிய வாய்ப்பில்லை. களவு இடையூறுகளால் தலை

வனைக் காணாதபோது வருந்தும் தலைவியைத் தலைவனின் குன்றம் கண்டு ஆற்றுமாறு கூறுகிறார். தோழி, பகற்குறியில் காணும் பொழுதினும் காணாப் பொழுது பெரிதாதலின் தலைவி வேறுபட ஆயத்தோடாடியும் தலைவன் இல்லாமையால் வருந்தும் தலைவியிடம் தலைவன் வந்து ஆறுதல் கூற மாட்டாரா என ஏங்கும் தன் ஏக்கத்தைக் கூறி ஆற்றுவிக்கிறாள்.

வெந்த புண்ணில் வேலெறிவதைப் போலத் தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியை ஊரவரின் அலர் மேலும் வருத்துகிறது. அந்நிலையில் நிலம் புடை பெயரினும், நீளும் தீயும் தத்தம் இயல்பு திரியினும், கடற் கெல்லை தோன்றினும் பிறழாத தலைவனின் நட்புச் சிறப்பு கூறி, அலர் தூற்றி னும் கேடில்லை என்று கூறுகிறாள்.

**நிலம்புடை பெயரினும் நீர்திரிந்து பிறழினும்**

**இலங்குதிரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்** *(குறு.373:1-4)*

என்று தோழி தலைவனின் அன்பு நிலை கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள். அலர் தூற்றும் பெண்டிரைப் பழித்தும் தோழி ஆற்றுவிக்கிறாள்.

அலர் தூற்றலால் இச்செறிப்பாரோ என அஞ்சும் தலைவியைத் தாய் தந்தையரே, தினைப்புனக் காவலுக்குச் செல்ல வற்புறுத்துவதை எடுத்துக் கூறு கிறாள். மழையின்மையால் தினை கரிய இற்செறிப்பரோ எனத் தலைவி அஞ்சுமிடத்தும் முகில் சூழ்ந்தன. தினைகரியாது என ஆற்றுவிக்கிறாள். தலைவன் வரைவிற்காகப் பொருளீட்ட எண்ணிப் பிரிய நினைக்கும்போது தோழி பெருந்தகை கேளாய் ஒரு நாள் பிரியினும் வேறுபடும் நம்மை ஒழித்து காதலர் மட்டும் செல்ல நாம் நம் மனையில் தங்கி மழைக்குரல் கேட்டு உயிர் வாழ்வோமாம் எனத் தலைவியைப் பிரிதற்குப் பக்குவப்படுத்துகிறாள். நின் மழைக்கண் தூதாகி, அவரை நிறுத்தியது எனவும் மகிழ்விக்கிறாள் தோழி. [9]

*தலைவன் வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றா தலைவியைத் தோழி, தலைவன் நன்னர் நெஞ்சத்தன். ஒண்ணுதல் பசப்பு அறியாததால்தான் வர வில்லை என்று தலைவனின் அன்புடைமையையும் குடிச்சிறப்பையும், வாய்மையையும் புகழ்ந்து வருவான் என்றும் கூறி ஆற்றுவிக்கிறாள்.*

*வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்ததை மகிழ்ந்து கூறியும், வரைவிற்காக வருகின்ற நிலையை மகிழ்ச்சி யோடு காட்டியும் ஆற்றுவிக்கிறாள் தோழி. தலைவன் வரைவுடன் வந்தும் தமர் ஏற்பரோ, மறுப்பரோ என்று தலைவி அஞ்சியவிடத்து, நம்மூரில் உணர்ந் தோரைப் பிரிப்போர் உள்ளனரா என்று கூறும் முறையில் ஆறுதல் கூறுகிறாள். பொருள்வயிற் பிரிவிற்கு முன்னே தலைவனைத் தடுத்து உடன் போக்கு மேற் கொள்வான் என்று கூறுகிறாள் தோழி.*

**நம்மொடு செல்வர்மன் தோழி மெல்ல**
***வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்*** *(நற். 125:7-8)*

தூதிற்பிரிவு

**நெய்பெய் தீயின் எதிர்கொண்டு**
***தான் மணந் தனைய மென விடுகந் தூதே*** *(குறு. 106)*

***அறியா தறுத்த சிறியிலைச் சாந்தம்***
***வறனுற நார முறுக்கிப் பையென*** *(நற். 64)*

***பொன்போற் புதல்வனோ டென்ன தோனே*** *(ஐங். 265)*

*பிரிவிடைத் தலைவியது அருமை கண்டு தூதுவிடக் கருதிய தோழிக்குத் தலைவி சொல்லியது.*

***சால்பின் அளித்தல் அறியாது அவட்கவள்***

***உரைத்திசின் தோழி*** *(நற். 176 : 2 - 4)*

*முல்லைத்திணை*

*தலைவன் வினைவயிற் பிரிகின்றான். கார்ப்பருவத் தொடக்கத்து வருவேன் என உறுதி கூறிச் செல்கிறான். இதுவரை வருவான் என்ற நம்பிக்கையோடிருந்த தலைவி கார்ப்பருவத்தைக் கண்டதும் நிலை தளர்கிறாள். நம்பிக்கையிழக்கிறாள்.*

*காதலர் சென்றவிடத்துத் தங்கி விட்டாரோ, நம்மை மறந்தாரோ என்ற நம்பிக்கையிழக்கும் தலைவிக்குத் தலைவர் நம்மைவிட அன்புடையர், நின் கவின் அவரை மறக்கவிடாது என்று தலைவனின் பேரன்பைச் சுட்டிக் காட்டுகிறாள் தோழி. உறுதியாக வருவார் எனக் காரணமும் காட்டுகிறாள்.*

***வாரா தமையலோ விலரே நேரார்***

***.......... .......... .......... ..........***

***நீடினர் தோழிநங் காத லோரே*** *(ஐங். 463:3-5)*

*தலைவன் வேந்துவிடு தொழிலில் பிரிந்தபோது வேந்தன் பகை தணிந்தான்; போர் புரிதலை விட்டனன். தலைவன் மேற்கொண்ட செயல் முடிந்து வருதல் பல்லாற்றானும் தெளிந்தேன் என்றெல்லாம் கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி. முல்லைத்திணையில் ஒரு பாடல் தவிர மற்றவையாவும் கற்புப் பாடல்களே. முல்லைக்கலியில் இடம் பெற்றுள்ள இக்களவுப்பாடலிலும் தலைவன் வரைவானோ எனத் தலைவி ஆற்றாதபோது தலைவன் ஏறுதழுவி வரைவான் என ஆற்றுவிக்கிறாள் தோழி.*

**முல்லையந் தண்மொழில் புக்கார் பொதுவரோ**

**புணர்குறிக் கொண்டு** *(கலி. 101)*

குறுந்தொகையின் முல்லைத்திணையில் கார்ப்பருவங்கண்டு ஆற்றாமை, வருவர் எனக் கிழத்தி உரைத்தது. பருவம் இன்று என வற்புறுத்தல், ஆற்றுவல் எனச் சொல்லுதல், பருவங்கண்டு அழிந்தமை, பிரிவிடை ஆற்றாமை, தலைவன் தேர்ப்பாகற்கு உரைத்தது. தோழி பருவம் அன்று, தலைவன் கிழத்தியோடு உடனிருந்தது. பருவங்கண்டு வருவர் என்றது. பிரிவிடை வற்புறுத்தியது என ஆற்றாமை, ஆற்றுவித்தல் என்பன தொடர்பான கூற்றுகளாகவே இடம் பெற்றுள்ளன.

தலைவி கூற்று

**வாடை வந்ததன் தலையும் நோய்பொரக்**

**கண்டிசின் வாழி - தோழி தெண்திரைக்**

**கடல்ஆழ் கலத்தின் தோன்றி** *(குறு. 240)*

வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

**முளி தயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**

**கழிவுறு கலிங்கங் கழா அது உடீஇ**

என்று கூடலூர் கிழார் கூறுகிறார். [10]

இன்பம் மிக்க இல்வாழ்வின் அடிப்படை இல்லாளின் அட்டில் தொழில் திறமே என்பதை நன்கு தெளிவுறுத்துகிறார். [11]

**வேந்துவிடு தொழிலோடு செலினும்**

**சேந்துவரல் அறியாது செம்மல் தேரே** *(குறு. 242)*

என்று குழற்றத்தனார் பாடியுள்ளார்.

*தலைவனும், தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்று மீண்ட செவிலித்தாய் அவர்கள் வாழ்க்கைச் சிறப்பை நற்றாய்க்குக் கூறியதாக,*

***உள்ளினென் அல்லெனோ யானே உள்ளி***
***நினைந்தனென் அல்லெனோ பெரிதே நினைத்து*** *(குறு. 99)*

*என்று ஔவையார் பாடியுள்ளார்.*

*பொருள் ஈட்டச் சென்ற தலைவன் மீண்டு வந்ததன் பின் அவரை நோக்கி நீயிர் பிரிந்திருந்த பொழுது எங்களை நினைத்ததுண்டோ என்று வினாவிய தோழிக்குத் தலைவன் கூறியதாக,*

***பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழமுகை***
***வண்டுவாய் திறக்கும் தண் துறை ஊரனொடு***
***இருப்பின், இருமருங் கினமே கிடப்பின்***
***வில்லக விரலின் பொருந்தி அவன்***
***நல் அகம் சேரின் ஒரு மருங்கினமே*** *(குறு. 370)*

*தலைவனைப் பரத்தை தன்பால் மடக்கிக் கொண்டாள் எனத் தலைவி புறங்கூறுவதாகக் கேள்வியுற்ற பரத்தை, தலைவியின் பாங்காயினார். கேட்கும் படி தலைவி என்னைப் புறக்கூறல் தவறென்று கூறியது இப்பாடல்.*

*வினைமுற்றிய தலைவன் பாகற்கு உரைத்தது. வினைவயின் பிரிய ஆற்றாமை, பொருள் முற்றி மருத்தரல், பருவங்கண்டு ஆற்றாளாய்ச் சொல்லு தல், பருவம் அன்று என வற்புறுத்தல், பருவம் காட்டி வற்புறுத்தல், வினை முற்றி வந்து இருத்தல், பருவங்கண்டு அழிதல், மெலிந்த தலைமகளை வற் புறுத்தல், வரவு மலிதல் என்பன தொடர்பான கூற்றுகளே பேரளவில் இடம் பெற்றுள்ளன.*

***அகலுள் ஆங்கண் சீறூரேமே***

***அதுவே சாலுவ காமம் அன்றியும்*** *(நற். 266 : 4 - 5)*

*என்ற பாடல் அடிகள் பரணர் பாடியது ஆகும்.*

***அரும்படர் அகல நீக்கி***

***விருந்தயர் விருப்பினள் திருந்திழை யோளே*** *(நற். 361 : 8 - 9)*

*என்ற பாடல் அடிகள் மதுரைப் பேராலவாயர் பாடியது. வாயில்களோடு தோழி உறழ்ந்து சொல்லியது ஆகும்.*

*கடி மனை சென்ற செவிலி நற்றாய்க்கு உரைத்தல், பருவத்தின் முன்னே வந்தமை உரைத்தல், மீள்கின்றான் தேர்ப்பாகற்குச் சொல்லல், சுரத்தருமை இன்றிக் கார் வந்தது எனல், பாசறை இருந்து சொல்லியது. பருவ வரவின் கண் ஆற்றாமை, ஆற்றும் தோழிக்குக் கூறுதல், தலைவன் வரவு கூறல், பருவம் அன்று என வற்புறுத்தல், தூதாய் வந்த பாணர்க்கு உரைத்தல், தலைமகன் வந்துழிச் சொல்லுதல், பாணன் தலைவனிடம் கூறியது எனும் பொருண்மை தொடர்பான கூற்றுகளே அதிகம் இடம் பெற்றுள்ளன.*

*தலைவன் பொருள்வயின் பிரியக் கருதிய போது தோழி பிரிதற்கு இந்தப் பருவம் ஏற்றது கிடையாது என்று பயணத்தைத் தவிர்ப்பது.*

**பல்லிருங் கூந்தல் பசப்பு நீவிடிற்**

**செல்வேந் தில்ல யாமே செற்றார்**

**வெல்கொடி யரண முருக்கிய**

**கல்லா யானை வேந்து பகை வெலற்கே** *(ஐங். 429)*

வேந்தர்க்கு உற்றுழிப் பிரியும் தலைமகன் சொல்லியது. வினையே ஆடவர்க்குயிர், குல மகளிர்க்கு அப்பிரிவினைப் பொறுத்து ஆற்றி இருத்தலே கடமை நீயும் ஆற்றியிருத்தல் வேண்டும் என்பர். [12]

**மருதத்திணைக் கூற்றுகள்**

குறுந்தொகையில் கூறப்பட்ட கூற்றுகளாக மருதத்திணையில் காதற் பரத்தை கூறல், ஊடற்கண் தலைமகன் கூறுதல், வாயில் நேர்தல், வாயில் மறுத்தல், பிரிவிடை மெலிந்த தலைவி கூறல், பரத்தை கூறல், பாணற்குத் தலைமகள் கூறல், வாயில் வேண்டிய கிழவற்குத் தோழி கூறல், இற்பரத்தைக் கூறல் எனும் கற்புக்காலக் கூற்றுகளே பேரளவில் இடம் பெற்றுள்ளன.

***நள்ளிருள் யாமத் தில் எலி பார்க்கும்***
***பிள்ளை வெருகிற கல்கிரை யாகி (குறு. 107)***

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

பொருள் முற்றி வந்த தலைமகனை உடைய கிழத்தி காமம் மிக்க கழி படர் கிளவியால் கூறியது.

தலைவி என் உயிர்த் தலைவனோடு கனவில் இருந்தபோது என்னை எழுப்பிய சேவலே! நீ பூனைக்கு இரையாகிக் கொடிய துயரை துடைப்பாய் என வைகின்றாள்.

***மயங்கு மலர்க் கோதை குழைய மகிழ் நன***
***முயங்கிய நாள் தவச் சிலவே அலரே*** *(குறு. 393)*

என்ற பாடல் பரணரால் பாடப்பட்டது.

குறுந்தொகையில் தோழி தலைவியை நோக்கி நின்னைத் தலைவன் மயங்கிய நாள் மிகச் சிலவே ஆகவும் அதியன் போர்க்களத்தே இறந்த பொழுதுண்டான ஆரவாரத்தினும் அலர் பெரிதாயிற்று என்று கூறுகின்றாள்.

பரத்தையிற் பிரிந்து வரல், பரத்தை கூறல், வாயில் மறுத்தல், விருந்து வாயிலாக வந்த தலைமகன் கூற்று, வாயில் நேர்தல், பரத்தையைத் தலைவி நொந்து சொல்லுதல், தலைவி ஊடல், மறுத்தல், பரத்தை புகழ்தல் எனும் கற்புக் கூற்றுகளே பலவாக இடம் பெற்றுள்ளன.

**சிறுவெள்ளாங் குறுகே சிறுவெள்ளாங் குறுகே**
**துறைபோகு அறுவைத் தூமடி அன்ன**
**நிறங்கிளர் தூவிச் சிறு வெள்ளாங் குருகே**
**எம்மூர் வந்தெம் ஒண்டுறை துழைஇச்** *(நற். 70 : 1 - 4)*

என்ற பாடலை வெள்ளி வீதியார் பாடியுள்ளார்.

அகநானூற்றிலும் பரத்தைமை, வாயில் வேண்டல், வாயில் மறுத்தல் எனும் பொருண்மையிலான கூற்றுகளே அதிகம்.

### தலைவியைத் துன்புறுத்துவன

அலர் ஆற்றாமை, தலைவன் அருளியமையால் தோன்றியது அலர். அவன் அருளாமையால் தோன்றியது ஆற்றாமை. ஆதலின் தலைவன் அருளினாலும் அருளாது விடுத்தாலும் தலைவியின் துயர் முற்றுப் பெற வாய்ப்பில்லை. அவ்வாய்ப்பினைத் தருவது வரைவு ஒன்றே. அதுவே அலர்க்கும் ஆற்றாமைக்கும் முற்றுப்புள்ளி இடுவது. தலைவி தோழியர் கவனம் முழுவதும் வரைவு கடாதலில் பதிந்து இருந்ததற்கு இது காரணமாகும்.

வாயில் நேர்தலும் மறுத்தலும்

இங்கு இடம் பெறும் தோழியின் கூற்றுக்கள் தலைவியின் ஊடலுக்கும், தலைவனின் இரந்து நிற்கும் பின்னிலைக்கும் இடையே சமநிலையை உருவாக்கத் தோழி கையாளும் உளவியல் அணுகுமுறை ஆகும்.

பாணன், விறலி ஆகிய இருவரும் இலக்கியங்களில் வாயில் வேண்டத் தலைவனால் அனுப்பப்படுகின்றவர்கள். பரத்தைக்கும் தலைவிக்கும் பொது வாக அமைந்த வாயில்களாக இவர்கள் கணிக்கப்படுதலின் பெரிதும் வாயில் மறுக்கப்படுகின்றவர்களாக உள்ளனர்.

இலக்கியத்தில் தன் தவற்றை உணர்ந்த தலைவனுக்கே வாயில் நேர்வது என்ற வரன்முறை காணப்படவில்லை. தலைவன் தன் தவற்றை மறைத்துப் பணிந்து நிற்பினும் தோழி வாயல் நேரும் மன விருப்பம் கொள்கிறாள். கணவனை இழந்தவர்களையும் கணவனைப் பிரிந்தவர்களையும் ஒரு நிகராகக் கணிக்கும் சங்ககாலச் சமுதாயப் பார்வை இதற்குக் காரணம் ஆகலாம் என்பர்.[13]

அகத்திணை மாந்தர்

**தலைநாள் மாமலர் தண்துறைத் தயங்கக்**

**கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்று** *(அக. 126 : 4 - 5)*

அல்ல குறிப்பிட்டு அழிந்ததூஉம் ஆம் என்ற அடிகள் நக்கீரர் பாடியுள் ளார்.

**கழநீர் ஆம்பல் முழுநெறிப் பைந்தழை**

**காயா ஞாயிற் நாகத் தலைப்ப** *(அக. 156 : 9 - 10)*

தலைமகளை இடத்துய்த்துவந்த தோழி தலைமகனை வரைவு கடாயது. ஐங்குறுநூற்றிலும் இந்நிலையே காணப்படுகின்றது.

பரத்தைமை வரைந்து கொண்ட தலைவிக்குத் தோழி சொல்லுதல், புறத்தொழுக்கம், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்பன தொடர்பான கூற்றுக்கள் இடம் பெற்றுள்ளன.

**பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை**

**கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்**

**பயந்துநுத லழியச் சாஅய்**

**நயந்த நெஞ்ச நோய்ப்பா லஃதே** (ஐங். 161)

என்ற பாடல் ஒருவழித் தணந்துழி ஆற்றுவிக்குத் தோழிக்குத் தலைவி ஆற்றா ளாய்ச் சொல்லியது. களவு நிகழ்ந்தமைக் கண்டு ஊரலர் அடங்குதல் பொருட் டுத் தலைவன் ஒரு சில நாள் வாராமல் தன் மனைக்கண்ணே தங்குவானாயி னன். அப்போது தலைவி பிரிவாற்றாமல் வருந்தினளாக அவளை ஆற்று விக்கும் தோழிக்கு அவள் தான் வருந்துதற்கு காரணம் காட்டியது.

### அலரின் தன்மை

களவுக் காதலர்களைக் குறித்துப் பெண்கள் பேசும் வம்புப் பேச்சு ஒரு பகை மொழி என்றும் வெறுப்பு மொழி என்றும், அப்பழிப்புரை கௌவை என்றும் குறிக்கப் பெற்றது. இப்பேச்சு ஒருவகையில் காதலர்க்கு இடையூரெனி னும் உண்மையில் இது அவர் தம் காதலை வலிமைப்படுத்தவும் ஒருவருக் கொருவர் கொண்ட அன்பை உறுதிப்படுத்தவும் அவர் திருமணத்தை விரைவு படுத்தவும் உதவிற்று. சமுதாய நெறிக்கு நல்லது என்ற கருத்தால் தமிழ்ச் சான்றோர் ஊராரையும் அகத்திணை இலக்கியத்துள் போற்றிக் கொண்ட னர் (2007:61) எனும் வ.சுப. மாணிக்கனாரின் கூற்று அலரின் பயன்பாட்டை களவில் அது பெறும் முக்கிய இடத்தை வெளிப்படுத்துகின்றது. [14]

***மள்ள ரன்ன தடங்கோட் டெருமை***

***மகளி ரன்ன துணையொடு வதியு***

***நிழன்முதி ரிலஞ்சிப் பழனத் ததுவே***

***............ ............... ................***

***கவின்பெறு சுடர்நுத றந்தையூரே*** *(ஐங். 94)*

*வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் மீள்கின்றபொழுது சொல்லியது. தலைவன் கனவில் வரைவிடை வைத்துப் பிரிந்த போது ஆற்றும் தோழியின் கூற்றிற்கும், கற்பில் பிரிவிடை வைத்துப் பிரிந்த போது ஆற்றும் கூற்றிற்கும் இடையே ஆற்றும் முறையில் மெல்லிய வேறுபாடு காணப்படுகிறது. தோழி களவு நீட்டிக்கின்ற தலைவனின் நற்பண்பை எடுத்துரைத்துத் தனது அறிவுரையின் படி, வரைவிடை வைத்துத் தலைவன் பிரிவு கொண்டதாகத் தோழி சுட்டுகிறாள். மணம் புரிதற்கு வேண்டும் பொருளைப் பெற்று வரைவொடு வருவார் என்னும் தோழியின் உள்ளுறை மொழி. தலைவியின் துயர் முழுவது மாகத் தீர்ந்துவிடும் காலம் ஆண்மையில் இருப்பதை எடுத்துக்கூறி ஆறுதல் அளிக்க முயலுகிறது. இதனை,*

***கண்டனெ மல்லமோ மகிழ்நநின் பெண்டே***

***பலரொடு பெருந்துறை மலரொடு வந்த*** *(ஐங். 69)*

*என்ற பாடல் புலப்படுத்துகிறது.*

*தலைமகன் பெதும்மைப் பருவத்து பரத்தையைக் களவில் மணந்து ஒழுகுகின்றதனை அறிந்த தலைவி தனக்கு இல்லை என்று அவன் மறைத்த வழிச் சொல்லியது.*

### ஊடல் தீர்க்கும் வாயில்கள்

தலைவன் தலைவி ஆகிய இருவருக்கிடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்கும் வாயில்களைப் பன்னிருவர் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர். மருதக் கலியில் ஊடல் தீர்க்கும் வாயில்களாகத் தோழியும் சான்றோரும் உள்ளனர்.

தோழி தலைவி ஊடலைத் தீர்ப்பதை,

**நாணிலன் ஆயி னாலிதந்து அவன் வயின்**
**ஊடுத லென்னோ இனி** *(கலி. 87 : 12 - 13)*

என்ற அடிகள் உணர்த்துகின்றது.

### வாயில் மறுத்துரைத்தல்

பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்ட தலைவனுடன் தலைவி மற்றும் காமக்கிழத்தி ஊடல் கொண்டு வாயில் மறுத்துரைப்பார்கள். பரத்தையருடன் தலைவன் புனலாட்டு வித்தமையைக் குறி வழி மறுத்துரைப்பதை,

**நாணுச்சிறை அழித்து நண்பகல் வந்த அவ**
**பாணன் புணையாகப் புக்கு** *(கலி. 98 :17-18)*

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் காட்டுகிறது.

### வாயில் மறுத்தலும் நேர்தலும்

தலைவி வாயில் மறுத்த போது அமையும் பிரிவு வாழ்க்கை, கணவனை இழந்த கைம்மை மகளிர் வாழ்வு போன்று எளிமையும் சமுதாயத்தினின்று ஒதுங்கியும் அங்கீகரிப்பின்றியும் காணப்பட்டது. கைம்மை மகளிர் வளம் நீங்கி எளிய உணவும் அழுத கண்ணும் கொண்டு புன்மை வாழ்க்கை வாழ்ந்தமையைப் புறப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

***பெருவளக் கொழநன் மாய்ந்தென பொழுது மறுத்து***

***இன்னா வைகல் உண்ணும்***

***அல்லிப் படூஉம் புல்லா யினவே*** *(புறநா. 248)*

*என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் காட்டுகின்றன.*

*நெய்தல் திணை*

*குறுந்தொகையின் நெய்தல் திணையில் வரைவிடை வைத்துப் பிரிந்த வழி ஆற்றாளாகிய தலைவி தோழியை நெருங்கிச் சொல்லியதாக,*

***நள்ளென் றன்றே யாமம் சொல்லவிந்***

***தினி திடங்கினரே, மாக்கள் முனிவு இன்று*** *(குறுந். 6)*

***பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு***

***உடனுயிர் மோகுக தில்ல கடனறிந்*** *(குறு. 57)*

*என்ற அடிகள் புலப்படுத்துகிறது.*

*இவை போன்ற களவுத்துறைகளே மிகுதியும் இடம் பெற்றுள்ளன. அல்லக் குறிப்படுதல், சிறைப்புறம், அலர், இயற்படமொழிதல், அலரஞ்சியது என்பன தொடர்பான கூற்றுகளே இடம் பெற்றுள்ளன.*

*நெய்தல் திணையில் பரத்தமை*

***இம்மை மாறி மறுமை யாயினும்***

***நீயா கியரென் கணவனை***

***யான் ஆ கியர்நின் னெஞ்சுநேர் பவளே*** *(குறு.49 : 3-5)*

*என்று தலைவி பேசுகின்றாள். அவளுடைய அன்பில் ஓர் உறுதியைக் காண முடிகின்றது.*

*தலைவனோடு தான் கொண்ட காதல் அழியாத ஒன்று என்று தோழிக்குச் சொல்வாள். மற்றொரு நெய்தல் நிலத்தலைவி,*

***பூக்கமழ் பொதும்பர்ச் சேர்க்கும் துறைவனொடு***

***யாத்தேம் யாத்தன்று நட்பே***

***அவிழ்த்தற்கு அரிது ; அது முடிந்து அமைந்தன்றே*** *(குறுந். 313:3-5)*

*தலைவனோடு தலைவி கொண்ட காதல் அவிழ்க்க முடியாத முடிச்சு. முடிந்த முடிவு என்று தலைவி பேசுகின்றாள்.*

*தலைவி*

*கலித்தொகை, ஐங்குறுநூறு, குறுந்தொகை ஆகிய தொகை நூல்களில் குறுந்தொகையில்தான் தலைவியின் கூற்றுகள் அதிகமாக உள்ளன. மொத்தம் உள்ள 74 பாடல்களில் தலைவி கூற்றாக 10 பாடல்கள் மட்டுமே தலைவன் சிறைப் புறத்தானாகத் தலைவன் தோழியிடம் கூறுவதாகப் பாடப்பட்டுள்ளன. நெய்தல் பின்னணியில் புனையப்பட்டுள்ள இப்பாடல்களில் தலைவி பரதவர் மகளாகவும், உமணர் மகளாகவும் சித்தரிக்கப் பெற்றுள்ளாள். அவள், மீன் உணவுகளைப் பறவைகள் கவர்ந்து சென்று விடாதவாறு காவல் காப்பவளாக வும் புனையப் பெற்றுள்ளாள்.*

*நெய்தல் நிலத் தலைவியின் அன்பு மிகவும் ஆழமானது உணர்ச்சிக் சுழிப்பு மிக்கது என்பதைப் பாடல்கள் பல உணர்த்துகின்றன. தலைவன் பரத்தமை காரணமாகப் பிரிந்த வழி ஆற்றாளாகிய நெய்தல் நிலத்தலைவி ஒருத்தி அவனைக் கண்டவுடன் தன் ஆற்றாமை நீங்கி,*

***தாய் உடன்று அலைக்கும் காலையும், வாய்விட்டு***

***அன்னா! என்னும் குழவிபோல*** *(குறு. 397 : 7-8)*

*இவ்வாறு தோழி பேசும்போது, தலைவியின் அன்பு எந்த அளவிற்கு உயர்ந்துள்ளது என்பதனை உணர முடிகின்றது. நெடுநீர்ச் சேர்ப்பன் தன் நெஞ்சத்தானே என்று பேசுகிறாள். மற்றொரு நெய்தல் நிலத்தலைவியின் ஆழ்ந்த அன்பினையும் காண முடிகின்றது.*

**காமம் மிக்க கழிபடர் கிளவிகள்**

**பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு**
**உடனுயிர் போகுக தில்ல** *(குறு. 57:2-3)*

**செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்**
**கல்பொரு சிறுநுரை போல**
**மெல்ல மெல்ல இல்லா குதுமே** *(குறு. 290:4-6)*

*இவ்வாறு அமைந்துள்ள பாடல்களில், தலைவியின் துயர் எல்லை கடந்து விடுகின்றது. இத்தலைவியர்களின் பிரிவுத் துன்பத்தில் நம்பிக்கை யின்மை மென்மையாக இழையோடுவதால், இப்பாடல்களை நெய்தல் திணையில் பதிப்பித்தமை பொருத்தமாகவே தோன்றுகிறது.*

*அலர்*

*நற்றிணை நெய்தல் திணைப்பாடல்களில் காப்பு மிகுதி, உணவு கடாதல் பாணர்க்கு வாயில் மறுத்தது, சிறைப்புறம், காப்பு மிகுதி, அலர், ஊடல் அறத்தொடு நிற்றல் என்பன தொடர்பான கூற்றுகளுடன் பின்வரும் கூற்று களும் இடம் பெற்றுள்ளன.* [15]

*நெய்தல் நிலத் தலைவனோ பலரும் காணப்பகல் பொழுதில் வருவ தோடு தேர் மணி ஒலிக்க வருவதாலும் ஊரலர் அறியும் வாய்ப்பு எளிதில்*

ஏற்படுகின்றது என்பர். அதனால் அலர் பற்றிய பாடல்கள் அதிகமாக நெய்தல் நிலப்பாடல்களாகவே உள்ளன.

நற்றிணைப் பாடலொன்றில் அலரெழுந்ததற்கான காரணம் தலைவனின் செயலே என்று வருந்திக் கூறுகின்றாள் தோழி. தலைவி தலைவனைத் திடீரென்று சந்திக்கும் வாய்ப்பும் உண்டு. ஆயத்தாரோடு தலைவியும் கடலில் விளையாடிய பொழுதும் சோலையில் இளைப்பாறிய பொழுதும் எங்கிருந்தோ அயலவன் போல் வந்து தீடீரென்று எம்மைவிட்டு நீங்காதிருந்தான். இதைக் கண்ட பெண்கள் நேரடியாகத் தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பை அறிந்து அலர் தூற்றினர் அதனால் அன்னை எம்மை இல்லில் செறித்து விட்டாள் என்கிறாள் தலைவி.

***நோயும் இன்பமும் ஆகின்று மாதோ***
***மாயம் அன்று தோழி வேய் பயின்று*** *(நற். 294 : 2 - 3)*

பாண்டியன் அறிவுடை நம்பியின் நற்றிணைப் பாடல் ஒன்றும் வரைவு நீட்டித்த வழி, தோழி தலைவியை மணந்து கொள்ளும்படி அறிவுறுத்துகின்ற நிலையில் அமைந்துள்ளது.

***முழங்கு திரைகொழஇயமூரி எக்கர்***
***நுணங்குதுகில் நுடக்கம் போலக் கணம்கொள***
***ஊதை தூற்றம் உரவுநீர்ச் சேர்ப்ப***
***பூவின் அன்ன நலம்புதி துண்டு***
***நீபுணர்ந் தனையே அன்மையின் யாமே***
***நேர்புடை நெஞ்சம் தாங்கத் தாங்கி***
***மாசில் கற்பின் மடவோள் குழவி***

***ஒய்ய வாங்கக் கைவிட் டாங்குச்***

***சேனும் எம்மொடு வந்த***

***நானும் விட்டேம் அலர்க இவ்வூரே*** *(நற். 15)*

*இப்பாடலிலும் நெய்தல் நிலப் பின்னணியில் களவுத் திருமணம் பேசப்படுகின்றது. குறிஞ்சித் திணை போன்றே நெய்தல் திணையிலும் தலைவிக்கு உற்ற துணையாக இருந்து தலைவியின் காதல் வாழ்க்கைக்குத் தோழி எல்லா வகையிலும் உதவுகின்றவளாகப் புனையப்பட்டுள்ளாள்.*

### கழிபடர் கிளவிகள்

*அகப்பாடல்களில் தோழியின் அறிவாற்றல் செவிலித் தாயின் துயர் போன்றவை அழுத்தமாகப் பதிவு செய்யப் பெற்றிருந்தாலும், அவை தலைவன் தலைவி ஆகியோரின் பண்பு விளக்கங்களுக்காகவே படைக்கப்பட்டுள்ளன. இத்தகைய நாடகத் தனிநிலைக் கூற்றுகளில் நடுநாயகமாக விளங்குபவள் தலைவியே ஆவாள். தலைவியின் துயர நிலையே நெய்தல் திணைப் பாடல்களில் மிகுதியும் வெளிப்படுகின்றது. பிரிவு உணர்ச்சி பொறுக்க இயலாதவாறு எல்லை மீறிப் பொங்கும்போது, தலைவி நாண் துறந்து காமம் மிக்க கழிபடர் கிளவிகளாகப் பேசுவதை, நெய்தல் திணைப் பாக்களில்தான் காண முடிகின்றது.*

*நெய்தல்திணைப் பாக்களில் தலைவியின் துயர நிலை பற்றிப் பேசும் போது, புலவர்கள் தலைவி இறப்பது போன்ற பெருந்துயரத்தை அடைவதாகப் பாடுகின்றனர்.*

***பாடில கலுழுங் கண்ணொடு சாஅய்ச்***

***சாதலும் இனிதே, காதல் தோழி*** *(நற். 327:2-3)*

***.... இவளே வருவை ஆகிய சின்னாள்***

***வாழாளாதல் நற் கறிந்தனை சென்மே*** *(நற். 19-7)*

*இப்பாடல் நம்பிக்கையின்மை மென்மையாக இழையோடுவதால் இப்பாடல்களை நெய்தல் திணையில் பதிப்பித்தமை பொருத்தமாகவே தோன்றுகிறது.*

**தலைவன், பாங்கன், தேர்ப்பாகன்**

*குறிஞ்சித் திணை போன்றே நெய்தல் நிலப் பின்புலத்தில் புனையப் பட்டுள்ள களவெழுக்கம் தொடர்பான பாடல்களில் பாங்கன் இடம் பெறு கின்றான். தலைவன் களவில் தான் மணந்த காரிகை இல்லாமல் தன் வாழ்க்கை இல்லை என்பதனைப் பாங்கனுக்குப் புலப்படுத்தும் முறையில் தலைவன் கூற்றுகள் அமைந்துள்ளன.*

*என் காதல் வாழ்வைப் பொய்யாக்கமாட்டேன் என்று தலைவன் தன்னை இடித்துரைத்த பாங்கனிடம் பேசுகின்றான்.*

***அறிதலும் அறிதியோ, பாக; பெருங்கடல்***

***எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள,***

***ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது,***

***அசைஇ புள்ளொழிந்த வசைநீர் குறுமகட்கு***

***உயவினென் சென்றியான், உள் நோயுரைப்ப,***

***மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள், நறுமலர்***

***ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி***

***முறிதிமிர்ந்து உதிர்த்த கையின்***

***அறி வஞர் உறுதி ஆய்மட நிலையே*** *(நற். 106)*

இப்பாடலில் வினைமுற்றி மீளும் தலைவன் தலைவியின் பேரன்பை நினைவு கூர்கின்றான். பொருள் தேடும் பொருட்டுத் தான் பிரியக் கருதி யதனைத் தலைவிபால் தான் சொல்ல அவள் என்ன கூறுவது என்று அறியாது மயங்கி, நறுமணம் மிக்க ஞாழல் பூங்கொத்தைக் கொய்து அதனோடு இளந் தளிர்களையும் சேர்த்துப் பிசைந்து அவற்றை நிலத்தில் உதிர்த்துக் கொண்டு செயலற்று நின்றாள். அத்தகைய மென்மை மிக்கவளான தலைவியை விரை வில் காணும் பொருட்டுத் தேரைச் செலுத்தும்படித் தலைவன் பாகனிடம் பேசுகின்றான்.

***ஈண்டுபெருந் தெய்வத்து யாண்டுபல கழிந்தெனப்***
***பார்த்துறைப் புணரி அலைத்தலிற் புடைகொண்டு (நற். 315:1-2)***

என்ற பாடலை அம்மூவனார் பாடியுள்ளார். [16]

### தலைவியின் புலம்பல்

தலைவனின் பரத்தமை ஈடுபாட்டை எடுத்துரைத்துத் தலைவிக்கு அவன் மேல் வெறுப்பைத் தோற்றுவிப்பது பரத்தையின் உள்ளக் கிடக்கை. தன்னை விடுத்துச் சென்ற தலைவனுக்குத் தலைவியும் கிடைக்கக் கூடாது என்பது அவளது நோக்கம் அல்லது பொறாமை உணர்வால் தோன்றும் பழி வாங்கும் நடவடிக்கை ஆகும்.

அகநானூற்றில் இடம் பெறும் நெய்தல் திணைப் பாடல்களில் பெரும் பாலானவை களவு பற்றியனவாகவே உள்ளன.

### தலைவன் தன் நெஞ்சோடு பேசுதல்

குறிஞ்சித்திணைப் பாடல் போன்றே நெய்தல் திணைப் பாடல்களிலும் தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுவது போன்று பாடல்கள் பல புனையப்பட்டுள் ளன. அம்மூவனார் பாடியுள்ள அகநானூற்றுப் பாடல் ஒன்றில் தலைவன்

தலைவியின் பேரழகைப் பாராட்டி விட்டு இவ்வழகிய பெண்ணைப் பெறலரும் நிதியம் கொடுத்தாலும் கானலம் பெருந்துறைப் பரதவன் எனக்குக் கொடுப்பானா? என்று தன் நெஞ்சுக்குச் சொல்லிக் கொள்வது போல ஒரு பாடல் உள்ளது.

**பொன் னடர்ந் தன்ன ஒள்ளிணர்ச் செருந்திப்**
**பன்மலர் வேய்ந்த நலம் பெறு கோதைவள்**
**...............................................**
**தேன்இமிர் அகன்கரைப் பகுக்கும்**
**கானலம் பெருந்துறைப் பரதவன் நமக்கே!** *(அகநானூறு 280)*

இப்பாடலின் தலைவியைப் பெறுவதற்காகத் தான் செய்யும் முயற்சிகள் எல்லாம் தோற்றுவிடுமோ என்று அஞ்சுவது போலத் தலைவன் கூற்று அமைந் துள்ளது. நெய்தல் திணைப் பாடல்கள் அனைத்தையும் ஒருங்கு வைத்துப் பார்க்கும்போது நெய்தல் நிலப் பின்னணியில் களவு வாழ்க்கை தொடர்பான செய்திகளே இடம் பெற்றிருப்பதை அறிய முடிகின்றது.

ஐங்குறுநூற்றிலும் களவு பற்றிய பாடல்கள் நெய்தல் திணையில் மிகுதியாக உள்ளன.

**பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை** *(ஐங். 164)*

**விலங்கரி நெடுங்கண் ஞெகிழ்மதி**
**நலங்கவர் பசலையை நடுகு நாமே** *(ஐங். 200)*

***காண் மதி பாண நீ யுரைத்தற்குரியை***

***துறைகெழ கொண்கன் பிரிந்தென***

***விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே*** *(ஐங். 140)*

*என்பன எடுத்துக்காட்டுக்கள்*

### தலைவியின் புறவொழுக்கம்

*தலைவியின் புறனுரை கேட்டுப் பரத்தை அளிக்கும் பதில்கள் இரு வகையின. ஒன்று தன்னைக் குற்றவாளி இல்லை என நிறுவ முயல்வது. மற்றொன்று தலைவியின் குறைபாடே தலைவனின் புறத்தொழுக்கத்திற்கு அடிப்படை எனத் தலைவியைக் குற்றம் சாட்டுவது.*

*தலைவனைத் தன்னிடம் செல்ல விடாதவாறு பரத்தை தடுத்தாள் எனத் தலைவி நொந்துரைக்கக் கேட்ட பரத்தை, தலைவன் வலிய வந்து தன்னை விரும்பி நின்றதையும் தங்கள் தூய நட்பினையும் விளக்கி நிற்கிறாள். தலைவன் வலிந்து மடக்கிக் கொள்ளவில்லை என்பது அவள் வாதம். தலைவனின் வரவை, மலரின் சிறப்பால் வண்டுகள் தாமே சென்று உறையும் தன்மையோடு பரத்தை ஒப்பிட்டுக் காட்டுகிறாள். தனது பெண்மையின் சிறப்பால் தலைவனே வருகிறான் என்பது பரத்தையின் குறிப்புமொழி.*

### பாணன்

*தலைவியது ஆற்றாமை கண்டு தோழி தூதுவிடல், பருவ வரவின் கண் தலைவனின் தூதாக வருதல், தலைவனின் வரவு உணர்த்துதல், தலைவிக்கு அருளுமாறு தலைவனைப் பாணன் வேண்டுதல் இவை பாணன் தோன்றும் பின்புலங்கள்.*

*பாணனது கூற்றாலும் தலைவி தோழியர் பாணனிடம் கூறும் கூற்றாலும் பாணனது கடமையும் மன ஒட்டமும் தெளிவுப்படுத்தப்படுதலைக் காண்*

கிறோம். தலைவியின் பொறையும், ஆற்றாமையை மறைத்து நிற்கும் நிறை யும் தோழியர் பாணனுக்கு எடுத்துரைக்கின்றனர். [17]

பாலைத்திணை

களவு செய்யும் சமூகம், இயற்கையாலும் செயற்கையாலும் வஞ்சிக்கப் பட்ட மனிதன், மனிதனை மனிதன் அழித்தல், தற்காலிகப் பிரிவு வெம்மை, பிரிவும் பிரிவின்மையும், ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில்தான் உடன் போக்கு பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

தாய் பத்து (371-380), உடன் போக்கின் கண் இடைச்சுரத்து உரைத்த பத்து (381-390), மறுதரவுப்பத்து (391-400) எனும் அனைத்தும் பாலைத்திணையி லேயே வந்துள்ளன.

இவ்வாறு பொருள்வயின் பிரிதல், உடன்போக்கு என்பன பற்றிய பாடல்களுடன் தலைமகன் பிரிந்துழி குறித்து பருவம் வரக் கண்ட தலைவி சொல்லியது எனும் கூற்றில் அமைந்த பத்துப் பாடல்கள் (341-350) பாலைத் திணையில் இடம் பெற்றுள்ளன.

தாய் இரங்குபத்து மகட் போக்கிய வழி

**மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலு**

**......................................**

**அறநெறி இதுவெனத் தெ ளிந்தவென்**

**பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே! (ஐங். 371)**

தாய்மையைப் பிரித்து போற்றவும் இச்செய்யுட்கள் தூண்டுவனவாகும். அவள் காதலனோடேயே வாழ வேண்டியவள் நம்மை நீங்கி அவன் வீடே தன் வீடாகக் கொண்டு சிறப்பவள் என்பதனை அறிவாரேனும் அதனைத் தாமே

*செய்து மகிழும் வாய்ப்பினை இழந்ததனாலே பெருகும் துயர வேகத்தையும் இப்பகுதியிலே காணலாம்.*

### தாயின் உள்ளம்

*தலைமகள் தன் காதலுடன் பிறந்த இல்லை விட்டு வெளியேறிச் சென்றுவிட்டாள். அந்தப் பிரிவின் கொடுமையினாலே வெதும்பும் தாயின் உள்ளம். அவள் மேற்கொண்டது தமிழ்மகளின் கற்பறமே என்னும் நெறிமை யினையும் உணர்த்து ஏற்றுக்கொள்ளுகின்றது. ஏக்கமும், சினமும் பின்னிட அவன் நலமாகச் சென்று வளமாக வாழ வேண்டும் என்று வாழ்த்துகின்றது அந்தத் தாயுள்ளம்.*

### உடன்போக்கு

*பெற்றோர் காதல் நிலையை அறிந்தவரேயாயினும், தலைவன் தன் தமரின் அகன்று வந்ததையும் தெளிந்தவரேயாயினும், அவள் செவ்வியையும், அவர்களின் பொருத்தத்தையும் போற்றிப் பாராட்டும் இயல்பினராகவே பலரும் விளங்கக் காண்கின்றோம். இது அந்த நாளையத் தமிழ் மரபின் கனிந்த குடி நலச் செவ்வி என்று இடைச்சுரத்து உரைத்தபத்து கூறுகின்றது.*

### வாழ்த்திச் சொல்லுதல்

***யார்கொல்! அளியர் தாமே - வார்சிறைக்***
***குறுங்கான் மகன்றி லன்ன***
***உடன்புணர் கொள்கைக் காதலோரே? (ஐங். 381:3-5)***

*என்ற பாடல் புலப்படுத்துகிறது.*

*இடைச்சுரத்திலே செல்லும் காதலர்களை வழியிடையே கண்டாரான சிலர் அவர்களின் ஒன்றுபட்ட உள்ளத்தை வியந்தும், அவர்கள் மேற்கொண்ட செலவிடைப்படும் துயரங்கட்குப் பெரிதும் இரங்கியும், தமக்குள்ளே சொல்*

*லியதாக அமைந்த செய்யுள் இது. இடைவழியிலே செல்வாரின் மனம் அவர் களைக் கண்டதும் அவர்கள் பால் அருளோடும் சென்று, அவர்களைப் பற்றி நினைத்து இரங்குவதையும் அவர்களை வாழ்த்திச் செல்வதையும் காணலாம்.*

***கணமா தொலைச்சித் தன்னையர் தந்த***
***நிணவூன் வல்சிப் படுபுள்ளோப்பு***
***நன்னல நயவர வுடையை***
***என்னோற் றனையோ மாவின் தளிரே** (ஐங். 365)*

*தலைவியின் நினைவு*

*வரைவிடை வைத்துத் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் சென்று, தான் தேடிய பெரும் பொருளுடன் மீள்பவன், இடைச்சுரத்தே தளிர்மலிய விளங்கும் ஒரு மாமரத்தைக் கண்டு தலைவியின் நினைவு நெஞ்சிலே நிறைய அந்நெஞ்சினை நோக்கிக் கூறுவதாக அமைந்துள்ளன.*

***வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை***
***இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப***
***நீ நயந் துறையப் பட்டோள்***
***யாவ ளோவெம் மறையாதீமே** (ஐங். 370)*

*என்ற பாடல் புலப்படுத்துகிறது.*

*தலைவியின் நெஞ்சம்*

*ஒருத்தியின் கூந்தலிலே, பூவைச்சூடி அவளைத் தனக்கு உரியவளாக்கிக் கொண்டான் தலைவன். அதனைக் கேள்வியுற்ற தலைவியின் நெஞ்சம் கொதிக் கின்றது. அவன் வரவும் அவனிடம் அது பற்றிச் சினந்து கொள்ளுகின்றாள். அவன் அது பொய் என்று சாதிக்கின்றான்.*

இளவேனிற் பருவம்

*பொழுதே! என்று பொழுதைக் குறிப்பிட்டு, அதன் காரணமாகத் தான் கொள்ளும் துயரத்தினைத் தலைவி கூற்றாக, ஒவ்வொரு செய்யுளில் அமைந்த பத்துப்பாடல்கள் (341-350) பாலைத்திணையில் இடம் பெற்றுள்ளன.*

***அவரோ வாரார் தான் வந்தன்றே,***
***குயிற் பெடை இன்குரலகவ***
***வயிர்க் கேழ் நுண்ணற னுடங்கும் பொழுதே!*** *(ஐங். 341)*

*தலைவன் தலைவியைப் பிரிந்து வினைமேற் கொண்டவனாகச் சென் றிருக்கின்றான். அவளும் பிரிவைப் பொறுத்துத் தன் நோயைப் புறத்தே புலப் படாவாறு மறைத்து ஒழுகியபடி இருக்கின்றான். அவன் திரும்புவதாகக் குறித்த இளவேனிற் பருவமும் வந்தது. ஆனால் அவன் குறித்துச் சென்றபடி, இளவேனிற் பருவம் தொடங்கு முன்னே திரும்பி வரவில்லை. அவன் சொன்ன படி வந்து சேராத ஏக்கம் பொங்கி எழுந்து அவளை வாட்டி வதைக்கின்றது. அவள் தன் தோழிக்குப் பொழுதைக் காட்டிக் கூறுவதாக அமைந்துள்ளது.*

*குறுந்தொகையிலும் உடன்போக்கு தொடர்பான 12 பாடல்கள் பாலைத் திணை என திணைக் குறிப்பீடு பெற்றுள்ளன. உடன்போக்கு நிகழ்ந்த பின் அறத்தோடு நின்றமை பற்றிய கூற்றும் பாலையில் இடம் பெற்றுள்ளன.*

*பின்பு வரைவிடை வைத்துப் பிரிதல் பற்றியதும் பகற்குறி பற்றியது மான களவுக் கூற்றுப் பாடல்களும் பாலையில் வந்துள்ளன. இவற்றோடு இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் பிரிவச்சம் உரைத்தது(137) எனும் கூற்றும் பாலையில் இடம் பெற்றுள்ளது. ஆகப் பாலைப்பிரிவு கற்புக்கு மட்டுமல்ல களவுக்கும் உண்டு என்பதை இதன் வழி அறிய முடிகின்றது.*

*மனை மருட்சி (143, 149, 184) எனும் கூற்றுகளும் இடம் பெற்றுள்ளன. மனை மருட்சி என்பது உடன்போக்குவுடன் தொடர்புடைய துறையாக உள் ளது. மகள் உடன்போக்கில் சென்றபின் செவிலியும் நற்றாயும் மகள் இல்லாத வீட்டைக் கண்டும் அவள் அங்கிருந்த நிலைமையை மீள நினைத்தும் புலம்புவதே மனைமருட்சி. எனவே இந்த கூற்றுப்பாடல்களும் பாலை யிலேயே இடம் பெற்றுள்ளன.*

***அளிதோ தானே-நாணே நம்மொடு***
***நனிநீடு உழுந்தன்று மன்னே இனியே** (குறு. 149)*

**சேயிலை வெள்வேல் விடலையொடு**
***தொகுவளை முன்கை மடந்தையொடு நட்பே** (குறு. 15)*

*என்ற அடிகள் உணர்த்துகின்றன.*

*பெண்ணின் இதயம் ஆணின் அன்பையே நம்பி வாழ்கிறது. ஆணின் இதயமும் தன் அன்பையே நம்பி வாழ வேண்டும் என்று விரும்புகிறது. இது உலகியல் தன்னையே சுற்றிவரும் கணவன் பொருளிற்காகப் பிரியும்போது தன்னைவிட பொருள் முக்கியமா என்ற வினா வினை எழுப்பி ஏங்குகிறது தலைவியினுள்ளும் இவ்வுள்ளத்தினை நன்கறிந்தவள் தோழி அவளை ஆற்ற முயலும் தோழி, தலைவியின் துன்பத்தைத் தீர்க்க தலைவனின் அன்பையே முதல் கருவியாகக் கொள்கிறாள்.* [18]

நெடுந்தொலைவு

*நெடுந்தொலைவு செல்லும் தலைவன், தன்னை மறந்து அங்கேயே தங்கி விடுவானோ என்று அஞ்சும் தலைவியை ஆற்றப்புகும் தோழி, தலை வன் செல்லும் எல்லையைப் பொது நிலையாலும் திருவேங்கடம், அயிரியாறு, தேம்முது குன்றம் எனச் சிறப்பெல்லையாலும் கூறுகிறாள். இந்நீண்ட பயணத்*

*தைப் பொருளுக்காக மேற்கொண்டாலும் நின்னை நினைந்து உடனே வருவர் எனத் தலைவனின் பேரன்பைச் சுட்டிக் காட்டுகிறாள் தோழி.*

*தலைவன் பிரிந்து சென்ற போது பேசிய அன்பு சொற்களையும் செய்த செயல்களையும் நினைவுறுத்துகிறாள். தலைவன் அளி செய்ய வருவான் எனவும் கூறுகிறாள். காமன் விழவின்போது கலங்குவள் எனத் திண்டேர் கடவி வருவான் என்றும் கூந்தலில் மலர் புனையவும் தொய்யில் எழுதுவும் வருவான் எனவும் தலைவனின் பேரன்பு கூறி ஆற்றுவிக்கிறாள் தோழி.*

***உலகை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்***
***சிள்வீடு கறங்குஞ் சேய் நாட்டு அத்தம்***
***............................***
***வினையிடை விலங்கல போலும் புனைசுவர்ப்*** *(நற். 252 : 1-6)*

***அறலென நெறிந்த கூந்தல்***
***உறலின் சாயலொடு ஒன்றுதல் மறந்தே*** *(அக. 213 : 22-24)*

***இன்னிழ லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத்***
***தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவு*** *(கலி. 11:6-17)*

*என்றும் அன்புத் தோழி வற்றிய பாலையிலும் வற்றாத பேரன்பைக் காட்டி தலைவியை ஆற்றுவிக்கிறாள். அஃறிணையின் அன்பைக் காட்டி உயர்திணை யின் அன்பை நிலைநாட்டுகிறாள். அல்லலுறும் தலைவியைத் தோழி அவர் சென்ற வழியில் கொடிய மிருகங்கள் மட்டுமன்று. அருளுடைய உயிர்களும் உள. அதனால் அவை நின் தலைவனுக்கு ஊறுசெய்யா எனவும் கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள்.*

### பாலைத்திணையில் பொருளீட்டல்

தலைவன் குன்று பல கடந்து பொருளீட்டச் சென்றது எதற்காக? வினையே ஆடவர்க்குயிர் என்பதறிந்தவன் அவன் பொருள் இன்றியமையாதது என்பதுணர்ந்தவன் அவன். அத்தலைவன் உயர்ந்த குறிக்கோள்களுக்காகவே பிரிந்து சென்றிருப்பதால் நீ ஆற்றியிருத்தலும் சிறந்தது என வலியுறுத்திக் கூறு கிறாள் தோழி. தலைவர் உயர் நோக்கத்தால் பொருளீட்டச் சென்றிருப்பினும் முன்பு நின்பால் பெற்ற இன்பத்தை மறவார். அவ்வின்பம் பொருளால் பெற முடியாது. உன்னால் தான் முடியும் என்பதை அறிந்தவர். (அக-33, 43, 271, 53, 59, 69, 75) (குறு.174, 20, 180, 254, 216) (நற். 46, 71, 113, 166, 193, 208, 214, 243, 246, 252, 333, 337, 391) (ஐங். 302, 307, 317, 336, 355, 357) எனப் பாலைப் பிரிவின் நோக்கில் பொருளே இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை என்னும் நான்கு திணைகளிலும் மருதத்திணையில் பிரிவு வேறுபடுகிறது. நான்கு திணைகளிலும், தலைவன் பொருள், வேந்தன், தூது, வினை ஆகியவற்றிற்காகப் பிரிகிறான். மருதத்தில் பரத்தையின் பொருட்டுப் பிரிகிறான். பிற திணைகளில் பிரிவு தலைவனின் உயர்வைக் குறிக்க, மருதத் திணையில் இழிவைச் சுட்டுகிறது. நான்கு திணை களிலும் தலைவியை விட்டுப் பிரிந்து தலைவன் நெடுந்தொலைவு செல் கிறான். மருதத்தில் தலைவனின் பிரிவு மனையை மட்டும் நீங்கிய நிலையில் காணப்படுகிறது. மருதத்தில் உளப்பிரிவும், மற்றவற்றில் உடல் பிரிவும் அமைகிறது. மருதத்தில் தலைவனின் அன்பு மாறுகிறது. மற்றவற்றில் அன்பு மாறவில்லை. மற்றத் திணைகளில் ஆற்றுவித்தலில் வெவ்வேறு நிலைகள் காணப்பட மருதத்திணையில் தலைவன் பரத்தையைப் பிரிந்து மீண்டும் தலைவியை அடைவான் என்ற ஆறுதல் மொழியே கூற வேண்டுவதாகிறது. பிற திணைகளில் தலைவி பிரிந்த தலைவனுக்காக இரங்க மருதத்தில் தலைவன் நம்மை மறந்து மற்றொருத்தியை நாடினானே என்று ஏங்குகிறாள். இதுவே திணை அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ளன.

கூதிர் காலத்தின் இயல்பு, மதுரை, நகர வருணனை, தலைவி பிரிந் திருக்கும் நிலை, தலைவனின் பாசறை இயல்பு ஆகியவற்றைச் சிறப்புற வருணிக்கும் இப்பாடல்,

***நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்***
***சிலரொடு திரிதரும் வேந்தன்***
***பலரொடு முரணிய பாசறைத் தொழிலே***
***.........................................***
***இன்னே முடிகதில் அம்ம***

என்று முடிகிறது. அதாவது தோழியர் வேந்தன் ஈடுபட்ட பாசறைத் தொழில், அவன் மனைவிக்குத் துன்பம் நீங்க இன்னே முடிக என்று வாழ்த்துவதாக முடிகிறது.

பரத்தையர்

இத்தகு வீரயுகத்தில் பரத்தையர் பற்றிய செய்திகளும் காணப்படுகின் றன. 1. காமக்கிழத்தி, 2. இற்பரத்தை, 3. சேரிப்பரத்தை, 4. நயப்புப்பரத்தை என்று நான்கு வகையாகப் பேசப்படுகின்றனர்.

***நுரண் பூனாகம் வடுக்கொள முயங்கி***
***மாயப் பொய் பல கூட்டிக் கவவுக் கரந்து*** *(மதுரைக்காஞ்சி, 565)*

மாலைக் காலம் நீங்கியவுடன் தம்மை அலங்கரித்துக் கொண்டு பொய் பல பேசி, தம் இன்பத்தைக் கருதி வந்தோர் செல்வத்தை முற்றக் கவர்ந்து அவர்களைத் துறந்த பின்னும் கண்டவர் நெஞ்சை வருத்தமடையச் செய்து பொருள் கவரும் பரத்தையர் என்கிறது மதுரைக்காஞ்சி.

பொருள்தேடி வேற்று நாட்டிற்குச் செல்ல முற்பட்ட தலைவன் இடை யில் கடக்க வேண்டிய கொடிய பாலை வழியை, வழியின் வெம்மையை எண்ணுகிறான். தலைவியை உடன் அழைத்துச் செல்லவும் முடியாமல் விட்டுப் போகவும் இயலாமல் தவிக்கிறான். ஒரு முடிவுக்கு வருகிறான். தன் நெஞ்சிடம் காவிரிப்பூம்பட்டினத்தையே பரிசாகப் பெற்றாலும் திருமாவள வனின் செங்கோலினைப் போல, குளிர்ச்சி பொருந்திய தலைவியின் தோள் களைப் பிரிந்து, அவன் பகைவர் மேல் செலுத்தும் வேலைக் காட்டிலும் கொடிய வெப்பம் கானத்தைக் கடந்து செல்லேன் என்று செல வழங்குகின் றான். [19]

## பிரிவு வலித்த தலைவன்

பிரிவு வலித்த தலைவனின் கூற்றுக்கள் பிரிய விரும்பும் நெஞ்சினைத் தெருட்டிச் செலவழங்க விரும்பும் அவனது விருப்பத்தை வெளியிடுவனவாக அமைந்துள்ளன. பிரிய நினையும் நெஞ்சிற்குப் பிரியற்க என அறிவுரை தரும் பாடல்கள் உள்ளன.

பிரிய விரும்பும் தலைவனின் நெஞ்சிற்குப் பொருளால் தோன்றும் பயன்கள் நினைவுக்கு வருகின்றன. பிரிய மறுக்கும் தலைவனுக்குப் பொரு ளின் நிலையாமை மனத்துள்படுகிறது. தனது விருப்புடன் முரண்பட்ட நெஞ் சோடு கலந்துரையாடித் தலைவன் செலவழங்குவதைப் பாடல்கள் எடுத் துரைக்கின்றன.

ஆள்வினை ஊக்குதலால் பிரிதலை நன்று எனக் கருதிய நெஞ்சினைத் தலைவி தரும் இன்பத்தை எடுத்துரைத்தும் தலைவியைப் பிரிய இயலாத தன் நிலையை விளக்கியும், பொருளின் நிலையாமையைச் சுட்டியும் செலவழங்கு மாறு தலைவன் நினைக்கிறான். நாளது சின்மை, மூப்பின் வரவு, காமத்தின் இயற்கை ஆகியன அறிந்து பிரிவைத் தவிர்க்குமாறும், தலைவியைப் பொரு

ளாக மதிக்குமாறும் அவளை நினைந்து மகிழுமாறும் நெஞ்சிற்கு அறிவுரைகள் தரப்படுகின்றன.

தனது விருப்பத்திற்கு முரணாகப் பிரிவு வலித்த நெஞ்சை மட்டும் பிரிந்து செல்லுமாறும், வாரேன் எனவும் தலைவன் கூறி நிற்கும் காட்சிகள் இப் பாடல்களில் பெருகிக் கிடக்கின்றன. பிரிந்து பெறும் பொருள் வளமும், இருந்து பெறும் இன்ப வளமும் ஒப்பிடப்பட்டுத் தலைவி தரும் இன்பத்திற்கு முன் எதனையும் பொருட்படுத்தாத தலைவனின் மன ஓட்டத்தைக் காண முடிகிறது.

இதனை,

**முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்**
**வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிப**
**வாரேன் வாழிய நெஞ்சே** (பட்டினப்பாலை, 218-220)

என்ற அடிகளில் காணலாம்.

## இலக்கிய அடிப்படையில் பிரிவுகள்

இலக்கியம் மக்களின் வாழ்வியல் கூறுகளைப் பிரதிபலிக்கும் கருவூலமாகத் திகழ்கிறது. வாழ்வியல் என்றபோது மக்களின் அன்றைய வாழ்க்கை முறை, வழிபாடு, இயற்கை நிகழ்வு இவற்றை விளக்கும் விதமாக அமைந்துள்ளது. இலக்கியங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு காலங்களில் தோன்றியவை. அந்தந்த காலத்திற்கேற்றாற்போல இலக்கிய நிலைபாடுகளும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகையிலும் உள்ள வாழ்க்கை முறைகளைப் பற்றி விளக்கப்படுகின்றன.

தமிழ் இலக்கியத்திற்குத் தொடக்கமாய் அமைந்த சங்கப் பாடல்கள் தற்கால இலக்கியங்களுக்கு முதன்மையாகவும், முன்னோடியாகவும் திகழ்கின்

றன. பண்டைக் காலத் தமிழ் மக்களின் அக வாழ்க்கையில் வீரமும் கொடையும் திகழ்வதைச் சங்க இலக்கியங்களில் காணலாம். [20]

## நற்றிணையில் அகம் விளக்கம்

ந. சுப்பு ரெட்டியார் அகம் என்பதற்கு விளக்கம் தருகின்றார். ஐவகை ஒழுக்கங்களாகப் பேசப் பெறும் இதன் பல்வேறு துறைகளும் எளிய மெல்லிய சார்பினவாகும்.

## ஒருவழித் தணத்தல்

களவொழுக்கத்தை ஊரார் அறிந்த பின் அலர் எழுந்தது. அன்னை இற் செறிந்தாள். வெறியயர்ந்தாள், அகவன் மகளிடம் வினவினாள். இத்தகைய காரணங்களால் தலைவன் தலைவியைச் சந்திக்காமல் இருப்பது நலம் என்று தலைவியும் தோழியும் சேர்ந்து முடிவு செய்து தலைவனைச் சில காலம் கழித்து வருமாறு கூறுவர். இவ்வாறு தலைவன் தலைவி காணாத நிலையில் ஒதுங்கி நிற்றலை அகப்பொருள் நூல்கள் ஒருவழித் தணத்தல் என்று குறிப்பிடுகின்றன.

''அலரடங்குதற் பொருட்டுத் தலைமகன் சில நாள் வேற்றிடத்துச் சென்று உரையும் அகத்துறை'' என்று சென்னைப் பல்கலைக்கழக அகராதி விளக்கம் அளித்துள்ளது.[21]

**கானல் மாலைக் கழிநீர் பல்க**

**ஆனாது அலைக்குங் கடல்மீன் அருந்தி** (நற். 382)

என்று தலைவன் ஒருவழித் தணத்தல் காலத்து ஆற்றாள் ஆகின்ற தலைமகளின் வருத்தத்திற்கு வருந்தும் தோழி அவளை ஆற்றுவிக்கின்றார்.

சிலப்பதிகாரத்தில் கோவலன் தன் மனைவி கண்ணகியைப் பிரிந்து, மாதவியோடு வாழ்ந்தான் என்று கூறப்படுகிறது. கோவலன் இறந்துபட்டத

*னால் தனக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தாங்கமாட்டாது. ஒரு முலையைத் திருகி எறிந்தாள் என்பதைச் சிலப்பதிகாரக் கதை கூறுகிறது. இச்செய்தியும் நற்றிணை 216 ஆம் பாடலில்*

***எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்***
***குருகார் கழனியின் இதணத் தாங்கண்***
***ஏதி லாளன் கவலை கவற்ற.....***

*என அமைந்துள்ளது.*

*இந்நற்றிணை அடிகளுக்கு ஒப்பாக,*

***கான வேங்கை கீழோர் காரிகை***
***தான் முலை யிழத்து தனித் துயரெய்தி***

*என்ற சிலப்பதிகார அடிகளைக் காணலாம். இது கண்ணகி கதை ஒரு பழங்கதை என்பதை வலியுறச் செய்கிறது. நற்றிணைக்கு உரையெழுதிய பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் திருமாவுண்ணி என்பது கண்ணகி கதையைக் குறிக்கின் றது என்பர்.*

பரத்தையர் பிரிவு

***சேரியும் பெண்டிர் சிறுசொல் நம்பிச்***
***சுடுவான் போல நேர்க்கும்*** *(நற். 175:7-9)*

*என எடுத்துரைக்கின்றாள். காமத்தீ மிகுதியானதால் பால் மேல் படர்ந்த ஆடை போல் படர்ந்த பசலையால் நேர்ந்த மேனியின் நிறமாற்றத்தைக் கண்டும் ஊரிலே பெண்கள் எழுப்பும் அலரைக் கேட்டும் காவலில் வைத்தாள் அன்னை.*

*தலைவன் பரத்தையின் வளையலைக் கழற்றியதால் சினம் கொண்ட பரத்தை நடந்தவற்றைத் தலைவியிடம் கூறுவேன் என்றவுடன் நடுங்குகின் றான். இந்நிலையைத் தலைவி கேட்டால் தலைவனை வெறுப்பாள் என்ற*

*எண்ணம் பரத்தைக்கு வருகின்றது. தன்னை பழி சுமத்தியவனைப் பழி வாங்க வேண்டும் என்ற நிலைகளைக் காணும் போது தன் விருப்பத்திற்காகச் செய்யா விட்டாலும் தன்னை இந்நிலைக்கு ஆளாக்கியவர்களைத் தண்டிப்பதாகப் பரத்தை காணப்படுவதை உணர முடிகின்றது.*

பொருள் மேல் ஆசை

*பொருளாதாரத்தின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்ட பரத்தையர்கள் செல்வச் செழிப்பு மிக்க ஆடவர்க்கு பொழுது போக்கு அம்சமாகவே இருந்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.*

> ***பத்தினிப் பெண்டிர் அல்லேம் பலர்தங்***
> ***கைத்தூண் வாழ்க்கை கடவியல் அன்றே*** *(மணி. 8 : 15-24)*

*பரத்தையர்கள் பத்தினித் தன்மை இல்லாதவர்கள் எனவும், பலரின் கைப்பொருளைக் கவர்ந்து வாழும் வாழ்க்கையைக் கொண்டவர்கள் எனவும், யாழினைப் போன்று அடுத்தடுத்து உள்ளவர்களிடம் கைமாறுவதால் யாழினை ஒத்தவர்கள் எனவும், தேன் உண்ணும் வண்டினம் பசையற்றபோது வேறொரு பூவை நாடிச் செல்லும் வண்டுகளை ஒத்தவர்கள் எனவும் ஒருவனது நல்வினை நீங்கியபோது திருமகள் அவனை விட்டு ஒதுங்குவது போல் ஒருவனிடம் செல்வம் அற்றபோது அவனைக் கைவிடும் இயல்பினர் எனவும் கூறப்படுகின்றன. சமுதாயத்தில் பரத்தமையால் ஏற்படும் சிக்கலை அறிய மணிமேகலை காப்பியமே சான்றாகும்.*

குறுந்தொகை

உறுதிப்பொருள் இன்பம்

*சங்க இலக்கியங்களில் உறுதிப் பொருள்களாகக் கூறப்படுவன. அறம், பொருள், இன்பம் ஆகியவையாம். சங்க அகத்திணைப் பாடல்கள் அனைத்தும்*

ஒருவனும், ஒருத்தியும் நடத்தும் காதல் வாழ்க்கையினின்று பெரும் இன்பத் தினைப் படிப்படியாகப்படுகின்றன. தலைவனும் தலைவி ஊழ்வினைப் பயனாக எதிர்ப்பட்டு இருவரும் காதல் வயத்தராதலும், காதலித்துத் தலைவன் நீங்க, பிரிவுக்காலத் தலைவி வருந்துதலும், களவொழுக்கம் சில நாட்கள் நீடித்த பிறகு தலைவன் தலைவியை வரைந்து கொண்டு இன்ப வாழ்வு வாழ் தலும் சங்ககால அகப் பாடல்களில் உணர்த்தப்படுகின்றன.

**பால்வரைத் தமைத்தல் அல்லத் அவர்வயின்**

**சால்பு அளந்து அறிதற்கு யாஅம் யாரோ** *(குறு. 366)*

என்ற தலைவியின் கூற்று ஊழ்வினையினால் அவளும் தலைவனும் ஒன்று பட்டமையை உணர்த்துகின்றது.

**நள்ளென்றன்றே யாமம் சொல்லவிந்**

**தினி துடங்கினரே மாக்கள் முனிவு இன்று** *(குறு. 6)*

இப்பாடலில் தலைவியின் பிரிவுத் துன்பம் நெஞ்சை நெகிழச் செய்கிறது.

தலைவன், தலைவியை வரைதலும், இருவரும் இன்ப வாழ்க்கை நடத்துதலும் பற்றிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் மலிந்துள்ளன.

பாலைநிலத்தின் வழியே செல்லக்கூடிய காதலர்களை தலைவி, காலில் சிலம்பணிந்திருப்பதால் இவர்கள் இன்னமும் மணம் செய்து கொள்ளவில்லை என்று உறுதிப்படுத்திக் கொள்வதுடன் அவர்கள் நிலைக்கு இரங்குகின்ற நிலையை

**வில்லோன் காலன கழலே தொடியோள்**

**மெல்லடி மேவவும் சிலம்பே நல்லோர்** *(குறு. 7)*

என்ற குறுந்தொகைப் பாடல்கள் காட்டுகின்றன.

*இயல்புடைவராகிய கண்டோர் சிலர் காதலர்களிடம் பேசுகின்றனர். சிலர் அவர்களைப் பற்றித் தமக்குள் பேசிக் கொள்கின்றனர். சிலர் அவர்களைத் தேடிவரும் செவிலியிடம் பேசுகின்றனர் கண்டோர் களவுக்கு எதிரானவர் களாக இல்லை.*

தோழி கூற்று

*தோழி கூற்றில் வரும் இயற்கைப் புனைவிலும் ஈதலறம் வலியுறுத்தப் பெறுகின்றது. மலைப்பகுதியில் பலாமரங்களில் எல்லாம் இனிய பழங்கள் தொங்குகின்றன. அப்பழத்தின் இனிமையைக் குறிப்பிடும்போது தம்முடைய முயற்சியால் பொருளீட்டி அதனைப் பகுத்துப் பிறரோடு உண்ணும் இன்பத் தினை அதற்கு உவமையாக கூறுவது.*

***தம்பில் தமதுண் டன்ன சினைதொறும்***
***தீம்பழம் தூங்கும் பலவின்***
***ஓங்கு மலைநாடனை வரும் என்றோளே!*** *(குறு. 83)*

*என இடம்பெறுகிறது.*

*இவ்வாறு பலவகையாலும் சங்க இலக்கியத்தில் ஈதல் அறம் சிறப் பிக்கப் பெறும்.*

*தலைவன் நெடுநாள் பரத்தையரோடு சேர்ந்து தன் வாழ்வைப் பாழாக்கி னான். இதையறிந்து தலைவி அவன் மீது சினம் கொண்டாள். செய்வதறியாது சிந்தை தடுமாறி நின்றவள் என்றாலும் தலைவன் விரைவில் திருந்தி திரும்பி தன்னைத்தேடி வரமாட்டானா என்ற ஆசை அவளை விட்டுப் போகவில்லை. எப்போதும் நம்பிக்கையோடு இருப்பதுதானே நல்ல நங்கையின் இயல்பு. அவளும் அப்படியே இருந்தாள். எனவே தன் தலைவன் குற்றம் செய்தாலும் வெளியே சொல்லாமல் தன் நெஞ்சத்திலேயே வைத்து நொந்து கொண்டிருந்*

தாள். பலகாலம் கழித்து தலைவன் வருகிறான். தலைவியை நேரே பார்க்க அவன் நெஞ்சம் நடுங்குகிறது. குற்றமுள்ள நெஞ்சு அவனது மனம் கூசச் செய்கிறது. எனவே அவன் தோழியிடம் சொல்கிறான்.

***யாயா கியளே மாஅ யோளே***

***மடைமாண் செப்பில் தமிய வைகிய*** *(குறு. 9)*

*எப்படியாவது தன் தலைவியின் அன்பு மீண்டும் தனக்குக் கிடைக்கும் படி செய்ய வேண்டும் என்று அவளிடம் கெஞ்சிக் கேட்டுகிறாள். தோழி தலைவனின் நிலைக்கு இரங்குகின்றாள். பெண்ணின் நெஞ்சம் இளகும் நெஞ்சு தலைவன் மனம் ஆறுதல் அமையும் விதத்தில் அவள் பேசுகின்றாள்.*

ஐங்குறுநூறு

***நெடுங்கழை முளிய வேனில் நீடி (ஐங். 322)***

*பொருளீட்டத் தன் தலைவியைப் பிரிந்த தலைவன் சுரநெறியில் சென்ற போது, எப்போதும் தலைவியை நினைத்தபடி சென்றான். அவ்வாறு சென்ற வழி கோடைப் பருவமாகக் காணப்பட்டது. கொடிய கதிர்களை வீசும் சூரிய மண்டலம், கடும் கோடையைத் தாங்கவல்ல மலைகளையும் பிளக்குமாறு எரித்தது. அங்கு எரித்த வெயில் தலைவியை நினைத்து நடக்கும்போது தனக்கு எளிதாக இருந்தது எனத் தலைவன் உரைக்கின்றான்.*

பரத்தமை

*வேட்டைச் சமூகத்திலிருந்து கால்நடைச் சமூகம் தோன்றிய போது உடைமை தோன்றத் தொடங்கியது. பின்னர், ஆற்றங்கரை நாகரிகம் தோன்றி உழவுத்தொழில் வளர்ச்சியடைந்தவுடன் சமுதாயத்தில் இருந்த பொதுமை நிலை மாறித் தனியுடைமை பெருகியது. உற்பத்தி அதிகரித்ததால் சமுதாயத்*

தில் பரத்தமை ஒழுக்கம் தோன்றியது. மருதத்திணையில் தலைவனது பரத் தமையால் தலைவி ஊடல் கொள்வது உரிப்பொருளாக அமைந்துள்ளது.

தலைவி மகவீன்ற காலத்தில் தலைவன் பரத்தையை நாடிச் சென்றதாக அறிய முடிகின்றது. தலைவனது பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவியும் தோழி யும் எள்ளி நகையாடுவதும் கண்டிப்பதும் காணப்படுகின்றது. தலைவன் பரத்தையை அழைத்து வைத்து மணந்து கொண்டதாகக் குறிப்புகள் காணப் படுகின்றன. [22]

***நின்னினுஞ் சிறந்தன ளெமக்கே நீ நயந்து***
***நன்மனை மருங்கடி யர*** *(ஐங். 292:3-4)*

இப்பாடலில் இடம் பெறுபவள் பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவை என்று கூறப்பட்டுள்ளது. பரத்தையருக்குக் குழந்தை பெறும் உரிமை மறுக்கப்பட்டதையும் அறிய முடிகின்றது. [23]

பதிற்றுப்பத்து

***காவல் வேந்தன்***
***இலைப்பூங் கோதை யிலல்யினன் ழாமை*** *(சிலம். 31, 159-160)*

என இளங்கோவடிகளாலும்,

***காதல் காதல் அறியாமை துய்க்கிற்பின்***
***ஏதில ஏதிலார் நூல் (குறள்-440)***

எனத் திருவள்ளுவராலும் அது பிற்காலத்தில் கூறப்படுகின்றது. இதிலிருந்து போர் மேல் சென்ற வேந்தர் விறலியரையும் உடன் அழைத்துச் சென்றனர் என் றும் அவ்வாறு சென்ற விறலியர் பாசறையில் ஆடிப்பாடி வேந்தனுக்கும் வீரருக் கும் மகிழ்ச்சியூட்டினர் என்றும் அறியலாம்.

மன்னர் ஆயச்சுற்றத்தின் ஒரு பகுதியான பாணரும், புலவரும் வீர ரிடையே வீரப்புகழ் ஆர்வத்தை உண்டு பண்ணவும் அதை வளர்க்கவும் வீரர் களுக்கும் அவர்கள் முன்னோர்களின் வீரச் செயல்கள் பற்றிய படையுடன் சென்று மூதாதையரின் வீரச் செயல்களைப் பின்பற்றும்படி தம் போர்ப் பாடல் களால் வீரர்களையும் தலைவர்களையும் ஊக்கினர்.

தகடூர் யாத்திரை

சேரமான் பெருஞ்சேரலிரும் பொறை, அதியமான் நெடுமானஞ்சியை எதிர்த்துப் போரிட்டு வென்றனன் என்ற செய்தியினைப் பதிற்றுப்பத்தின் எட்டாம்பத்திலிருந்து அறிகிறோம்.

**வெல்போ ராடவர் மறம்புரிந்து தாக்கம்**
**வெம்முனை தபுத்தகாலை**

எனப் பெருஞ்சேரலிரும் பொறையின் வெற்றியைப் பதிற்றுப்பத்து பாடுகிறது.

போரில் வல்ல வீரர்கள் வீர உணர்வோடு காக்கும் காவற்காட்டை யுடைய அதியமானின் தகடூரை அழித்துச் சீற்ற மிகுதியால் பகைவர்கள் அஞ்சும்படி அவர்களைப் பிறழ நோக்கி அப்பகைவர் வலிமை கெடும்படி சென்று பகைப்புலத்தை அழித்தபோது என்பது இவ்வடிகளின் பொருள்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் வீரச் செயல்கள் பற்றிய வரலாறு தமிழகத்தில் நெடுங்காலம் நிலவி வந்திருத்தல் வேண்டும்.

நக்கீரரும் தலைவியின் பசலை நோய் தலைவனைக் கண்டதும் விரைந்து நீங்கியதற்கு ஈதலையே கடமையாகக் கொண்டவனது கைப்பொருள் ஒருவழி நில்லாது வரைந்து செல்லுதலை உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

பரிபாடல்

தொழில் செய்து பொருளீட்டும் காதலனுக்கு காதலி தான் வாழ்க்கை யிலே உற்சாகமூட்டும் உயிர். இதைப்போலவே இல்லத்திலே இருந்து கடமையைச் செய்யும் காதலிக்கு காதலனே இன்பத்தையும் மகிழ்ச்சியையும் ஊட்டும் உயிர். நமது காதலர் தான் இவ்வுண்மையை நமக்குரைத்தார். ஆதலால் தோழியே நீ வருந்தாதே. அவர் இப்பொழுது பிரிந்து செல்லமாட்டார். அவராகவே தன் பயணத்தை நிறுத்திக் கொள்வார்.

**வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்**
**மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என**
**நமக்குரைத் தோரும் தாமே**
**அழா அல் தோழி அழங்குவர் செலவே**

கணவன் பொருள் தேடப் பிரிந்து செல்வான் என்று எண்ணிய தலை விக்கு அவள் தோழி சமாதானம் சொல்வதாக அமைந்துள்ளது. இல்லறத்தில் உள்ள தம்பதிகள் ஒரு மனப்பட்டு வாழ்ந்தனர் என்பதற்கு இப்பாடல் எடுத்துக்காட்டாகும்.

**சங்ககாலச் சேரிகள்**

நடன மகளின் குடியிருப்பு ஆடுவர் சேரி என்று பெயர் பெற்றது. ஆவொர்சேரி அடைந்தது வையை வெள்ளம் என்பது ‘‘ (பரிபாடல் 7, அடி:32) காண்க.

பரத்தமை சமுதாயத்தில் இகழப்பட்ட நிலையையும் காண முடி கின்றது. பரிபாடல் பரத்தையை விலைக் கனிகை என்று குறிப்பிடுகின்றது.

### வேதம்

*மறை என்றும் வேதம் என்றும், வாய்மொழி (பரிபாடல்- 3,11,12) வேதம் ஓதுதல் சிறப்பால் அந்தணர் நான்மறைப் புலவர் எனச் சிறப்பிக்கப் படுகின்றனர்.*

***நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்***
***வாய்மொழிப் புலவர் (9:12:13)***

*வேதத்துள் இலைமறைக் காய் போல் மறைந்து கிடக்கும் பொருள்களை விளக்கும் மீதியை உபநிடதம் என்றும் வேதத்தின் ஞானகாண்டம் உரைக்கும் நூல்.*

***அறத்தினுள் அன்புநீ; மறைத்தினுள் மைந்துநீ***
***வேதத்து மறை நீ பூதத்து முதலுநீ*** *(பரி. 3;65-66)*

*என்றும் பரிபாடல் பகுதியில் வேதத்து மறை என்பது உபநிடதம் என்பதைக் குறிக்கும் என்பர்.*

### வேத வேள்வி

*செந்தீப் பேணி வேள்வி செய்து வழிபடும் முறை மூவேந்தர் நாட்டிலும் மிகப் பரவியிருந்ததாகத் தெரிய வருகிறது.*

*அந்தணர் வேள்வி நடத்துதற்கு உரியவராகக் கூறப்படுகின்றனர். காடுகளில் முனிவர் வேள்வியைப் பற்றிய குறிப்பும் உண்டு. சேர, சோழ, பாண்டிய மன்னர்களும் பாரி, அதியமான் முதலிய குறுநில மன்னர்களும் அந்தணரைக் கொண்டு வேள்வி செய்வித்து வழிபாடு நிகழ்த்தினர் என்பதைப் புறநானூறு பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி முதலியவற்றிலிருந்து தெளிவாகத் தெரிய முடிகிறது.*

*கலித்தொகை*

*ஒரு சங்கப் பாடலில் பிரிவு பற்றிக் கூறிய தலைவனிடம் தலைவி தன்னையும் உடன் அழைத்துச் செல்லுமாறு வேண்டுகிறாள். தலைன் காட்டின் கொடுமையையும், தலைவியின் மென்மையையும் எடுத்துரைத்து அவள் கோரிக்கையை மறுக்கிறான். தலைவி அதற்கு மறுமொழியாக வாழ்நாள் மிகக் குறைவானது. இளமை மிகமிகக் குறைவானது எனக் கூறித் தன்னையும் அழைத்துச் செல்லத் தலைவனிடம் இறைஞ்சுகிறாள்.*

***.................................. தம் இன்றி***

***யாம் உயிர் வாழும் மதுகை இலே மாயின்*** *(கலி. 24 : 14 - 15)*

*தலைவனின் பிரிவைக் குறிப்பால் உணர்ந்த தலைவி, தான் தலை வனைப் பிரிந்து உயிர் வாழும் வலிமை இல்லாதவள் என்றும் பிரிந்தால், தன் உயிரும் தலைவனோடே போய்ச் சேரும் என்றும் தலைவனிடம் சொல்லும் படி தோழியிடம் எடுத்துரைக்கிறாள். எனவே சங்க நூற் பாடல்கள் பிரிவையும் பிரிவின் நிமித்தத்தையும் கொண்டு அமைந்திருக்கும் பாங்குடனே ஆழ்ந்த அனுபவங்கள் வாழ்க்கை உண்மைகள் போன்றவற்றை உள்ளடக்கியுள்ளன.*[24]

வேந்தர்க்குற்றுழிப்பிரிவு

*தனக்கு நண்பனாக இருக்கும் அரசனுக்கு ஏதாவது ஒரு காரணத்தால் ஆபத்து நேருமாயின் அதனை நீக்கும் பொருட்டுப் பிரியும் பிரிவு இவ்வகை யான வேந்தர்க்குற்றும் பிரிவு ஆகும்.*

*சங்க இலக்கியத்து பல பாடல்கள் தலைவியைப் பிரிந்த தலைவன் பொருள் தேடச் செல்கையில் தலைவி வருத்தமுடன் தன் தோழியிடம் உரையாடுவதைக் காண முடிகிறது.*

பிரிவாற்றமை

தலைவி தலைவன் பிரிவிற்கு உடன்படாதவள் பிரிவுத் துன்பத்தை பொறுத்துக் கொள்ள இயலாதவள், தலைவன் பொருளுக்காகப் பிரிந்து சென்று விரைவில் வந்து விடுவேன் என்கின்றான். அதற்கு தலைவி பிரிந்து செல்லாத நிலையாக இருந்தால் மட்டுமே என்னிடம் சொல்லுங்கள் உயிர் உங்கள் பிரிவை ஏற்றுக் கொண்டு வாழ வல்லவர் யாராவது இருந்தால் அவரிடம் மட்டும் சொல்லி விட்டுச் செல்லுங்கள் என்று கூறுகிறார்.

இப்பிரிவாற்றாமையை நாட்டுப்புறப் பாடல்களிலும் காண முடிகின்றது.

**எலுமிச்சை பழம் போல**
**இது பேரும் ஒரு வயது**
**யாரு செய்த தீவினையே**
**ஆளுக்கொரு தேச மானோம்**

என்று நாட்டுப்புறக் காதலி காதலன் பிரிவை எண்ணி வருந்துகிறாள். தலைவன் பிரிவால் மாலைக் காலத்தில் வருந்துகிறாள். தலைவி மாலையின் இன்பத்தை யும் தருகிறது. மாலைக்காலத்தில் பிரிந்தவர் அடையும் துன்பத்திற்கு நீர்ப்பூக் குவிதலையும் சேர்ந்தவர் மகிழ்ச்சியாய் இருப்பதற்குக் கோட்டுப்பூ மலர்வதை யும் உவமை கூறுகிறார். [25]

**தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை**
**முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய் (கலி. 118)**

என்கிறது. நீர்ப்பூக்கள் குவிந்து விரியும் தன்மை உடையவை. கோட்டுப்பூக்கள் விரிந்து விட்டால் பிறகு கூம்பாது. இதனைக் கண்டு பிற்காலப் புலவர்கள் உயர்ந்தோர் நட்பிற்குக் கோட்டுப் பூக்களையும் தாழ்ந்தோர் நட்புக்கு நீர்ப்பூக் களையும் உவமையாகக் கூறுகின்றனர்.

பரத்தையின் பிரிவு

*பரத்தையின் பிரிவு என்பது பொதுப் பெண்டிர் மட்டும் பிரிவது ஆகும். தலைவியை விட்டுத் (அவன்) தலைவன் வேறொரு பெண்ணிடம் பிரிதல் இவ்வகைப் பிரிவு ஆகும். பரத்தையை நாடிச் சென்ற தலைவனைப் பற்றிச் சங்கப் பாடல்கள் அதிகம் கூறுகின்றன. பரத்தையின் பிரிதல் என்பது தலை மகளை உரைந்தெய்திய பின்னர் வைகலும், பாலே நுகர்வான் இடையே புளிங் காடியையும் நுகர்ந்து அதன் இனிமை அறிந்தாற்போல அவன் நுகர்ச்சியினிமை அறிதற்குப் புறப் பெண்டிர் மாட்டுப் பிரியா நிற்றல் அல்லதூஉம் பண்ணும் பாடலும் முதலாயின நாட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால்தான் எல் லோருக்கும் தலைவனாகலின் அவர்க்கும் இன்பம் செய்யப் பிரிய என்பது மாம்.* [26]

அகநானூறு

*ஆக்களைக் கவர்ந்து வந்து கள்ளுக்கு விலைவாக்கியும் கொன்று தின்றும் பலியிட்டும் துன்புறுத்திய வீரர்களுக்கிடையே ஆநிரைகளின் துன்பத் தைத் துடைத்த வீரர்களையும் காண முடிகின்றது.*

*ஆநிரைகளைக் கவர்ந்தால் குடிகள் அவ்வூரை விட்டு நீங்கிச் சென்றனர். அதனால் பொது மன்றம் பாழ்பட்டது.*

**பல்லூழ் புக்கு பயனிரை கவரக்**
**கொழங்குடி போகிய பெருபாழ் மன்றத்து** *(அகம். 377-5-6)*

*தாம் செல்வமாகக் கருதிய நிரைகளைக் காக்க இயலாததால் குடிகள் அவ்வூரை விட்டுச் சென்றுள்ளனர்.*

ஆநிரைகள் மட்டுமே உடைமையாக இருந்த காலத்தில் அவற்றை மையமாக வைத்தே போர்கள் ஏற்பட்டன. நிரை கவர்தலும் மீட்டலும் போருக்குக் காரணங்களாயின.

**விளையின் பெயர்க்கும் தானைப்**

***புனைதார் வேந்தன் பாசறையேமே*** *(அகம். 84:10-17)*

உலகியல் வாழ்விற்கு இன்றியமையாத பொருளைச் சேர்த்தலும செயற்பாடும் தவிர்க்க முடியாதவை. ஆனால் பொருளிலும், வினையிலும், சிறந்ததாகப் பொன்றாக் காதலையே போற்றினர் தமிழ்ச் சான்றோர்[27] என்பர். அதற்கேற்பத் தலைவன் தன் கடமையாகப் பொருளீட்டலையும், தன் உரிமையாகக் காதல் வாழ்வையும் மேற்கொண்டிருந்து தெளிவாகிறது.

***தகரம் மண்ணிய தண் நறு முச்சி*** *(அகம். 393)*

தலைவியைப் பிரிந்து தலைவன் பொருள் ஈட்டச் சென்றான். அவன் பிரிவினைத் தாங்க முடியாத தலைவி வருந்துகிறாள்.

சிலப்பதிகாரத்தில் மனையறம் படுத்த காதையில் கோவலன் கண்ணகி நலம் பாராட்டலும், சீவகசிந்தாமணியில் குணமாலை, பதுமை, கேமசரி, கனக மாலை, விமலை ஆகியோரைச் சீவகன் தற்செயலாய் எதிர்ப்பட்டு அவனும் அவர்களும் காதல்கொண்டு பின் பிரிவுக் காற்றது அவர்கள் வருத்தித் தூற்று தலும் முதலில் அரசேற்ற பின்பு தம் மனைவியர் என்பருடன் அவன் இன்ப வாழ்வு வாழ்தலும் சங்க இலக்கிய மரபுகளை யொட்டியனவேயாகும். மிதிலைக் காட்சிப் படலத்தில் இராமனும் சீதையும் ஒருவரையொருவர் கண்டு காதலிப்பதும் பின்பு இருவரும் காதல் நோயால் பெரிதும் ஏங்கி வருந்துதலும் அகப் பாடல்கள் மரபுப்படி கம்பரால் பாடப்பட்டவையாகும்.

பிரிவில் மெலிந்த தலைவியைத் தோழி அறிவுரை கூறி ஆற்றுகின்றாள். அதற்குத் தலைவி கூறும் மறுமொழியில் பல வகையான அறக்கருத்துக்கள் காணப்படுகின்றன. பிரிவாற்றாது தலைவி இறந்து போனால் பிரிந்து சென்று ஈட்டிய பொருளினால் யாது பயன்? என்கிறார். [27]

மருத்துவர்கள் மரம் அழியும்படியாக பட்டையையோ, வேரையோ, இலையையோ கொள்ளமாட்டார்கள். குடிமக்கள் வறுமையுறுமாறு மன்னர் கள் வரிவாங்கமாட்டார்கள். இத்தலைவியின் உரையால் மருத்துவர், தவ முனிவர், அரசர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் எனக் கூறப் பெறுதல் காணலாம்.

தலைவன் பிரிந்து பொருளீட்டச் செல்வது ஈதலும் துய்த்தலும் இல் லோர்க்கில்லை என்பதனைக் கருதியே தான் ஈத்துவர்க்கும் இன்பம் மிகச் சிறந்தது என்பது சங்ககாலத்துக் கருத்து, வள்ளுவரும் மகளிர் இன்பத்துக்குத் தம்மில் இருந்து தமது பாத்துண்டலை (1107) ஒப்புமை காட்டுவர். மருதனிள நாகனார் வள்ளுவரைவிட ஒருபடி மேலேறி தலைவியின் இன்பத்தைவிட ஈதல் இன்பம் சிறந்தது என்று தலைவன் கூற்றில் வைத்துத் தம் கருத்தைப் புலப்படுத்துகின்றார்.

**சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை**
**இவளினும் சிறந்தன்று ஈதல்** (அகம். 131)

### பகை தணிவினைப்பிரிவு

இரு நாடுகளுக்கிடையே பகை ஏற்பட்டு, அதனைச் சமாதானம் செய் யப் பிரிதல் பிரிவு ஆகும். இது தூதுவர்போலச் செல்லுதல் அன்று. இரண்டு வேறுபட்ட மன்னர்கள் ஒருவருக்கொருவர் இன்று போர் தொடங்குவேன். நாளை போர் தொடங்குவேன் என்று மாறுப்பட்ட கருத்துக்களால் முரண்

கொண்டிருப்பதைக் கண்டு இவர்கள் போர் தொடங்கினால் இவர் தம் அகந்தையின் காரணமாக ஒன்றுமறியாத மக்களும் விலங்குகளும் அழிந்துவிட நேரிடும் என்று இரக்கம் கொண்டு அவ்வகையிலேனும் அப்போரைத் தடுப்ப தற்கு உதவியாக உள்ளன.

**இரவுத் துயல் மடிந்த தானை**
**உரவுச்சின வேந்தன் பாசறையேமே** *(அகம். 24-84)*

புறநானூறு

போரில் பகைவரை வென்ற திறத்தைப் பாடுவது வாகைத்திணை இத்திணையைத் தழுவி புறநானூற்றில் 77 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

வலிமை

இரு பெரும் வேந்தரும் எதிரெதிர் நின்று போர் புரியும் போது தும்பைப் பூவைச் சூடுதல் தும்பைத் திணையாகும். இத்திணையைத் தழுவி புறநானூற் றில் 29 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இரு திறத்தாரும் தன் வீரத்தைக் கொண் டாடுமாறு ஒரு வீரன் களத்தில் சிறப்பு எய்தி நிற்பதைக் கூறுதல் தானை நிலை என்னும் துறையாகும்.

**நான்முறை தபுத்தீர் தும்பிள் ஈங்குளனப்**
**போர் மலைந்து ஒரு சிறைநிற்ப யாவரும்** *(புறம். 294)*

வீரனொருவன் நம்மில் வாழ்நாள் முறை தீர்ந்தவர் யாரோ, அவரெல் லாம் இங்கே விரைந்து வருக என்று கூறி எதிர் நின்ற படையினரை அழித்து நிற்கின்றான்.

**எம் போல் ஒருத்தி நலயைத் தென்றும்**

**வரூஉம் என்ப வயங்கு புகழ்ப் பேகன்**

**ஒல்லென ஒலிக்குத் தேரொடு**

**முல்லை வேலி நல்லூ ரானே** *(புறம். 144-11-14)*

*என்ற புறநானூற்று அடிகளினின்றும் நமக்குப் புலனாகிறது. புகழ் விளங்கும் பேகன் முல்லை வேலியாகவுடைய தேரொலிக்கும் நல்லூரின்கண் எம் போல் ஒருத்தியின் அழகை என்றும் காதலிக்கிறான் என்று பேகனிடம் பரிசில் பெற வந்த பரணரை நோக்கி அவன் மனைவி கண்ணகி கூறியதாக இப்புறப்பாடல் உணர்த்துகிறது.* [28]

**செல்வத்துப் பயனே ஈதல்**

**துய்ப்போம் எனினே தப்புன பலவே** *(புறம். 189)*

*எனக் கொடையறத்தை வலியுறுத்திக் கூறுகின்றார்.*

*வீரத்தினால் ஈட்டிய பொருளை வறியவர்க்கு வழங்குதலையே சங்க இலக்கியம் சிறப்பித்துக் கூறுகின்றது. மழபுலவஞ்சி, உழபுலவஞ்சி, பாதீடு, கொடை முதலிய புறத்துறைகளும் இதனை உணர்த்தும். மதுரை குமரனார் ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறனைப் புகழும் துறையும் இக்கருத்தை வலியுறுத்துகிறது. இரவலர்கள் பொருள் வேண்டி மாறனை இரக்கின்றனர். அவன் இரவலர் தம் ஒட்டிய வயிற்றைச் சுட்டிக்காட்டிக் கொல்லனை நோக்கி விரைவில் இவ்வேலை வடித்துத் தருக என இரைக்கின்றான். காரணம் வேல் கொண்டு வெற்றி எய்தி, வெற்றியால் வந்த பொருளைக் கொண்டு இரவலர் பசி போக்குதலேயாகும்.*

**விலை நலப் பெண்டிரின் பலர் மீக் கூற**

**உள்ளேன் வாழியர் யான்** *(புறம். 365, 9-10)*

*என்பதனால் அறியலாம்.*

பழக்க வழக்கம்

*அக்காலத்தில் ஆடவர் பல மனைவியரை மணந்து கொள்ளும் பழக்கம் இருந்தது. ஆயினும் ஒரு மனைவியோடு வாழ்தலும் மனைவியிறந்த பின்னர் வேறொரு பெண்ணை மணந்து கொள்ளாமல் அவள் பிரிவாற்றாமையால் வருந்துதலும் அக்கால ஆடவர்களிடையே போற்றப்பட்ட சிறப்பியல் புகளாய் இருந்துள்ளன.* [29]

தொகுப்புரை

*1.அகத்திணையுள் அதிகமாகப் பாடம் பெற்றது பாலைத்திணையே. பாலைப்பாடல்கள் 530, குறிஞ்சி 488, நெய்தல் 344, மருதம் 263, முல்லை 234.*

*2. தலைமகன், தலைமகள், தோழி, பாங்கன் ஆகிய நால்வர் கூற்றாகவே குறிஞ்சித்திணைப் பாடல்கள் அமைகின்றன.*

*3. பிரிவில்தான் காதல் உள்ளங்களின் நெருக்கம் அதிகமாகப் புலனாகு மென்பதால் களவு, கற்பு வாழ்க்கையில் ஏற்படும் பிரிவுகளின் அடிப்படையில் நூல்கள் தோன்றியுள்ளன. பாலைக்கொரு வழியும், குறிஞ்சியின் அருநெறியும் பாடல்களில் ஒரு தன்மையுற விளக்கப் பெறுகின்றன. வேனில் வெம்மையும் நீரின்மையும் பெறுகின்றன. ஆறலைக் கள்வர் கொடுமையும் தொலையா நெடுவழியும் பாலைக்குரியன.*

*4. முல்லைத்திணையில் போர்வயிற் பிரியும் தலைவனை நோக்கித் தலைவி இரங்குதல், தலைவன் நெஞ்சிற்குக் கூறிச் செலவழங்குதல் ஆகியன இல்லை. பாலையில் பொருள்வயிற் பிரிவு குறித்த பாடல்களில் இவை உண்டு.*

*5. முல்லைத் திணைக்கு உரியனவாக 234 பாடல்கள் உள்ளன. போரிற் குத் தலைவன் சென்று திரும்புதலை 138 பாடல்களும், இவற்றுள் தேர்ப்*

*பாகனை விரைந்து தேரைச் செலுத்தத் தூண்டுவதாக 50 பாடல்களும், குறித்த காலத்தில் ஊர் திரும்ப இயலாத தலைவனின் ஆற்றாமையினைப் பதினைந்து பாடல்களும் கூறுகின்றன. கார் எதிர்த்தும் தலைமகன் வாராமைக்குத் துயரும் தலைவியைத் தோழி ஆற்றுவதாக 75 பாடல்கள் உள்ளன.*

*6. மருதத்திணை 263 பாடல்களைப் பெறுகின்றது. இவற்றில் 221 பாடல்கள் பரத்தையிற் பிரிவு குறித்தன. இவற்றில் முல்லை உரிப் பொருள்கள் மயங்கியுள்ளன. ஐங்குறுநூற்றில் அம்மூவனார், 13 பாடல்களில் மருதத்தில் களவு நிகழ்தலைக் காட்டுகின்றார். மருதத்திணைப் பாடல்களில் தலைவி கூற்று 101, தோழி கூற்று 98 பரத்தை கூற்று 40 தலைவன் கூற்று 17 வாயில் கூற்று 1 மருதக் கலியில் உள்ள இரு பாடல்கள் சான்றோர் காதலைக் கூறினும் சொல் நெறியில் பெருந்திணைப்பட்டன.*

*7. நெய்தலில் களவு பேசப்படுகிறது. எனினும் குறிஞ்சித் திணையிற் காணப்படும். களவுக் காலத்தில் தலை மக்களிடையே ஏற்படும் பிரிவைக் காட்டிலும் நெய்தல் திணையிற் காணப்படும் களவுக்காலப் பிரிவு அதிகமாக உள்ளன. கலித்தொகையில் நெய்தல் திணைக்குரிய பாடல்களில் பத்துப்பாடல்கள் பெருந்திணைக்குரியன. ஆற்றொணாப் பிரிவின் கொடுமை பெருந்திணையாக வெளிப்பட்டுள்ளது.*

*8. 530 பாலைத்திணைப் பாடல்களில் பொருள்வயிற்பிரிவு பற்றியன 108 பாடல்கள் உடன்போக்குக் குறித்தன. உடன்போக்கு நெய்தல் குறிஞ்சித் திணைகளுக்கே உரியதாக அமைகிறது.*

*9. பாலைப்பாடல்களில் பொருள்வயிற் பிரிவு குறித்தவற்றில் தலைவன் கூற்று 106, தலைவி கூற்று 153 தோழி கூற்று 162, பாணன் கூற்று 7, உடன் போக்குக் குறித்தவற்றில் தலைவன் கூற்று 14, தலைவி கூற்று 7, தோழி கூற்று*

*14, தாய் கூற்று 59, தலைவன் பிரிவு 17 குறித்துத் தலைவியும் தோழியும் கூறுவனவாக 40 பாடல்களும் ஆற்றிடைத் தலைவன் கூற்றாக அமைந்தனவாக 40 பாடல்களும் உள்ளன.*

*10. பாலைப்பிரிவில் வருந்தும் தலைவியின் பிரிவுத்துயரைக் காட்ட வாடையும் பிரிவும், மழையுமெனப் பின்புலம் ஓவியப்படுத்தப் பெறுகின்றது. 40 பாடல்கள் இளவேனிற் காலத்தில் திரும்பும் தலைவன் வரவைப் பற்றியன.*

*11. பாலைத் திணையில் தான் அதிகமாகச் செலவழுங்குவித்தல் பாடல்கள் உள்ளன.*

*12. குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிகிறான், தலைவன் வரைவு நீட்டிக்கிறான். ஒருவழித் தணந்து வருகிறான். அலரோ துன்புறுத்துகிறது. இற்செறிப்பு நிகழ்கிறது. பருவ வரவோ பிரிவுத் துன்பத்தை அதிகமாக்குகிறது.*

*13. வரைவிடை வைத்துப் பிரிதல், இற்செறிப்பு, அலர், தலைவன் வரைவு நீட்டல் ஆகிய நிலைகளில் வருந்தும் தலைவியைத் தோழி ஏற்ற முறையில் கூறி ஆற்றுவிக்கிறாள்.*

*14. பாலைத்திணையில், தலைவன் குறித்த பருவமாக இளவேனிலும் இடம் பெறுகிறது. பாலைத்திணையில் தலைவன் களவு வாழ்விலும் கற்பு வாழ்விலும் பிரிந்து செல்வதாகக் காட்டப்படுகிறான்.*

*15. களவு, கற்புக்காலப் பரத்தமைப் பிரிவுகள் வேறுபடுகின்றன.*

*16. மருதத் திணையிலும் நெய்தல் திணையிலும் வாயில் மறுக்கும் நிலை மாறுபடுகிறது.*

*17. குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை என்னும் நான்கு திணைகளிலும் மருதத்திணையில் பிரிவு வேறுபடுகிறது. பிற திணைகளில் பிரிவு, தலைவனின் உயர்வைக் குறிக்க பரத்தையிடத்துச் செல்லும் மருதத் திணையில் இழிவைச் சுட்டுகிறது. நான்கு திணைகளிலும் தலைவன் நெடுந்தொலைவு சென்றாலும், அன்பு மாறாத உடல் பிரிவாக அமைகிறது. மருதத்திணையில் மனையை விட்டு மட்டுமே நீங்கிய அன்பு மாறிய உளப்பிரிவு அமைகிறது. பிற திணைகளில் தலைவி பிரிந்த தலைவனுக்காக இரங்க, மருதத்தில் தலைவன் நம்மை மறந்து மற்றொருத்தியை நாடினானே என்று ஏங்குகிறாள்.*

**சான்றெண் விளக்கம்**


1. *ந. இராணி, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப. 57*
2. *மேலது, ப. 87*
3. *அ.பாண்டுரங்கன், தொகையியல், ப. 47*
4. *மேலது, ப.164*
5. *ந.இராணி, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.254*
6. *சோலை சுந்தரபெருமாள், தமிழ் மண்ணில் திருமணங்கள், ப.105*
7. *சாமி. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப. 72*
8. *பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப. 51*
9. *சரளா இராசகோபாலன், சங்க இலக்கியங்களின் தோழி, ப. 314*
10. *செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 29*
11. *பெ. மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக் கவிதை மரபும், ப. 125*
12. *வீ. குமாரசாமி ஐயர், ஐங்குறுநூற்றில் சொற்பொழிவு, ப. 45*

13. ஆ. இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தன் ஓர் ஆய்வு, ப. 73
14. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 250
15. சரளா ராசகோபாலன் சங்க இலக்கியத்தில் தோழி, ப. 20
16. அ.பாண்டுரங்கன், தொகையியல், ப. 87
17. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப. 125
18. சரளா இராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப. 288
19. இராசமாணிக்கனர், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.50
20. பெ. மாதையன், சங்க இலக்கியல் குடும்பம், ப. 51
21. ம. கேசையா, சங்கத்தமிழ் விருந்து, ப. 50
22. இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப. 120
23. சங்க இலக்கியக் கட்டுரைகள், ப. 55
24. க.ஜெயபாலன், தமிழர் இலக்கியப் புரட்சி, ப. 200
25. மு.வை.அரவிந்தன், தமிழக நாட்டுப்பாடல்கள், ப. 12
26. ந. சுப்புரெட்டியார் சங்க மரபு, ப. 25
27. ம.ரா.போ. குருசாமி, சங்க காலம், ப.43
28. திருவாவடுதுறை ஆதினம், சங்க இலக்கியச் சொற்களஞ்சியம், ப. 235
29. சீ. இலக்குவனார் இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்ககாலம்), ப. 37.

இயல் நான்கு

# புறத்திணைப் பிரிவுகள்

சமுதாயத்தில் குடும்பம் குடும்பமாக வாழும் பல்லாயிரக்கணக்கான மக்கள் தங்கள் பொது வாழ்க்கையிலும் அரசியல் வாழ்விலும், ஆட்சி முறைகளிலும் உரிமையும் கடமையும் கொண்டு பசியும் நோயும், பகையும் இன்றி ஒத்து வாழும் நல்வாழ்வுக்குத் துணை நிற்பது புறச் செயல்களாகும். அவர்களின் கடமை வாழ்வைக் கூறுவது புறத்திணை இயல் எனப்படும்.

தொல்காப்பியர்க்கு முன்பு முற்றிலும் போர்த் திணைகளாக அமைந்த ஏழு திணைகள் தொல்காப்பியர் காலத்தில் மாற்றம் பெற்றுள்ளன. வீரநிலைக் காலத்திருந்த முரட்டு வீரம், அறக்கோட்பாடுகள் மிக்கதாக மாற்றம் பெற்றமை யினைப் புறப்பாடல்கள் காட்டுகின்றன.

தலைவன் தனக்கு வேண்டிய அரசர்கள் போர்மேற் செல்லும் நிலையில் அப்போரில் உதவி செய்வதற்காகச் செல்லும் பிரிவிலும் கூற்று நிகழும். பொருள் இல்லாமையினால் இழிவு ஏற்படும்.அதனால் ஏற்படும் வறுமையை நினைத்துப் பார்க்காத இடத்திலும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

### தன்னலப்பிரிவு துணைவயிற்பிரிவு

இதுவும் அரசற்கே உரிய பிரிவாகும். அரசன் தானே அல்லது படைத் தலைவனையோ உதவிக்கு அனுப்புதலும் உண்டு. அப்பொழுது வினைமேற் செல்வதே இப்பிரிவு.

### வேந்து விடு தொழில்

வேட்டையாடியும் ஆனிரைகளைக் கவர்ந்து வந்தும் புன்செய் வேளாண்மையில் ஈடுபட்டும் சீறூர் மன்னர்களின் வருவாய் நிறைவற்ற தாகவே இருந்தது. விளைவதும் தீர்வதும் கடன் பெறுவதும் என எப்போதும் பற்றாக்குறையே நிலவியது. இப்பாற்றாக் குறையிலிருந்து தன் குழு மக்களை மீட்கச் சீறூர் மன்னன் வேந்துவிடு தொழிலுக்குச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது.

சங்கச் சமுதாயத்தில், மருத நிலத்தில் நன்செய் வேளாண்மையும் நீர் வளமும் உற்பத்திப் பெருக்கமும் தனியுடைமையை உருவாக்கத் தொடங்கி யிருந்தன. மருத நிலச் சமுதாயத் தலைவர்கள் நில எல்லையை விரிவுப்படுத் தும் முயற்சியிலும் ஈடுபடத் தொடங்கினர். அதற்கு உறுதுணையாகத் தங்க ளுக்கு அடுத்த நிலையில் சிறிதளவு நிலங்களுடன் அருகாமையில் வாழ்ந்த குறு நில மன்னர்களைப் பயன்படுத்திக் கொண்டதோடு, சீறூர் மன்னர்களையும் அவர்களது வறுமையைப் பயன்படுத்திப் போரில் ஈடுபடுத்தினர். வெற்றி யைப் பெற்றுத் தரும் சீறூர் மன்னர்களுக்கு மருத நிலங்களை அளித்தனர். சங்க காலத்தில் மருத நில வாழ்க்கை பிற நில வாழ்க்கைகளில் எல்லாம் செழிப்பு மிக்கதாயிருந்தது. இங்கு வாழ்க்கை அழிந்து அரசு தோன்றியது. பிற மக்களை யும் அரசில் இணைத்துக் கொள்ளப் பல போர்கள் நிகழ்ந்தன. இதனால் ஒவ்வொரு குழுவாக அழிந்தன.

***சீறூர் மன்ன னெருநை ஞாங்கர்***

***வேந்துவிடு தொழிலோடு சென்றனன் வந்துநின்***

***பாடினி மாலை யணிய*** *(புறம். 319 : 12 - 15)*

மறக்குடி மகளிர் வீரம்

***கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு***

***முன்தோன்றி மூத்த குடி*** *(பு.வெ.மாலை, கரந்தைப் படலம்)*

*என்னும் பெருமை நிறைந்தது. தமிழரின் மறக்குடி. அக்குடியில் பிறந்த ஆடவரே அன்றியும் பெண்டிரும் வீரம் நிறைந்தவர்களாக விளங்கினர்.*

***அடல்வேல் ஆடவர்க் கன்றியும் அவ் இல்***

***மடவரல் மகளிர்க்கும் மறம் மிகுத் தன்று***

*என்று இதனைக் குறிப்பிடுகிறது புறப்பொருள் வெண்பாமாலை.*

***கெடுக சிந்தை கடிதிவ டுணிவே***

***மூதில் மகளி ராதற் றகுமே (புறம். 279)***

*இப்பாடல் வயது முதிராத ஓர் இளம்பெண்ணின் வீர நிலையை எடுத்துக்காட்டுகின்றது. நேற்றைக்கு முந்தின நாள் நடந்த போரில் இவள் தமையன் 'களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே' என்று பொன்முடியார் கூறியவாறு, யானைப் படைகளின் மேல் வேலோச்சிக் களத்தில் இறந்தான்.*[1] *நேற்று நடந்த போரில் இவள் கணவன் எதிர்ப்படைகள் வெள்ளம் போல் அணி அணியாக வந்த பெரிய காலாட்படையோடு பெயர்ந்து அங்கே இறந்தான்.*

*இன்றும் போர்ப்பறை கேட்டது. தமையனையும் கணவனையும் பறிகொடுத்து விட்டமாது, உள்ளம் தளரவில்லை. வெற்றி காணும் வரை நாட்டுக்குத் தன் குடும்பம் முழுமையும் உரியது என்று நினைத்தாள்.*

போரில் மிகுந்த பாதுகாப்புடன் போரிடுவதற்குத் துணை நிற்பது தேர்ப் படையாகும். மிகுதியான தேர்ப்படை வைத்திருப்பது மன்னர்களுக்குப் பெருமையாகக் கருதப்பட்டது.

பண்டையத் தமிழர்கள் போர் முறைகளை நெறிப்பட வகுத்துக் கொண்டு போரினை மேற்கொண்டனர். அகத்தில் பெண்ணை வெல்வதும் புறத்தில் நிலத்தை வெல்வதும் ஆண்களுக்கு அடிப்படையாகவும், காதலும் வீரமும் ஆணின் அழகு எனவும் தெரிகின்றன.

வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடம் பாசறையாகும். இப் பாசறை பெரும்பாலும் ஊர்ப்புறத்தே இயற்கையாக அல்லது செயற்கையாக அமைந்திருக்கும் என்று அறியப்படுகிறது.

அகப்பொருளுக்கு ஏழு திணைகள் இருப்பது போன்று புறப் பொருளுக்கு ஏழு திணைகள் உண்டு. ஆனால் பின்னர் வந்த புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் புறத்திற்குப் பன்னிரெண்டு திணைகளை வகுத்துள் ளார் என்பதும் அறியப்படுகிறது.

**ஐங்குறுநூற்றில் புற ஒழுக்கம்**

ஐங்குறுநூறாகிய இத்தொகை நூலில் மொத்தம் 91 பாடல்கள் தலைவன் கூற்றிற்கு உரியனவாகும்.

தலைவன் போர் பகை காரணமாகப் பிரியக் கூடிய பிரிவு - 20 பாடல் கள். மன்னனுக்குத் துணையாகப் பிரியும் துணைவயிற் பிரிவு-426, 442, 448, 450, 477 ஆகிய ஐந்து பாடல்கள்.

தலைவன் போர், பகை காரணமாகவும் பொருள் தேடுவதற்காகவும் மன்னனுக்குத் துணையாகவும் உற்றுழி உதவுவதற்காகவும் பிரிந்து மூன்று வகையான புறத்தொழுக்கத்தினை மேற்கொள்கின்றான்.

தலைவன் கல்வி காரணமாகவும், தூது காரணமாகவும், பிரியும் புறத் தொழுக்கம் ஐங்குறுநூற்றுத் தலைவன் கூற்று பாடல்களில் இடம் பெற வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. புறத்தொழுக்கம் மேற்கொள்ளும் தலை வன் தலைவியை நினைத்து தன் நெஞ்சிற்குக் கூறுவது போலவும் பாடல்கள் ஐங்குறுநூற்றில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

தலைவன் தலைவியை விட்டுவிட்டுக் கடந்து வந்த பின்பும், அவ ளுடைய அழகான மாட்சிமைப்பட்ட பண்பானது அவனைத் தொடர்ந்து வரு கிறது. தலைவன் பொருள் தேடி, தலைவியைப் பிரிந்து வந்த புறத்தொழுக்கத் தினை பற்றிப் பேசுகிறது. இதனைப் போலவே தலைவன் போர் மற்றும் பகை காரணமாகவும், மன்னனுக்குத் துணையாகவும் பிரிவும் புறத்தொழுக்கப் பாடல்கள் ஐங்குறுநூற்றில் மிகுதியாக இடம் பெற்று உள்ளன.

### பண்டைத் தமிழரின் போர்முறை

பெருநில வேந்தன் ஒருவன் தனது நாட்டுக்கு அருகில் உள்ள பகை வர்களின் ''நாட்டின்மீது படையெடுத்துச் சென்று போர் செய்யக் கருதுவான். அந்நாட்டில் வாழும் அறவோராகிய அந்தணர்கள், பெண்கள், குழந்தைகள், நோயுற்றுத் துன்பப்படுபவர்கள் முதலிய தீங்கு செய்யத்தகாத மக்களைப் போரினால் உண்டாகும்[2] துன்பங்களிலிருந்து விலக்கிப் பாதுகாக்கும் பொருட்டு தாங்கள் போர் செய்யக் கருதுகிறோம். உங்கள் நாட்டுக்குள் படை எடுத்து நுழைகிறோம். நீங்கள் உங்களுக்குப் பாதுகாவலாக உள்ள இடங்களை நாடித் தேடிச் செல்லுங்கள் என்று அவர்களுக்கு முறைப்படி அறிவிப்பான். அவர்கள் அவ்வறிவிப்பினைக் கேட்டு உணர்ந்தும் வெளியே செல்வர். பாது

காப்பைத் தேடிக் கொள்வர். போரின் தீமையை மனதினால் அறிந்து உணரும் திறன் இல்லாத, பகைவர் நாட்டுப் பசுக்கூட்டங்களைப் பகைவர் ஒருவரும் அறியாதபடி நள்ளிரவு நேரத்தில் தனது படைவீரர்களை அனுப்பி வைத்துக் களவில் கவர்ந்து வரச் செய்வான் வேந்தன். அவ்வாறு கவர்ந்து கொண்டு வரப்பட்ட பசுக்களைப் பாதுகாத்து அறநெறியில் இருந்து முறை தவறாமல் பண்டைத்தமிழ் வேந்தர்கள் போரிடுவர்.

அம்முறைப்படி வேந்தனால் ஏவப்பட்ட படை வீரர்கள் (மறவர்கள் நள்ளிரவு நேரத்தில் பகைவர்கள் வாழும் நாட்டில் நுழைவர். அங்குள்ள பசு மாடுகளைக் கவர்வர். பிறர் அறியாது அவற்றை ஓட்டிக்கொண்டு வருவர். அம்மாடுகளைத் தம் நாட்டில் வைத்துப் பாதுகாப்பர்.

பண்டைக் காலத்தில் ஒரு நாட்டின் செல்வம் ஆனிரைகளாக அமைந் தன. அதனால், பகைவர் நாட்டிலுள்ள பசு மாடுகளைக் கவர்ந்து கொள்வதன் மூலம் தனது நாட்டின் செல்வத்தைப் பெருக்க முடியும் என்று பண்டைய வேந்தர்கள் எண்ணினார்கள். எனவே பொருளாதாரத்தைப் பெருக்கி வளம் காணும் நோக்கில் வெட்சிப்போரினை வேந்தர்கள் நாடினார்கள் எனலாம்.

### உழிஞைத் திணையின் இலக்கணம்

நாட்டைப் பாதுகாத்தற்குரிய எல்லாவிதமான உறுப்புகளாலும் முழுமை பெற்றுள்ளதாக மதிலை அமைப்பது மரபு. முழுமை பெற்ற அரணை படை கொண்டு வளைத்துக் கொள்ளுதலும், அரணுக்குள்ளே இருந்த வேந்தன் மதிலைப் பாதுகாத்துக் கொள்ளுதலும் ஆகிய இருவேறு போர்ச் செயல்களை உழிஞைத் திணையில் அமைத்துப் பாடுவது உண்டு. இதுவே உழிஞைத் திணையின் இலக்கணமாகும்.

### காஞ்சித்திணையின் முதுபாலை

காஞ்சித்திணை என்னும் புறத்திணை பெருந்திணை என்ற அகத் திணைக்குப் புறனாக அமையும். முது என்பது பெரிய என்று பொருள்படும். பாலை என்பது பிரிவாகும். முதுபாலை என்றால் பெரும்பிரிவு என்பது இறப் பாகும். வெப்பம் மிகுந்து நடந்து செல்வதற்கு அரிய காட்டுவழியில் கண வனுடன் செல்கிறான். ஒரு தலைவி அவனை அக்காட்டு வழியில் திடீரென இழக்கிறாள். அவன் இறக்கிறான். தன் கணவனை இழந்து தன்னந்தனியாளாய் நின்று தவிக்கும் தலைமகள் மனம் வருந்துவது பெரும்பிரிவு என்னும் முது பாலை ஆகும்.

### பாசறைக்கண் இருந்த தலைவன்

வேந்தன் போர்வினை தணிய வேண்டும் என்ற எதிர்ப்பார்ப்பும், தன் பிரிவுத்துயர் கெட, தலைவியைக் கண்டு மகிழவேண்டும் என்ற ஆர்வமும் பாசறைத் தலைவனின் கூற்று முழுவதும் காணப்படுகின்றன.

கார்காலத்தில் திரும்புவதாகக் கூறிய தன் கூற்றை நம்பியிருந்த தலைவியை ஏமாற்ற உணர்வு, எதிர்கொள்ளும் என்ற துயர் தலைவனைப் பெரிதும் வாட்டுகிறது. தலைவியின் பிரிவை ஆற்றாது வருந்துவது தலை வனின் மனம் தன் மனக்கருத்தைத் தலைவி அறியாது, தான் பிரிவை நீட்டித்த தாகவும் அருளாது விடுத்ததாகவும் எண்ணி வருந்துவாள் எனத் தலைவன் எண்ணும்போது அவனுக்கு வருத்தம் வருகின்றது. தலைவியை நினைத்து தான் அடையும் நோயினைத் தலைவி அறியவேண்டும் என்ற ஆர்வம் தலை வனிடம் காணப்படுதற்கு இது காரணம்.

***யாமுறு துயர மவளறியினோ நன்றே (ஐங்-441)***

என்றும் தலைவனின் வருத்தமும்,

***நம் நோய் தன் வயின் அறியாள்***

***எம் நொந்து புலக்கும் கொல் மாஅயோனே (அகநா. 304)***

*என்று துடிப்பும் தலைவனின் அடிமன ஒலிப்புக்கள், ஆதலின் கார் காலத்தின் திரும்ப வேண்டிய தலைவன் திரும்பாதது கண்டு கலங்கும் தலைவியின் கலக்கம் பற்றிய எண்ணமே பாசறையில் தலைவனைக் கலக்கி நிற்கச் செய்கிறது. இது அவனது காம மிகையன்று.*

*அரசனின் போர்த்தொழிலும் இயற்கையில் கார் வரவும் ஒருங்கு வந்தபோது தலைவியை மறந்து தலைவன் போர்த் தொழிலில் ஈடுபாடு காட்டு வோனாகக் காட்டப்படவில்லை. கார் கண்டதும் தலைவனின் போர் ஈடுபாடு மறைகிறது. தலைவியின் நினைவால் துயரும் தூக்கமின்மையும் எதிர்கொள் கின்றன.*

*தலைவியைப் பிரிந்து போர்ச் சூழலில் இருக்கும் தலைவனின் மன நிலையை அடிப்படையாகக் கொண்டு அக, புறப்பாடல்களை ஆராயின் ஓர் உண்மை புலனாகிறது. தலைவியை நிலையாது போரில் ஈடுபட்ட தலை வனின் மன உணர்வுகள் புறத்திலும், வீரத்தினும் காதலுக்குச் சிறப்பிடம் தந்து, காதலியை நினைந்துருகும் தலைவனின் மன உணர்வுகள் அகத்திலும் இடம் பெறுகிறது.*

***கடுஞ்சின வேந்தன் தொழில் எதிர்ந் தனனே***

***பொங்கு பெயற் கனைதுளிகா எதிர்ந் தன்றே***

***யஞ்சியோதியை யுள்ளு தொறும்***

***துஞ்சா தலமர னாமெதிர்ந் தனமே (ஐங். 448)***

*எனவும்,*

**வேறுபல வாடை அலைப்பத்**

***துணையிலேம் தமியேம் பாசறை யேமே (நற். 341 : 9 – 10)***

*எனவும் காரும் போரும் முன் நிற்கும் போது, பாசறையில் இருந்து தலைவியை நினைந்து புலம்பும் தலைவனின் காதல் மனம் அகத்தில் இடம் பெறுகிறது.*

*இங்ஙனம் புலம்பலை விடுத்துப் போர் நினைவு கொண்டு விளங்கும் தலைவனின் மனம் புறத்தில் இடம் பெறக் காண முடிகிறது. பதிற்றுப்பத்துப் பாடல் ஒன்றின் குறிக்கோளை விளக்க வந்த பழைய உரைகாரர், 'இதனாற் சொல்லியது அவன் காம வேட்டையிற் போர் வேட்கை மிகுத்துக் கூறியவாறா யிற்று' எனப் புறத்திணைத் தலைவனின் மன ஓட்டத்தை உணர்ந்து உரை கூறிச் செல்லும் நுண்மை சிந்திக்கத்தக்கது. நச்சினார்க்கினியர் நெடுநல்வாடையைப் புறத்துள் அடக்கியமைக்கு பாண்டியனின் அடையாள மாலையாகிய வேம்பு குறிக்கப்படுதல் மட்டும் காரணமாக இருக்க முடியாது.[3] அகத்திணைத் தலை வன் போர் இல்லாமல் நெடுநல்வாடைத் தலைவன், தலைவி தனித்திருந்து புலம்ப, அவனை நினையாது, வாடையையும் பொருட்படுத்தாது பாசறை யைப் பார்வையிடுவதில் முனைந்திருக்கும் மன ஓட்டம் கொண்டிருக்கக் காணலாம்.*

*காதலுக்கு முதலிடம் தருதல் அல்லது வீரத்துக்கு முதலிடம் தருதல் என்ற தலைவனின் இரு வேறு மன ஓட்டங்களின் அடிப்படையில் அகம், புறம் எனப்பகுக்கும் தமிழ் இலக்கியப் புலநெறி வழக்கத்தையும் அவர் மனத்துள் கொண்டிருக்கலாம் என்பர். [4]*

*சங்ககால வள நகர்ப் பகுதிகளில் தான் பரத்தையர் குடியிருப்புகள் அமைந்துள்ளன. இதை விரிவாகக் காட்டியுள்ளது மதுரைக்காஞ்சி 558 முதல் 589 வரையிலான அடிகளில் பரத்தையரின் வள வாழ்வு பாடப்பட்டுள்ளது.*

***மாயப் பொய்பல கூட்டி கவவுக்கரந்து***

***சேயரும் நணியரும் நலனயந்து வந்த***

***இளம்பல் செல்வர் வளம்தப வாங்கி***

***நுண் தா துண்டு வறும்பூத் துறக்கும்***

***மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர்***

***நெஞ்சே மாப்ப இன்துயில் துறந்து***

***பழந்தேர் வாழ்க்கைப் பறவை போலக்***

***கொழுங்குடிச் செல்வரும் பிறரும் மோய***

***மணம்புணர்ந் தோங்கிய அணங்குடை நல்லில்***

***.......................................................***

***வானவ மகளிர் மானக் கண்டோர்***

***நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர் (570, 578, 581, 582)***

எனும் வரிகளில் அயலூரும் உள்ளூரும் சார்ந்த இளைஞர்களின் பரத்தையர் இல்ல வரவும் வளமான குடியில் வந்த செல்வரும் பிறரும் வரும் நிலையும் காட்டப்பட்டுள்ளன. இவர்கள் பழுத்தமரம் தேடும் பறவை போலவும் தேன் உண்ணும் வண்டினம் போலவும் பரத்தையர் இல்லம் நாடி வந்த நிலை சுட்டப்பட்டுள்ளது. பரத்தையர்கள் கண்டோர் மனத்தை வருத்தும் பொருட் பெண்டிர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்களுக்கு ஒரு சமுதாய அங்கீகாரம் இருந்ததை மதுரைக்காஞ்சி காட்டுகின்றது. பின்னாளில் சிலப்பதிகாரத்திலும் பதியிலார் எனப் பெறும் பரத்தையர் குடியிருப்புக் காட்டப்பட்டுள்ளது.

## பரத்தையர் பிரிவு

பரத்தையர் பிரிவு என்பது பொது பெண்டிற் பிரியும் பிரிவு. தலைமகளை விட்டு அப்பொதுப் பெண்டிரின் ஆடல் காண்பதற்காகவும் பிரிவான் என்று கருதுதல் வேண்டும்.

**ஆடலும் பாடலும் வல்லவராகி அழகும் இளமையும் காட்டி**
**இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மட்டும் தங்காதவர்**

இந்த உரை விளக்கப்பகுதி பரத்தையரை விலை மகளிராகக் காட்ட வல்லது. பரத்தையர் ஆடவர் பலரோடு கொண்ட உறவுநிலையைப் புலப் படுத்துவது ஆயின் சங்க இலக்கியங்கள் காட்டும் பரத்தையர் விலை மகளிரா என்ற வினாவிற்கான தேடலில் மறுதலையான சான்றுகள் கிடைத்துள்ளமை யைக் குறிப்பிட வேண்டும். அச்சான்றுகள் பரத்தையரை விலை மகளிராகக் காட்டவில்லை.

1. பரத்தையர் சேரியினின்று வந்த தலைவன் யாரையும் அறியேன் என்று கூறக் கேட்ட தலைவி தலைவனுக்குப் பதில் கூறும் முகமாக அமைந்த அகநானூற்றுப் பாடல் (10) ஒன்று இங்கு சுட்டத்தக்கது. அப்பாடலில் பரத்தை தலைவியிடம் மெல்ல வந்து நல்ல கூறி மடவோய்/யானும் நின் சேரியேன் அயலிலாட்டியோர் நுங்கை ஆகுவன் நினக்கு' எனக் கூறித் தலைவியின் நுதலையும் கூந்தலை யும் நிவி விடுவதாகச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

2. இப்பாடல்கள் பரத்தையரைத் தலைவிக்குத் தங்கையாகவும் புதல் வனுக்குத் தாயாகவும் கடவுள் தன்மை உடையவளாகவும் காட்டு கின்றன. பரத்தையர் விலை மகளிர் எனின் இவ்விதப் புனைவுகள் தமிழ்ச் சமூகத்தில் தோன்றியிருத்தல் கூடுமோ.

3. சங்கப் பரத்தையர் தலைவனோடு கொண்ட உறவு, திருமணம் வழிக் கொண்ட உறவாகும். இதனை ஒருத்தியை நம்மனைத் தங்குவதுவை அயர்ந்தன.

புறச்சேரி

சேரி என்பது சேர்ந்து வாழும் இடம். பலர் சேர்ந்து வசிக்கும் இடத் திற்குச் சேரி என்று விளக்கினர் முன்னோர். திட்டச்சேரி, பெருஞ்சேரி, புதுச் சேரி என்ற பெயர்களுடன் இன்றும் தமிழ்நாட்டில் பல ஊர்கள் இருக்கின்றன.

வேளாளர்கள் வாழும் இடத்தை வேளாளார்சேரி என்றும் அந்தணர்கள் வாழும் இடத்தை அந்தணச்சேரி என்றும் பாணர்கள் வாழும் இடத்தைப் பாணர் சேரி என்றும் பெயரிட்டு வழங்கினர்.

நகருக்கு அல்லது ஊருக்குப் புறமாக ஒரு சிலர் சேர்ந்து வாழும் இடத் தைப் புறஞ்சேரி, புறச்சேரி என்ற சொற்களைச் சங்க நூல்கள் பலவற்றிலே காண லாம். பட்டினப்பாலையிலும் புறச்சேரி என்ற சொல் வழங்கியிருக்கிறது.

ஊருக்குப் புறங்களிலே இருக்கின்ற காரணத்தால் முதலில் புறச்சேரி என்ற பெயர் வழங்கியிருக்க வேண்டும்.

இதன் பிறகு நாளடைவில் புறம் என்பது மாறிசேரி என்ற பெயரால் மட்டும் இந்த இடங்களை அழைத்திருக்க வேண்டும். ஊருக்குப் புறத்திலே வாழ்ந்தவர்கள் பெரும்பாலும் தாழ்த்தப்பட்ட மக்கள்தான். ஆகையால் அவர்கள் வாழும் இடங்களுக்கெல்லாம் சேரி என்ற பெயரே பொதுப் பெயராக வழங்கத் தொடங்கிவிட்டது. பெரும்பாலும் ஏழை மக்கள் வாழும் இடங் களில் தான் பன்றி, கோழி, ஆடு முதலியவைகளைக் காணலாம். இங்கே கூறப் பட்டிருக்கும் புறச்சேரியும் இயல்பைக் கொண்டே அவை ஏழை மக்கள் வாழும் இடங்கள் என்பதை அறியலாம்.

*ஆகவே, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சேரி என்றும் பெயர் தாழ்த்தப்பட்ட ஏழை மக்கள் வாழும் பகுதிகளைக் குறிக்கும் பெயராக மாறிவிட்டது என்பதற்கு பட்டினப்பாலை சான்றாகும்.*

*வீரயுகத்தில் பரத்தையர் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன. 1. காமக்கிழத்தி, 2. இற்பரத்தை, 3. சேரிப்பரத்தை, 4. நயப்புப்பரத்தை என்று நான்கு வகையாகப் பேசப்படுகின்றனர்.*

***நுண்பூணாகம் வருக்கொள முயங்கி***
***மாயப் பொய் பல கூட்டிக் கவவுக் கரந்து***
***சேயரு நணியரு நலனயந்து உந்த***
***இளம்பல் செல்வர் வளர்தப வாங்கி***
***நுண்தா துண்டு வரும்பூத் துறக்கும்***
***மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர் (மதுரைக்காஞ்சி 569 - 570)***

*மாலைக்காலம் நீங்கியவுடன் தம்மை அலங்கரித்துக் கொண்டு பொய் பல பேசி, தம் இன்பத்தைக் கருதி வந்தோர் செல்வத்தை முற்றக் கவர்ந்து அவர் களைத் துறந்த பின்னும் கண்டவர் நெஞ்சை வருத்தமடையச் செய்து பொருள் கவரும் பரத்தையர் என்கிறது மதுரைக்காஞ்சி.*

***பல்லிருங் கூந்தல் மகளிர் ஒல்லா***
***முயக்கிடைக் குழைக வென்தாரே (புறம். 73)***

*பொய்யாகப் பொருளுக்காக அன்பு செய்யும் மகளிர் மன்னன் சோழன் நலங்கிள்ளியால் வெறுக்கப்பட்டனர். பரிபாடல், கலித்தொகை போன்ற இலக்கியங்களில் இவர்கள் பலரும் இடம் பெற்று உள்ளனர். விலை நலப் பெண்டிர் (புறம்-365) விலை மகளிர், பொது மகளிர், பொருட் பெண்டிர் எனப் பல பெயர்களில் இவர்கள் காணப்படுகின்றனர்.*

*போர்க்குச் செல்லும் வீரர்கள் தத்தம் மனைவியரை அழைத்துச் செல்வதில்லை. அங்கு அழைத்துப் போய் பாசறையில் வைத்து இன்பம் கொள்வதில்லை. இங்ஙனம் மனைவியின் இன்பம் விளக்கப்பட்டதன்றிப் பரத்தையின் இன்பம் விளக்கப்படவில்லை.*

***புறத்தோர் ஆங்கண் புரைவதென்ப (தொல். 1122)***

*என்பதனால் போர்க்களத்தில் உள்ளனர் என்றும் கூறப்பட்டன.*

காதற்கற்பு

*இளநாகனாரின் திணைத் தலைவி தலைவனது பெரும் பரத்தமை எவ்வளவு அவ்வளவினையும் பொறுக்கும் இல்லறத் திலகமாக விளங்குகின்றனர். பரத்தைக் குறிப்போடு வரினும் அவன்பால் உள்ளம் நெகிழ்ந்து ஏற்கின்றனள், ஆண்டிற்கு ஒரு முறை (ஓர் யாட்டு ஒரு கால் வரவு கலி-71) வரினுங் கூட மழை வரவு போல அவன் வரவை மதிக்கின்றனள். தலைவன் வருவதற்கு முன்னே அவன் வரவை உடன்படலாகாது. நெஞ்சம் இளகலாகாது என்று பாடச் செய்து கொண்டிருப்பினும், அவனைக் கண்டதும், தன் கடனை உணர்கின்றாள். அவன் குற்றத்தை மறக்கின்றாள். கணவனது ஒழுக்க நிலை இப்படி இருப்பதற்காக, நாம் என் செய்வது என்பது அவள் கருத்து.*

*தலைவனது கழிவுப் போக்கை உணராதவளும் அல்லள். அவனது பொய்க்கு ஏமாறுபவளும் அல்லள். அவனை ஏற்று இன்புறல், இன்புறுத்தல் தன் கடன் என்ற ஒன்றையே கடைப்பிடிப்பவள், இளநாகரின் மருதக்கலியில் பரத்தையர்க்கு முதன்மையில்லை. தலைவனது பரத்தமைக்கு முதன்மையில்லை. அனைத்தையும் பொறுத்துத் தாங்கி அவனை அணையும் தலைவிக்கே முதன்மை. மருதக்கலிகள் சுரிதகத்தில் குறிஞ்சியாக முடிவதைக் காண்க. கற்புடைய நங்கையின் காதற் கடமையைக் காட்டுவதற்கே மருதக் கலியில் சொல்லப்பட்டனர் என்பர்.* [5]

***கலிமா கடைஇ வந்தெஞ்சேரித்***

***தாருங் கண்ணியும் காட்டி ஒருமைய (நற். 150 : 7 – 8)***

குதிரைத்தேர் ஏறி எம் சேரிக்கு வந்தான். எம் நெஞ்சம், பலர்பால் செல்லாது தனக்கே ஒருமையாகக் கொண்டான் என்று கற்புடைமை விளம்பு கின்றாள் பரத்தைக் குறுமகள், தன் ஒருமைப்போக்குத் தாய்க்குப் பிடிக்க வில்லை என்றும் அறிகின்றாள். ஐந்திணைக்கண் பாடப்பட்ட பரத்தையின் பண்பு நலம் இது.

### வாயில் மறுத்தல்

தலைவனும், பரத்தையும் ஒருபுறமாகவும், தோழியும் தலைவியும், மறுபுறமாகவும் நின்று இழுக்கும் கயிறு இழு போராட்டமாக உள்ளது. முன்பு தலைவிக்குரிய தலைவன் என்றிருந்தவன் பரத்தையின் தலைவனாக மாறு கிறான். அவன் மனையும், தெருவும், சேரியும் தலைவிக்கு மட்டுமே உரியன வாகின்றன. அவனது மனைக்கும் தெருவிற்கும் சேரிக்கும் அவன் வரவு மறுக் கப்படுகிறது. தூதாகி வந்த பாணனிடத்தும் ''நின் தண்டுறை யூரன்'' (346) என்றும் கூறித் தலைவனிடம் தங்கள் உறவின்மையையும் புலப்படுத்துகிறாள் தோழி. இத்துறையில் தலைவனுக்கு வாயில் மறுத்தல், வாயில் நேர்ந்த பின் மீண்டும் புறத்தொழுகி வந்தபோது வாயில் மறுத்தல், உணர்ப்புவயின், ஊடற் கண் புலந்த தலைவனுக்கு மறுத்தல், பாணனுக்கு வாயில் மறுத்தல், பாணன் கேட்பத் தலைவிக்கு மறுத்தல், விறலிக்கு வாயில் மறுத்தல் என தோழியின் செயல்கள் உள்ளன.

### தலைவனுக்கு வாயில் மறுத்தல்

வாயில் மறுத்தலுக்குக் காரணமான தலைவனின் பரத்தமை கூறப் படுகிறது.

பரத்தையர்க்குத் தலைவன் சொன்ன சூளுறவை எள்ளி வாயில் மறுக்கப் படுகிறது. தலைவன் புறத்தொழுக்கம் இல்லை எனத் தோழியிடம் சூள் கூறித் தெளிவிக்கப் புகும்போது, தலைவியின் நலன் தந்துருள் கொண்டு செல்க என கூறுகிறாள் தோழி. தொல்காப்பியர் ‘சூள் வயிற்றிறத்தால் சோர்வு கண்டழி யினும்’ என்று இலக்கணம் வகுப்பர்.[6]

பழையன் என்பான் பகைவரை நோக்கி எய்யும் வேல் போன்ற கண் களையுடைய பரத்தையின் கண்ணாற்றல் கூறப்படுகிறது.

**புனல்மலி புதவிற் போஓர் கிழவோன்**
**பழையன் ஒக்கிய வேல்போற்**
**பிழையல கண்ணவள் நோக்கியோர் திறத்தே**

என்ற பரணனின் அகநானூற்றுப் பாடலில், பரத்தையின் கண்ணாற்றலைக் கூறு கிறாள் தோழி. தலைவன் ஒரு பரத்தையின் கண்ணால் மயங்கி இருப்பதையும், அவள் யார் என்பதைத் தாங்கள் அறிந்திருப்பதையும் குறிப்பாகத் தெரிவிக் கிறாள்.

குறிஞ்சி நிலத்தில் தலைவன் புறத்தொழுகி யாரையும் அறியேன் என்று கூறும்போது சாந்தம் நாறும் நின் மார்பில் கூந்தல் நாறும் நாற்றமே நின் பரத் தமையைக் கூறும் நீ பொய் கூறி மருட்ட வேண்டாம் என அவனுடைய பரத் தமை கடியப்படுகிறது.

### தலைவியின் துயர் கூறி வாயில் மறுத்தல்

இத்துறையில் அமையும் பாடல்கள், தலைவனின் பரத்தமையால் தலைவி கூறும் துயர் கூறும் பாடல்களாகவே அமைகின்றன. நுதல் பசத்தல், கண் பசத்தல், கண் கலுழ்தல் எனப் பொதுவாகத் தலைவி உறுப்பு நலனழிவு கூறி வாயில் மறுக்கப்படுகிறது. துயரால் மெலிந்த தலைவியைத் தலைவன்

தேற்றும்போதும் அவன் சொற்களால் பயன்விளையாது என்றும், பரத்தமை நீக்கினால்லது அவள் துயர் களைய முடியாது என்றும் தெளிவாக்கப்படுகிறது. தலைவியின் நோய்க்குக் காரணமும், மருந்தும் கூறும் மருத்துவராகத் தோழி விளங்குகிறாள்.

### பரத்தையின் செயல் கூறி மறுத்தல்

தலைவன், தலைவியின் இல்லத்திற்கு வந்ததால், பரத்தையின் மையுண்ட கண்கள் அழும் அழுகையையும் மார்பில் அணிந்த மாலையை அறுத்துப் புலப்பதையும் கூறுகிறாள் தோழி. தலைவன் பரத்தையின் வீட்டிலிருக்கும்போது பரத்தையின் உவகையும் தலைவியின் சினமும் கூறி வாயல் மறுக்கப்படுகிறது. பாண்டிய மன்னனைக் கிள்ளி வளவன் வென்றபோது மகிழ்ந்த கோதை மார்பனை விட பரத்தை அடைந்த மகிழ்ச்சி மிகுதி என வரலாற்றுச் சான்றுடன் உவமிக்கப்படுகின்றது.

### அலர் கூறி மறுத்தல்

வரைவு கடாதல் துறையில் வரும் அலர்ச் செய்தி களவு வெளிப்பட்டதைக் குறிக்கவும், அதன் மூலம் தலைவனை வரைவு முழக்கம் பயன்படுகிறது. பரத்தையின் பிரிவில் வரும் அலர் புறத்தொழுக்கம் மறைக்கும் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் புலப்பட்டதைச் சுட்டவும், அவனை மறுக்கும் உத்தியாகவும் உருப்பெறுகிறது.

தலைவனின் பரத்தமையால் உண்டான பிரிவுத்துயரை விட அலர் வாய்ப் பெண்டிரின் தூற்றலே வேதனையை மிகுவிக்கிறது. இவ்வலர் அடுத்தவரின் செயலை அசைபோடும் அக்காலச் சமுதாயப் போக்கையே காட்டுகிறது.

பரத்தையுடன் தலைவன் நீராடுதல் தலைவியின் பழிதீர் மாணலம் தொலைதல், தலைமகன் ஒரு குறுமகளை நயத்தல் ஆகியவை அலருக்குரிய

காரணங்களாகக் கூறப்படுகின்றன. தலைவியும் தோழியும் அலரை மறைக்க விரும்பினும் அவர்களையும் மீறி அலர் பரவுவதும் சுட்டப்படுகிறது.

அலர் மிகுதி கூறும் இடத்தில், புலவர்கள் தங்கள் காலத்தில் நடந்த போர்க்களக் காட்சிகளைத் தோழியின் வாயிலாகத் தெரிவிக்கின்றனர். அகத்தில் புறத்தைக் கலக்க, அலரைப் பயன்படுத்திக் கொண்டனர். இரு மன்னர்கள் செய்யும் போரில் வெற்றி பெற்றவனின் வெற்றி ஆரவாரம் பெரும்பாலும் அலர் மிகுதியுடன் ஒப்பிடப்படுகிறது. போர்ச் செய்தி விரைவில் பரவி பலராலும் அறியப்படும். மக்களால் விரும்பிச் சுவையுடன் பேசப்படும். அது விரைவில் மறைவதில்லை. அதில் ஒரு தலைவனைப் பற்றித் தாழ்த்திக் கூறும் வாய்ப்புண்டு. வெற்றி ஆரவாரம் அதிகமாயிருக்கும்.

### பாணனுக்கு வாயில் மறுத்தல்

தலைவனின் பரத்தமைக்குக் காரணமானவர்கள் பாணனும் விறலியுமாதலால் தலைவன் மேல் கொண்ட சினம் அவர்களைப் பார்க்கும்போது மிகுதியாகிறது. நெய்தல் திணையிலும் தோழி பாணனிடம் தாங்கள் தலைவி அவனில்லாமலே வாழ முடியும் என்ற எண்ணத்தையும் அவளுடைய பசலையை நீக்க முடியா நிலையையும் கூறுகிறாள்.

### விறலிக்கு வாயில் மறுத்தல்

தலைவனைப் பரத்தையிடம் கொண்டு சேர்த்த பெண்பாலாகிய விறலியைப் பார்த்தவுடன் இன்னொரு பெண்பாலாகிய தோழிக்கு அளவு கடந்த வெறுப்பும் சினமும் எழுகிறது.

**விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே**
**எழுமினோ எழுமின்எங் கொழுநற்கு ஆக்கம்**

***ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்***

***பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது (நற். 170,5-9)***

என்று தோழி, விறலியை நோக்கி வெகுண்டு கூறுகிறாள். கலைவல்ல பாணனும் விறலியும் தலைவனைப் பரத்தையர்களிடம் கொண்டு செல்லும் இழிதரகர்களாக மாறிய காலத்தில் அவர்கள் குலமகளிரால் பழிப்புக்கும் வெறுப்புக்கும் ஆளாயினர். சமுதாயத்தில் விறலியும் பழிக்கப்பட்டமையே மேற்கூறிய பாடல்கள் காட்டுகின்றன.

### வாயிலார்க்கு வாயில் மறுத்தல்

தலைவன் சார்பில் தோழி ஒழிந்த மற்ற வாயில்கள் வந்தபோதும் தோழி தலைவனின் பரத்தமையால் தலைவியும் பரத்தையும் உறுதுயரை எடுத்துக்கூறி வாயில் மறுக்கிறாள். வாயிலார் பட்டியலில் சேர்க்கப்பட்ட தோழி மற்ற வாயில்களை மறுத்தல் தோழியின் உரிமையையே காட்டுகிறது. தலைவனது பரத்தமைத் தொடர்பான செய்திகளைக் கூறுவதில் நுண்ணிய மாற்றம் காணப்படுகிறது. இதன் விளைவாகத் தலைவனால் கைவிடப்பட்ட பரத்தையர் அவலமும் பேசப்படுகிறது.

மருதத்திணையில் தோழி தலைவனின் வரவை நினைத்து தலைவியின் கண்கள் பசந்தமை கூறி வாயல் மறுக்கப்படுகிறது. நெய்தல் திணையில் தோழி, துறைவன் கேண்மையைப் பரத்தையர் விரும்புவாரே அல்லாமல் தலைவி விரும்புவாளோ எனத் தலைவி தலைவனை வெறுப்பதைக் கூறுகிறாள். [7]

### பொருள்வயின் பிரிவு

குடிமை நலம் காக்கவும், அறப்பணி புரியவும் வேண்டும் ஆக்கம் தேடலுக்குப் பிரிதலாகும்.

மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னைத் தமிழர் கொண்ட இப்பிரிவு வகைகளை அறிவியல் வளர்த்த இந்நாளின் பிரிவுகளோடு எண்ணிப் பார்ப்பின் புதுமை ஏதேனும் உண்டோ? என்பர். [8]

## ஆண்மை நெறிகள்

ஆடவன் நெறிகட்கெல்லாம் இரண்டு அடிப்படைக் குணங்கள் உண்டு. 'பெருமையும் உரனும் ஆடூஉமேன' என்பது தொல்காப்பியம். ஆடவனின் தனிப்பயணம் பலரின் கண்ணே இருக்காது ஆதலின் புறத்தே நெடுந்தொலைவு சென்று பொருளீட்டல் ஆடவன் கடமையாகின்றது. பொருளில்லை எனின் அவன் குடும்பம் பெருமை இழக்கும். சிறுமைப்படும் எனவே குடும்பப் புகழோ, கொடைப்புகழோ, கல்விப்புகழோ, வீரப்புகழோ வேண்டி ஆடவன் இன்பத்துறந்து இளமைக்காலத்து வாழ்நாளைப் புறத்தே கழிக்க வேண்டியவன் ஆகின்றான். தலைவனின் வினைப்பிரிவானது ஓதல், பகை, தூது, காவல் பொருட்பிரிவுகளை முன்னிறுத்தி அவனது கடமையுணர்ச்சியை புலப்படுத்துவன. இவற்றில் ஓதற்பிரிவும், பொருட்பிரிவும் தலைவன் தலைவியோடு வாழும் வாழ்விற்குப் பிறர்துணையின்றிப் பொருளீட்டி வாழ வேண்டும் என்ற வேட்கையையும் சிறிய வாழ்வு வாழ வேண்டும் என்ற உள்ளத்துணர்வையும் புலப்படுத்துவன.

## ஆடவர்க்குரிய பண்புகள்

தொல்காப்பியம் பெருமையும் 'உரனும் ஆரூஉமேன' என்கிறது. இது உலக ஆடவர் அனைவருக்கும் பொருந்தும். பழி, பாவம் அஞ்சுதல், பெருமை என்பது இளம்பூரணர் எண்ணம். ஆடவர் பெருமைத்தரத்தக்க செயல்களைச் செய்ய வேண்டும் உரன் என்பதற்கு அறிவு என்று பொருள் கூறுவார் உரையாசிரியர் கடைப்பிடியும் நிறைவும் கலங்காது தணிதலும் முதலிய வலியின் பகுதியும் என்று பொருள் தருவார் நச்சினார்க்கினியர்.

*பொது நிலையில் வலிமை என்றே பொருள் கொள்கையால் வெட்சிப் பூச்சூடி பசுக்கூட்டத்தைக் கவர்ந்து வருவதை எதிர்த்துப் போரிடுபவர் கரந்தை யார் எனப்படுவர். அவ்வாறு கவர்ந்து வரும் பசுக்கூட்டத்தைப் போருக்குச் சென்றோருக்கு வேல் வடித்துக் கொடுத்த கொல்லனுக்கும், பறை கொட்டிய துடியனுக்கும் பாடி யாழ் இசைத்த பாணருக்கும் கொடுக்கின்றனர். வெட்சி புனைய (12-13-2) என்றும் கரந்தை அலறக் கவர்ந்த இனநிறைகள் (12-16-2) என்றும் வெட்சியையும் கரந்தையையும் அதன் துறைகளையும் வேட்டுவ வரி யில் அமைத்து இளங்கோவடிகள் ஈட்டிய பொருளின் பயன்பாடு உரைப்பர்.*

***பொருள் மாலை யாளரை உள்ளி மருள்மாலை***
***மாயும் என் மாயா உயிர் (குறள். 1230)***

***சிறுமை நமக்கு ஒழியச் சேண்சென்றார் உள்ளி***
***நறுமலர் நாணின கண் (குறள். 1231)***

*முதல் குறளில் பொருளை நாடி பிரிந்து சென்றவர் என்று குறிப்பிடும் தலைவி அடுத்த குறளில் அந்த கேள்விக்கும் விளக்கம் தருவதுபோல் சிறுமை நமக்கு ஒழிய என்ற சொற்றொடரால் விடைத் தருகிறாள். பொருளைத் தேடிச் சென்றவர் எனக்குப் பிரிவுத் துன்பத்தை உண்டாக்கியவர்.*

*''மக்கள் யாவருக்கும் இயல்பாக அமைந்த காதல் உணர்ச்சியும் வீர உணர்ச்சியுமே அக்கால இலக்கியத்தில் சிறப்பிக்கப்பட்டன.[9] இன்பத்தால் இலக்கியத்தில் தோழியின் செல்வாக்குப் புலப்படும். தலைவன் பொருள் தேடுதலுக்காகத் தலைவியைப் பிரிகிறான். முன்னர்ச் சொல்லிய பருவத்து வராமல் காலம் நீட்டிக்கிறான். இதனால் தலைவி பெரிதும் வருந்திக் கலங்கு கிறாள். தலைவன் பொருளீட்டி மீள வரும் செய்தியைக் கேட்ட தோழி அச் செய்தியைத் தலைவியும் எடுத்துக்கூறி நம்மை விட்டுச் சென்றவன் பொரு*

ளீட்டும் முயற்சியில் வெற்றியும் கண்டு, நின்மையுண்ட கண்கள் இரண்டும் மான் பார்வை போலும் பேரழகு பெறுமாறு நம்மை விரும்பி நம்பிடத்தே வந்து சேர்ந்தன என மகிழ்வுடன் உரைக்கிறாள்.

தலைவியின் துயரத்தைப் போக்கும் வண்ணமாகத் தலைவனின் வருகையை எடுத்துரைத்து, அவள் பால் அன்பு கொண்டவனான அவன் திறத்தையும் உணர்த்துகிறாள் தோழி.

***நாளது சின்மையும் இளமையது அருமையும்***

***இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும் (அகத். 987)***

வாழும் நாள் சில என்பதைக் கூறி, இளமையின் அருமையைக் கூறி முயற்சியின் சிறப்பைச் சொல்லி, தகுதியது அமைதியும், பொருள் இன்மை யின் இளிவையும், பொருள் உடைமையின் உயர்ச்சியும் அன்பினது பெருக்கத் தையும், பிரிவினது அருமையையும் கூறி, பொருள் ஈட்டச் செல்லப் பிரியும் காலத்தும் என்று பொருளின் அவசியத்தையும், பொருள் தேடும் பருவத்தை யும், பொருளின் மேன்மையையும், பொருள் இல்லாதானின் இழிவையும் உரைக்கிறார். இதனால்தான் உழைப்பின் மூலம் வாழ்க்கை நடத்துவதே சிறந்த இல்லறம் என்ற எண்ணம் உடையவர்களாக இருக்கின்றனர்.

அரசுப் பொருளாதாரம்

அரசாங்கத்தினது பொருளாதார நிலையைக் கூறுவதாகும். இதனை நாட்டுப் பொருளாதாரம் என்றும், பொதுப் பொருளாதாரம் என்றும் கூறலாம். இப்பொருளாதாரக் கூறு இன்று ஒரு பெருங்கலையாகக் கருதப்படுகின்றது. ஒரு நாட்டின் அரசாங்கம் இயக்குவதற்குரிய மூலாதாரம், அதன் வரவு செலவு வருவாய்க்குரிய வழிகள், செலவாகும் வீதம் எவ்வாறு செலவு செய்தல்,

வேலை என்ற முறை இன்ன பிறவற்றை விரிவாக கூறுவது இப்பொருளாதாரக் கலையின் பணியாகும்.

பொருளாதாரம் தனிப் பொருளாதாரம் பொதுப் பொருளாதாரம் என்பதாகும். நாட்டுப் பொருளாதாரம் இவ்விரண்டினுக்கு உள்ள ஒற்றுமைகள் சில வேற்றுமை பல இவற்றை பிரிப்பது இங்கு மற்றொன்று விரித்தலாக முடியும். ஆகவே பொதுப் பொருளாதாரமாகிய நாட்டுப் பொருளாதாரத்தின் பல்வேறு கூறுகளையும் ஈண்டு அறியலாம்.

நாட்டு பொருளாதாரம் அல்லது அரசுப் பொருளாதாரம் என்பது இரு வகைப் பிரிவுக்குள் அடங்கும். ஒன்று வருவாய் பற்றியது. மற்றொன்று செலவு பற்றியது. ஒரு நாட்டிற்குரிய பொருள் வருவாய் என்பது அந்நாட்டு மக்கள் தரும் வரி அல்லது கடமை முதலியனவாகும். பொருளின்றித் தனி மனித வாழ்க்கை. இல்லையாதல் போல, ஓர் அரசும் பொருள் இல்லாமல் இயங்காது.

**பொருளால் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்லது இல்லை பொருள் (குறள். 751)**

ஐந்திணைப் பொருள்களில் குறிஞ்சி யொன்றே கூடுதல் பொருளைப் பற்றி வருவதாகும். பொருள் தேடல் முதலிய காரணங்களால் ஒரு தலைவன் தன் தலைவியிடமோ அவள் தோழியிடமோ கூறி விடைபெற்று ஆற்றொணா வெப்பம் மிக்க காலத்து, செலற்கரிய அருஞ்சுரமாகிய பாலை வழியே நானும் நாளும் தொலைவிற்கோ, அவன் தலைவியும் இல்லிருந்து வருந்தல் பாலை யாகும். அங்ஙனம் சென்றவன், சென்ற வினைமுற்றி மீளத் தொடங்கி நாளுக்கு நாள் அண்மையில் வாரா நிற்க தலைவி எதிர்நோக்கி ஆற்றியிருக்க முல்லை, பன்னாடுகள் கடந்தோ கடல் கடந்தோ சென்ற தலைவன் குறித்த காலத்தும் வாரா தொழில், தலைவி ஆற்றாமை கைமிக்கு வாய்விட்டுப் புலம்பும் அள

விற்கு வந்து இரங்குதல் நெய்தல், இங்ஙனமெல்லாம் அன்றித் தலைவன் பரத்தையர் இன்பங்காரணமாக தலைவியைப் பிரிந்தொழுகும் வழி இத்தலைவிக்கு புலவி, ஊடல் முதலிய நிகழ்வது மருதம்.

*சிலப்பதிகாரம்*

மாதவியிடம் சென்று மீண்ட கோவலன் கண்ணகியிடம் மீண்டும் செல்கிறான். கண்ணகி தன் சிலம்பினைத் தருகிறாள். அவ்வாறு சிலம்பினைக் கொண்டு பொருளீட்ட முயன்ற கோவலன் மதுரைக்குக் கண்ணகியையும் உடன் அழைத்துச் செல்கிறான். புகார் நகரைவிட்டு இவர் பிரிவது பொருள் காரணமாகப் பிரிதல் இல்லை. புலம் பெயர்வு என்று விவரிப்பர். ஆனால் பொருள்வயின் பிரிவு என்பதற்கான தெளிவான பதிவுகள் கிடைக்கின்றன.

1. அவர்கள் செல்லும் வழியானது, பாலைத்திணைக்குரியதும் பிரிதலுக்குரியதுமான கொடுமையான நிலங்களாகக் காட்டப்படுகின்றன.

2. இந்நிகழ்வு தொல்காப்பியரின் பாலை நில பொருள்வயின் பிரிதலின் பாற்படும் எனக் கொள்ளலாம். பொருள் தேடச் செல்லும் போது தலைவியை உடன் அழைத்துச் செல்லக்கூடாது என்ற தமிழர் மரபை இளங்கோவடிகள் மீறுவதற்கான காரணம் என்ன?

3. பெண்ணை முன்னிலைப்படுத்திய காப்பியம் என்பதனால் உடன் செல்கிறாளா?

4. மதுரை எரிந்துபடுதல் வேண்டும் என்ற விதியை நிறைவேற்றச் செல்கிறாளா?

5. தமிழர் மரபை வலியுறுத்தச் செல்கிறாளா? முதலில் கூறப்பட்ட இரண்டு கருத்துக்களையும் ஆராய்ந்து பல ஆய்வாளர்கள் நிறுவி யுள்ளனர். மூன்றாவதாகக் கேட்கப்பட்ட கருத்து ஆய்வு செய்ய வேண்டிய ஒன்று.

## சீவகசிந்தாமணி

இக்காப்பியத்திலும் பிரிதல் நிகழ்கின்றது. கற்புக் காலத்துப் பிரிதல் என்பது தெளிவாக விளக்கம் பெற்றுள்ளது. சீவகன் எட்டுப் பெண்களை மணமுடித்துக் கொள்கிறான். [10]

1. முதல் இரண்டு பெண்களை மணமுடித்துக் கொண்ட பிறகு முதல் பிரிதல் தொடங்குகின்றது. இப்பிரிதல் அரசனால் நிகழ்வது.

2. பதுமையாரையும் கேமசரியையும் மணம் முடித்த பிறகு இரண் டாம் நிலைப்பிரிதல் நிகழ்கிறது. இப்பிரிதலில் சீவகன் தன் மனைவியரிடம் பிரிகிறேன் என்பதைக் கூட தெரிவிக்காமல் பிரிகிறான்.

3. அடுத்து பிரிதல் கனகமாலை விமலை, சுரமஞ்சரி ஆகியோரிடத் திருந்து பிரிதல், இப்பிரிதலில் தன் பிரிதலின் நோக்கத்தினைச் சீவகன் சொல்லிவிட்டுப் பிரிகிறான்.

4. அரசனால் பிரிதல், பொருளுக்காகப் பிரிதல், போருக்காகப் பிரிதல்.

## கம்பராமாயணம்

இந்த காப்பியமும் கற்புக் காலப் பிரிதலைச் சிறப்புறக் கூறியுள்ளது. இராமன் சீதையை உடன் வருதல் நல்லதன்று என்று எடுத்துக் கூறியும்

**பிரிவினும் சுடுமோ, பெருங்காடு**

என்று கூறி உடன்காட்டிற்குச் செல்கிறாள். [11]

பொருள்வயின் பிரிதல் என்றக் கோட்பாடு, இம்மூன்றிலும் வெவ்வேறு நிலைகளில் வெளிப்பட்டுள்ளமையை உணர முடியும்.

1. சிலம்பில் பொருளுக்காகத்தான் பிரிகிறான் என்பது தெளிவு

2. சீவகசிந்தாமணியில் பொருளுக்காகவும், போருக்காகவும் பிரி கிறான்.

3. இராமாயணத்தில் வரம் காரணமாக பிரிதல் ஏற்படுகிறது. வரம் என்பதைக் குறிக்கோள் எனலாம். பொருளுடன் குறிக்கோளைத் தொடர்புற்று உணரலாம்.

4. பிரிதலில் பெண்களை உடன் அழைத்துச் செல்வதால் இருபெரும் சமூகத்தின் அழிவு நிகழ்கின்றது.

5. தலைவியை விட்டுத் தலைவன் பிரிதல் என்ற நிலைமாறி தலைவனை விட்டுத் தலைவி பிரிதல் நிகழ்கின்றது.

6. பிரிதல் பெண்களை அழைத்து ச் செல்லாத சீவகன், மிகப்பெரிய அரசாட்சியை மீட்டெடுப்பதாகக் காட்டப்படுகின்றது.

கற்புக்காலத்தில் பொருள்வயின் பிரிவு, பருவ வரவு ஆகிய சூழல் களினால் தலைவியின் பிரிவாற்றாமை புலப்படுகின்றது. மேலும் தலைவன்

பிரிவை எதிர்நோக்கும் நிலையிலும் தலைவி ஆற்றாமையால் புலம்புவதைக் காண முடிகிறது.

தலைவனின் பிரிவைத் தாங்க முடியாவிட்டாலும் பொருள் பிரிவின் காரணத்தைக் கூறித் தலைவி தன்னை அமைதிப்படுத்தி கொள்ளும் விதமாகத் தோழியிடம் புகழ்ந்துரைக்கின்றாள்.

பொருளீட்டச் சென்ற தலைவன் காலம் நீட்டித்தமையால் தோழி இயற் படுக்கிறாள். அதனை மறுத்துத் தலைவி, வருடை மான் கன்றுகள், தாயின் பாலை நிரம்பவுண்டு மலை நிழலில் துள்ளி விளையாடும். நாட்டையுடைய தலைவனாதல் இல்வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளீட்டி வந்த பின்னர் அறஞ்செய்யும் இயல்புடையான் என்று தலைவனின் பிரிவிற்கான காரணம் கூறித் தலைவி ஆற்றியிருத்தலை இப்பாடல் விளக்குகின்றது.

### பொதுநலப் பிரிவு - கலத்திற்பிரிவு

பிரிவு இரண்டு வகைப்படும். அவை காலில் பிரிவு எனவும் கலத்தின் பிரிவு என்றும் கூறப்படும். காலிற்பிரிவுக்குச் செல்லும் போது தலைவனுடன் தலைவியும் உடன் செல்வது உண்டு. மரக்கலத்தில் கடல் கடந்து செல்லும் வழக்கம் பெண்களுக்கு இல்லை என்பர். [12]

### பெண்கள் கடல் கடத்தல் இல்லை

ஆண்கள், பெண்களை அழைத்துக்கொண்டு கடல் கடந்து பொருளுக் காகப் பிரிந்து செல்வதாகச் செய்யுள் பாடுதல் மரபு இல்லை. எனவே பெண்கள் கடல் தாண்டிச் செல்வதாகப் பாடுதல் கூடாது என்கிறார் தொல்காப்பியர். [13]

**முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை**

(முந்நீர் மூன்று புறமும் சூழ்ந்துள்ள கடல்நீர்) (தொல்-37)

என்ற நூற்பாவில் புலப்படுத்துவர் முந்நீர் வழக்கம் என்பதற்கு இளம்பூரணர் கப்பல் வழியாகக் கடலிற் செல்லும் பிரிவு என்று உரை கூறுவர். முந்நீர் என்பது கடல் ஆனால் நச்சினார்க்கினியர் ஓதல், தூது, பொருள் ஆகிய மூன்று நீர்மை யால் செல்லும் பிரிவு என்று பொருள் கூறுவர். இளம்பூரணர் கருத்துப்படி கடல் வழியாக மகளிரைக் கூட்டிச் செல்லும் வழக்கம் இல்லாவிடினும் தரை வழி யாகச் செல்லும் பிரிவில் தலைவியைக் கூட்டிச் செல்லும் வழக்கம் உண்டு.[14] ஆனால் நச்சினார்க்கினியர் கூறுவது போல, தலைவியை உடன் கூட்டிச் செல்லும் புலனெறி வழக்காகச் சான்றோர் செய்யுட்களை இயற்றவில்லை யாதலின் அவ்வழக்கம் தமிழர்களிடையே என்றும் இருந்ததில்லை என்று கருத வேண்டியுள்ளது. இன்றும் செட்டிநாடு போன்ற பகுதிகளில் வாழும் தன வணிகரும் அவரைச் சார்ந்த பிறரும் மலேயா போன்ற பிற நாடுகளுக்குச் செல் லும் பொழுது உரிமை மகளிரைக் கூட்டிச் செல்வதில்லை.

கடலில் கலத்தில் தலைவன் மட்டும் சென்றமை

> **உலகுகிளர்ந்தன்ன உருகெழு வங்கம்**
> **புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப்போழ**
> **இரவும் எல்லையும் அசைவின் றாகி**
> **விரை செலல் இயற்கை வங்கூ ழாட்டக் (அக. 255)**

மதுரை மருதனிநாகனார் மேலும் கலத்தின் பிரிவு மகளிர்க்கு இல்லை என்பதற்குச் சிலப்பதிகாரத்தில் கூறப்படும் செய்தி.

> **மனன் மலி பூங்கானல் துருகலன்கள் நோக்கிக்**
> **கணவன்வரக் கல்லூருவம் நீத்தாள் (சிலம்பு வஞ்சினமாலை)**

என்று காட்டுகிறது.

பல்வேறு நாட்டுப்பொருள்

***வேறுபல் நாட்டுற் கால் தர வந்த***

***பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை (நற். 295)***

என்று கூறுவதனால் அறியலாம்.

நாட்டுக்கு வேண்டிய விலையுயர்ந்த பண்டங்கள் பெரிய கப்பல்களில் வந்து இறங்கி மலைபோல் குவிந்து கிடந்தன என்பதையும், கப்பல்கள் அஞ்சத் தகும் கடலில் அலைகளைப் பிளந்து கொண்டு கடுங்காற்றொடு கரை சேர்தலும் இன்னிசை முழங்க அவை வரவேற்கப்படுதலும் உண்டு என்பதையும்,

***வானியைந்த இருமுந்நீர்ப்***

***..................................***

***தெண்கடற் குண்டகழிச் (மதுரைக்காஞ்சி 75-86)***

என்று கூறுவதனால் தெளியலாம். இது பாண்டிய நாட்டுத் துறைமுகத்தின் கட்டற்ற வாணிகம் (Free trade) கடந்தது கடலிலிருந்து நீராவியாகச் சென்ற நீர் மலையில் பெய்வதும், மலையில் பெய்த நீர் மீண்டும் கடலுக்கு வருவதும் இயற்கையாக மாறி மாறி நிகழ்வது போன்று பொருள்கள் இந்நாட்டிலிருந்து வெளிநாட்டுக்குச் செல்வதும் வெளிநாட்டிலிருந்து இந்நாட்டுக்கு வருவதும் தங்குதடையின்றி நடந்து கொண்டிருந்தன. இவ்வாறு வாணிகச் சிறப்புடன் விளங்கியது. சோழ நாட்டுக் காவிரிப்பூப்பட்டினம், கடியலூர் உருத்திரங் கண்ணனார் எனும் பெரும்புலவர் கவினுறக் கூறுவது பின்வருமாறு.

***நீரினின்று நிலத்தேற்றவும்***

***நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்***

***அளந்த றியாப் பல பண்டம்***

***வரம்ப றியாமை வந்தீண்டி (பட்டினப்பாலை வரி 129 - 133)***

இவ்வாறு சிறந்திருந்த காவிரிப்பூம்பட்டிணத்தைத் துறைமுகமாகக் கொண்ட தமிழ்நாடு சிறப்பாகச் சோழநாடு

**நீரின் வந்த நிமிர் பரிப் பரவியும்**

**காலின் வந்த கருங்கறிமூடையும் (பட்டினப்பாலை-185)**

உடையதாகச் சிறப்புற்றிருந்தது.

யவன நாடுகளிலிருந்து, பாவை விளக்குகளும், தண் கமழ் தேறலும் தமிழ்நாட்டுக்கு வந்துள்ளன. நெடுநல்வாடை வரி 101 யவன நாட்டுக் கப்பல் கள் பொன்னோடு வந்து கறியோடு பெயர்ந்தன.

'யவனம்' என்பது முதலில் கிரேக்க நாட்டையும் பின்னர் உரோம நாட்டையும் குறித்தது. பின்னர் மேனாட்டனைத்தையும் குறிக்கும் சொல்லாகி அரபிய நாட்டையும் குறிக்க வழங்கியுள்ளது. சங்க காலத்தில் பல நாட்டு வணிகர்களும் காவிரிப்பூம்பட்டிணத்தில் வந்து தங்கியிருந்தனர். வேற்றுமை யுணர்வின்றி அனைவரும் ஒன்றுபட்டு உறைந்தனர் என்றும் விழா நடக்கும் ஊர்போலவே மக்கள் கூட்டம் உடையதாய் காவிரிப்பூம்பட்டிணம் காட்சி யளித்தது. (பட்டினப்பாலை 216-217) அக்காலத்தில் பட்டிணம் என்றாலே அது காவிரிப்பூம்பட்டிணந்தான் என்று அறியும் அளவு புகழ் பெற்றிருந்தது.

சங்ககாலத் தமிழ்நாடு வெளிநாட்டு வாணிகத்தாலும் நன்கு செழிப்புற்று ஓங்குவதற்குத் துணையாகக் கப்பலோட்டும் மாலுமிகள் ஆழ்கடலிலும் அச்சமின்றிச் சென்றனர். அவ்வாறு செல்வோர்க்குப் பெரு நீரோச்சுநர் என்னும் பட்டம் அளித்துப் பாராட்டினர். கடற்கரைகளில் கப்பல்கள் இரவில் கரை வந்து சேர்வதற்கு உதவியாகக் கலங்கரை விளக்கங்கள் இருந்தன. கலங்கரை விளக்கம் எனும் சொல்லே நாம் நாட்டுக்கப்பல் செலவு

சிறப்பை நன்கு விளங் கும் தன்மையதாய் உள்ளது. ''திரைகடல் ஓடியும் திரவியம் தேடு'' என்பது நம் நாட்டுப் பழமொழியாகும். [15]

## கடல் வாணிகம்

கடல் வாணிகம் முன்பு தமிழ்நாட்டில் நல்ல நிலைமையில் இருந்த தாகவே தெரிகின்றது. கடல் வணிகம் என்று சொன்ன அளவிலேயே, நாம் நாட்டவர் தொலைவான அயல்நாட்டவரோடும் முன்பு வாணிகச் செய்திருந் தனர் என்பது பெறப்படும். நமது நாட்டிலேயே கடற்கரையோரத்திலும் பிற நகரங்களோடும் வாணிபம் செய்தமை அறியப்படும் ஈழம், காழகம், கடாரம், சீனம், சோனகம், யவனம் முதலிய நாடுகளோடு நம்மவர்கள் முன்பு வாணிபம் செய்து வந்தார்கள் என்பது பழைய தமிழ் நூல்களிலிருந்து தெரிகின்றது. இந் நாட்டிலிருந்து பல பொருள்கள் அயல்நாடுகளுக்குச் சென்றதாக வரலாற்று ஆசிரியர்களும் கட்டுரைக்கிறார்கள். புறநானூற்றில் இதைப் பற்றிய குறிப்பு ஒன்று வருகின்றன. நாலாபக்கமும் நீர் நிரம்பிய கழனிகள் சூழ்ந்திருக்க நடு வில் தனியாக விளங்கும் மதிலோடு கூடிய ஓர் அரசனது மருதநிலக் கோட் டைக்கு விரிந்த கடலின் நடுவில் தனியாக தோன்றும் கப்பல் ஒன்று இந்நூலில் உவமையாகக் கூறுகின்றன. [10]

## தமிழரின் கடற்செலவு

எகிப்தில் நடைபெற்ற அகழாய்வில் கண்ணன், சாத்தன் என்று தமிழில் படிக்கக்கூடிய சொற்கள் கிடைத்திருக்கின்றன. தாய்லாந்து நாட்டில் சங்க காலத்தமிழ் எழுத்தில் பெரும் பதன் கல் என்று எழுதப்பட்ட உரை கல் கிடைத்துள்ளது. அதனைப் பெரும் பத்தன் என்று படித்துப் பொன் வேலை செய்வோன் என்று கருதுகின்றனர்.

இவற்றால் பண்டைய சங்க காலத் தமிழரின் கடற்செலவு பற்றிய செய்திகளை அறிகின்றோம். சங்க இலக்கியத்துள் பழந்தமிழரின் கடற்செலவு பற்றிய பல குறிப்புக்களைக் காண முடிகிறது.

**வேறுபல் நாட்டுற் கால் தரவந்த**

**பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை(நற். 295)**

என்பன தமிழர் கடற்செலவைக் காட்டும் தொடராகும். [17]

சங்ககாலத் தமிழரின் கடல் செலவும் தரைச்செலவும்

முந்நீர் என்பதற்குக் கடல் என்று நேர் பொருள் கொள்ளாமல் மூன்று தன்மை என்று பொருள் கூறுகிறார். உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்துக்கு நேர்பொருள் கொள்ளாமல் சுற்றி வளைத்துப் பொருத்தமல்லா உரை கூறுகின்றார்.

இதன் பொருள் ஓதலும் தூதும் பொருளுமாகிய மூன்று நீர்மையாற் செல்லும் செலவு தலைவியோட கூடச் சேறலின்று இனி இச்சூத்திரத்திற்குப் பொருள்வயின் பிரிவின்கட் கலத்திற்பிரிவு தலைவியுடன் சேரவில்லை. எனவே காலிற்பிரிவு தலைவியுடன் சேறல் உண்டு என்னும் பொருள் கூறுவார்க்குச் சான்றோர் செய்த புலனெறி வழக்கம் இன்மை உணர்க.

இதில் நச்சினார்க்கினியர் இளம்பூரணர் கருத்தை மறுக்கிறார். தரை வழியாக அயல்நாடுகளுக்குச் செல்லும் போது பெண்பாலரையும் உடன் கொண்டு செல்லும் வழக்கம் உண்டு என்று இளம்பூரணர் கூறியதை இவர் மறுக்கிறார். அதாவது கடல்வழியாக அயல்நாடுகளுக்குச் செல்லும் தமிழன் தன்னுடைய மனைவியை அழைத்து செல்லும் வழக்கம் இல்லை. அன்றியும் தரை வழியாக அயல்நாடுகளுக்குச் செல்லும் தமிழனும் தன்னுடன் மனைவியை அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை என்று கூறுகிறார்.

இவ்வுரையாசிரியர்கள் இதில் மாறுபடக் கூறுகின்றார்கள். எனவே இளம்பூரணர் அல்லது நச்சினார்க்கினியர் என்று என்பதை ஆராய்வோம். இதற்கு எபிகிறாபி என்னும் சாசன எழுத்துச் சான்றும் ஆர்க்கியாலஜி என்னும் பழம்பொருள் ஆராய்ச்சிச் சான்றும் உதவி புரிகின்றன என்பர். [18]

## ஆண்மை நெறிகள்

ஆடவன் நெறிகளுக்கெல்லாம் இரண்டு அடிப்படைக் குணங்கள் உண்டு. 'பெருமையும் உரனும் ஆடுஉமேன' என்பது தொல்காப்பியம்.[19] புறத்தே நெடுந்தொலைவு சென்று பொருளீட்டல் ஆடவர் கடமையாகின்றது. பொருளில்லை எனின் அவன் குடும்பம் பெருமை இழக்கும் சிறுமைப்படும். குடும்பப் புகழோ வேண்டி ஆடவன் இன்பத்துறந்து இளமைக்காலத்து வாழ் நாளைப் புறத்தே கழிக்க வேண்டியவன் ஆகின்றான். தலைவனின் வினைப்பிரி வானது ஓதல், தூது, காவல் பொருட்பிரிவுகளை முன்னிறுத்தி அவனது கடமை யுணர்ச்சியைப் புலப்படுத்துவன.

வாணிகத்தின் பொருட்டுக் கடல் கடந்து வெளிநாடுகட்குச் செல்லும் மாசிக்கும் ஆடிக்கும் இடைப்பட்ட நான்கு மாதங்களில் கொண்டு போன சரக்குகளை விற்றுவாங்க வேண்டியவற்றை வாங்கியும் தலைவன் ஊர்த் திரும்புவான்.

## வெளிநாட்டு வாணிகம்

உள்நாட்டு வாணிகத்தைப் போன்றே வெளிநாட்டு வாணிகமும் சிறப் பாக நடந்தது. உள்நாட்டு வாணிகத்திற்கு உலகு வரி கிடையாது. வெளிநாட்டு வாணிகத்திற்கு உலகு வரி உண்டு. ஆனால் இன்ன பொருள்-தான் இன்ன நாட்டிலிருந்து தான் வரலாம் என்ற கட்டுப்பாடு கிடையாது. இவ்விரண்டு வாணிகக் கொள்ளைகளால் அக்கால வாணிகம் ஓங்கி உயர்ந்து நாட்டு மக்கள் நல்வாழ்வு பெற்றிருந்தனர். கட்டற்ற வாணிக முறையால் வெளிநாட்டு வாணி

கம் வளர்ந்தோங்கியது. அன்றியும் தமிழ்நாட்டின் மூன்று பக்கங்களிலும் நீண்ட கடற்கரை அணி செய்தன. கப்பல் கட்டும் தொழிலும், அதனை அஞ்சாது ஆழ் கடலிலும் ஓட்டும் வினையிலும் தமிழர்கள் தமக்கு நிகர் தாமே என்று புகழ் பெற்றிருந்தனர். காவிரிப்பூம்பட்டினம், காயல்பட்டினம் தொண்டி, முசிறி முதலியன உலகப் புகழ்பெற்ற துறைமுகங்களில் தலைமையானவை. உலகு கிளார்ந்தென்ன உருகெழுவங்கள் புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழு இரவும் எல்லையும் அசைவின்றாகி (அகம். 255) விரைந்து சென்று கொண்டிருந்தன.

'அருங்கலம் தரீஇயர்நீர் மிசை திவக்கும் பெருங்கலி வங்கம்' திசைகள் தோறும் திரிந்தன. 'நெடுங்கொடி நடங்கும் நாவாய்கள்' துறைமுகங்கள் தோறும் தோன்றின.[20] பெரிய மரக்கலங்கள் கூம்புடனே மேல் விரிக்கப்பட்ட பாலையும் மாற்றாமல் அதன் மேற்பாரத்தை இறக்காமல் நுழையக்கூடிய துறைமுகங்களும் இவ்வாறு வரும் மரக்கலங்களால் வந்து நிறையும் பல் வகைப் பண்டங்களையுடைய கடற்கரைப்பட்டணங்களும் உடையனவாய் இருந்தன என்பர். [21]

**கடல் கடந்த சான்றுகள்**

சங்கத் தமிழர் கடற்செலவில் தேர்ந்தவர்களாக விளங்கினர். கடல் கடந்து பல கீழை, மேலை நாடுகளுக்குச் சென்றுள்ளனர்.

**நளிலிரு முந்நீர் நாவாயோட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக** (புறம். 66)

என்பன அதைக் குறிக்கும் தொடர்களாகும்.

கிரேக்கர், உரோமர் முதலிய மேலை நாட்டவர் கரை ஓரமாகவே கடல் பயணம் மேற்கொண்டனர். அக்காலத்தில் பருவக் காற்றின் பயன் தெரிந்து

2000 ஆண்டுகட்கு முன்பு தமிழர் நடுக்கடலில் கப்பலோட்டிய தமிழர்களாக வாழ்ந்துள்ளனர் என்பதை வளி தொழில் ஆண்ட என்ற தொடர் சிறப்புடன் விளக்குகிறது.

தமிழ்நாட்டில் வெளிநாட்டார் பற்றிய குறிப்புகளும், வெளிநாட்டார் தொல்பொருள்களும் பல கிடைத்துள்ளன. பிற வெளிநாடுகளில் இதுவரை சங்ககாலத் தமிழகச் சான்றுகள் பெரும்பாலும் அகப்படாமல் இருந்தன. அண்மைக்காலத்தில் மேற்கு நாடுகளிலும், கிழக்கு நாடுகளிலும் சங்ககாலச் சான்றுகள் பல கிடைத்துள்ளன. [22]

எகிப்து நாட்டில் நைல் நதிக் கரையில் உள்ள 'குவாசிர் அல்காதிம்' என்னும் ஊரில் அமெரிக்க நாட்டுத் தொல்லியல் ஆய்வாளர்கள் நடத்திய அகழ் வாராய்ச்சியில் 'கண்ணன்' சாத்தன் என்ற சங்ககாலத் தமிழ் எழுத்துப் பொறிப்புகள் கிடைத்துள்ளன.

வியன்னா அருட்காட்சியகத்தில் 'பேபிரஸ்' எனப்படும் பண்டைய தாளில் எழுதப்பட்ட கி.பி. முதல் நூற்றாண்டு ஆவணத்தில் முசிறி வணிகன் ஒருவன் கப்பலில் ஏற்றிச் சென்ற வாசனைப் பொருள், தந்தப் பொருள், துணிகள் பற்றி செய்திகளும் அவற்றின் எடையும் கூறப்பட்டுள்ளது.

### கடல்வழிச் செலவைப் பாடாமை

தமிழகம் கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய முத்திசையானும் நீர் வளைவுண்டது. முந்நீர் என்னும் தமிழ்க்கிளவி இம்முப்புறக் கடலமைப்பைச் சுட்டுவது.

***முந்நீர் விழுவி நெடியோன் (புறம்-9)***

***முந்நிர் உடுத்தவிவ் வியனுல கறிய (புறம்-382)***

இப்பழஞ் சொல்லின் அரும்பொருள் சங்கப் பிற்காலத்தே வழக்கில் இல்லை. யாற்றுநீர் ஊற்றுநீர், மழைநீர் என்று விரித்துரைத்தனர். முப்புறமும் தமிழகத்தை வளைத்துக் கிடக்கும் ஒரு பெரும் நீர்ப்பரப்பைக் குறிப்பது என்பதனையும் தீபகற்பகமாகியரெல்லாம் எண்ணிப் பார்க்கவில்லை இத் தமிழகத்தைப் 'படுதிரைவையம்'' என்பர் (147) தொல்காப்பியர்.[23] 'நெடுங்கட லும் தன்னீர்மை குன்றும்' என்ற குறளைப் பாடுதற்குத் தாய்நாட்டைச் சூழ்ந்து கிடக்குங்நெடுங்கடல் அழுவம் வள்ளுவர் நெஞ்சை இயக்கியிருத்தல் கூடும்.[24]

தமிழ்நாடு கடல் சூழ்ந்த இயற்கைத்து ஆதலின், தமிழர்கள் தொன்று தொட்டே கடல் வாணிகர்களாகத் திகழ்ந்தனர். கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக் குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர் என்று இளங்கோ நீர் வழி நில வழி வாணிகங்களை மொழிகுவர். நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும், காலின் வந்த கருங்கறி மூடையும் என்ற பட்டினப்பாலை அடிகள் அவ்வழி வந்த சரக்குகளை இயம்புகின்றன.

### கடற்பாலைப்பாட்டு

பாலைத்திணைக்கண் கடற்பிரிவைப் பாடியிருந்தால், புதிய பல் இலக் கியப் புனைவுக்கு வாய்ப்பு உண்டு. அலைகடல் நடுவண் சாடி வீசும் கரும் புயல், கடற்கொள்ளை, சுறாமீன்களின் தாக்கு, பாறைபோது, பாய்மர முறிவு, பாய் கிழிவு, கலங்கவிழ்வு, திசையறியாமை, உணவின்மை, நன் னீரின்மை முதலான இடையூறுகளையும், அவற்றை எண்ணிப் பார்த்துத் தலைவிபடும் அவலங்களையும் கடல் நீந்தித் திரைக்கையால் கரையடைந்த தலைவன் துய்க்கும் ஆராப் புணர்வுகளையும் சொல்லும் பாலைக்கடற் பாடல் களைப் பெரிதும் பெற்றிருப்போம் என்பர். [25]

காலிற்பிரிவு

தலைவியைத் தலைவன் உடன் அழைத்துக் கொண்டு காலில் பிரிதலை நற்றிணையில் ‘அழிவில் முயலுமார்வ மாக்கள்’ எனத் தொடங்கும் பாடலில் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

**நிழல் காண் தோறு நெடியவைகி**
**மணல் காண் தோறும் வண்ட றைஇ**
**வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே! (நற். 9)**

எனப் பாடியமையால் அறியலாம்.

சிலப்பதிகாரத்தில் பொருள் ஈட்டுவதற்காகக் கோவலன் கண்ணகியுடன் மதுரைக்கு அழைத்துக் கொண்டு நடந்து சென்ற வரலாற்றால் காலில் பிரிவுக்கு மகளிர் செல்வது உண்டு என்பதை அறியலாம். வணிகத்திற்காகக் காலிற் செல்லும் உமணர்களுடன் பெண்களும் சென்றதைப் பெரும்பாணாற்றுப் படையில் காணலாம்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலே அதாவது கடைச்சங்க காலத்திலேயே தமிழ்நாட்டிலிருந்து தமிழ் வாணிகர் (சாந்துக் கூட்டத்தினர்) கலிங்க தேசத்துக் குச் சென்று வாணிகம் பிரிந்ததையும், அவர்கள் நாளடைவில் அங்கு செல்வாக் குப் பெற்றுக் கலிங்க நாட்டின் ஆட்சிக்கு ஆபத்தாக விளங்கினார்கள் என்பதை யும், அந்த ஆபத்தை அறிந்த அக்காலத்தில் கலிங்க நாட்டை அரசாண்ட கார வேலன் என்னும் அரசன் அத்தமிழ் வாணிகத்தை அழித்து ஒடுக்கினான் என்பதையும் கலிங்க நாட்டிலுள்ள வித்திரும்பாடுகைச் சாசனம் கூறுகின்றது. நாட்டு வாணிகச் சாத்தை அழித்தான் அந்தத் தமிழ் வாணிகச் சாத்தினர். அவர்கள் அழிக்கப்படுவதற்கு முன்பு 113 ஆண்டுகளாகக் கலிங்க நாட்டில் தங்கி வாணிகம் புரிந்து வந்தனர். எனவே கி.மு.165+113=278 கி.பி. மூன்றாம்

நூற்றாண்டிலேயே அந்தமிழ் வாணிகச் சாத்துக்குழு கலிங்க நாட்புறச் சென்று வாணிகம் செய்யத் தொடங்கிற்று என்பது தெரிகின்றது.

**வாணிகம் செய்த தமிழர்கள்**

நூற்றுப்பதின்மூன்று ஆண்டுகளாகக் கலிங்க நாட்டிலேயே தங்கி வாணிகம் புரிந்த தமிழர்கள் தங்களுடன் மனைவி மக்களையும் அழைத்துக் கொண்டு போய் இருப்பார்கள். மனைவி மக்களுடன் அவர்கள் பரம்பரை பரம் பரையாக பல ஆண்டுக்காலம் அங்கே தங்கியிருப்பார்கள். எனவே தரை வழி யாக அயல் நாடுகளுக்கு சென்றபோது, கடைச்சங்கத் தமிழன் தன்னுடன் மனைவியையும் அழைத்துச் சென்றான் என்பது இதனால் பெறப்படுகின்றது.

இதற்கு இன்னொரு சான்றும் கிடைத்திருக்கின்றது. ஆந்திரதேசத்திலே பண்டைக் காலத்தில் புகழ் பெற்றிருந்த அமராவதி நகரத்திலே தமிழ் வணிகர் கள் இருந்தார்கள். அவர்கள் குடும்பத்தோடு அங்குத் தங்கி இருந்தார்கள். அவர்களில் இருவர், போர் பெற்ற அமராவதி பௌத்த ஸ்துபிக்குத் திருப்பணிக் கைங்கரியம் செய்திருக்கிறார்கள். [26]

தமிழ்க்கண்ணனும் அவன் தம்பி இளங்கண்ணனும் தங்கை நாகையும் இந்த மகா சைத்தியத்திற்கு அமைத்த உதம்பதக்கல் என்பது இச்சாசனத்தின் பொருள். இத்தமிழன் சகோதர சகோதரிகளுடனும் மனைவி மக்களுடனும் தரைவழியாக அயல்நாடு சென்று வாழ்ந்து வந்த செய்தியை அறிய முடிகிறது.

இந்தச் சாசனம் தமிழ் நாட்டிலிருந்து தரை வழியாக அயல்நாட்டுக்குக் குடும்பத்தோடு சென்று வாணிகம் செய்தனர் தமிழர் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனி போல விளக்குகின்றது. சங்ககாலத்தில் தமிழர் தரை வழியாகப் பெண்டிரையும் அழைத்துக் கொண்டு அயல்நாடுகளுக்குச் சென்றனர். செய்தியை கலிங்க நாட்டுக் காரவேல அரசரின் வித்திரும்பா சாசனமும்

அமராவதி பௌத்த சயித்தியக் கல் வெட்டெழுத்துச் சாசனமும் சற்றும் ஐயத்துக்கிடமில்லாமல் உறுதிப்படுத்துகின்றன.

எனவே, முந்நீர் வழக்கம் மகடூவோடில்லை என்னும் தொல்காப்பியர் சூத்திரத்துக்கு உரை எழுதிய இளம்பூரண அடிகள் காலில் (தரைவழியாக அயல்நாடுகளுக்குச் செல்வது) பிரிவு தலைமகளை உடன் கொண்டு பிரியவும் பெறும் என்று கூறியுள்ளது. நச்சினார்க்கினியர் கூறும் பொருள் சரியானதன்று என்பதும் இந்த பழம்பொருள் சாசனச் சான்றுகளினால் அறியப்படுகின்றன என்பர். [27]

### அறநெறியோடு பொருள் தேடுதல்

தலைமகனை விட்டு காலால் நடந்து பொருள் தேடுவதற்குரிய மக்களை தொல்காப்பியர் சுட்டுகின்ற போது சமுதாயத்தில் உயர்ந்த குடிமக்கள் என்று கருதப்படுகின்றவர்களே அத்தகு செயல்களுக்கு உரியவர்கள் என்கிறார்.

### உள்நாட்டு வர்த்தகம்

வியாபாரம் உள்நாட்டு வர்த்தகம் ஏராளமாய் நடந்து வந்ததுண்டு. அங்கங்கே சுங்கங்கள் ஏற்பட்டு வர்த்தகச் சரக்குகளுக்குத் தீர்வை வசூலித்தனர். மேருமலைப் பொன், குடகுமலை மிளகு, பொதியின் மலைச் சந்தனம் கீழ் கடல், முத்து, சங்கு, கங்கைக் கரையிலுள்ள பிறவிளைவுகள் முதலியன முக்கிய உள்நாட்டு வர்த்தகச் சரக்குகளாயிருந்தன போலும். அன்றியும் உமணர் தாம் கடற்கரைகளில் விளைத்த உப்பை மூட்டைகளிலிட்டு வண்டிகளிலேற்றி ஊரூராய்க் கொண்டு சென்று வியாபாரம் செய்தனர். நெல்லும் மற்றுணாப் பொருள்களும் அவ்வாறே வியாபாரம் செய்யப்பட்டன. கடைத்தெருக்களில் உள்நாட்டுப் புறநாட்டு வியாபாரச் சரக்குகள் நெருங்கிக் கிடந்தன.

***பெருஞ்சின வேந்தனும் பாசறை முனியா***

***னிருங்கலி வெற்பன் நூதுற் றுன்றா (ஐங். 460)***

வேந்தர்க்கு உற்றுழிப் பிரிந்த தலைவி பருவ முதிர்ச்சியிலும் வரக் காணாது தலைவி சொல்லியது.

முடிவேந்தனுக்குப் போர்த் துணையாகித் தலைவியைத் தான் வரும் பருவம் குறித்து கூறியிருந்த தலைவன் அப்பருவம் வந்து முதிர்ந்துழியும் வாராமையாற் தலைவி பெரிதும் வருந்திக் கூறியது.

***முரசுமா றிரட்டு மருந்தொழிற் பகைதணிந்து***

***நாடு முன்னியரோ பீடு கெழுவேந்தன்***

***வெய்ய வுயிர்க்கு நோய் தணியச்***

***செய்யோ ளிளமுலைப் படீஇயரென் கண்ணே (ஐங். 450)***

முடிவேந்தனுக்குத் துணையாகித் தன்னாருயிர்த் தலைவியைப் பிரிந்து சென்ற குறுநிலமன்னனாகிய தலைவன் வினை நீட்டித்த வழி வெறுப்புற்று தன் விருப்பத்தைத் தன்னுட் கூறிக்கொண்டது என்பதாம்.

பாசறைத் தலைவன்

பாசறைக் கண் இருக்கும் அகத்திணைத் தலைவன் வீரத்தினும் காத லுக்கு முன்னுரிமை தரும் உணர்வினன். போர் சூழல் உருவாக்கும் உணர் வினின்று விடுபட்டுக் கார்ச்சூழல் உருவாக்கும் உணர்வினை நிறைவு செய்ய துடிக்கும் நெஞ்சினன். சூழல் தோற்றுவிக்கும் தடையினின்று விடுபட்டுத் தலைவியைக் காணும் துடிப்பினன். பாசறைத் தலைவனின் உள்ளத்தில் தலைவியை மறந்து போரையே நினைந்து பெறும் போர்க்கள வாகையில் நாட்டம் இல்லை. ஆனால் கார்காலத்தும் போர்க்கோலம் கொள்ள நிலையும்

வேந்தனின் செயல் கண்டு வாட்டம் காணப்படுகிறது. வேந்தனின் போர் வினை தணிய வேண்டும் என்ற எதிர்பார்ப்பும், தணியப் போரும் போரை நீட் டிக்க நினையும் வேந்தனும் அவனது காதலுக்கு முன் உயர்வாகத் தோன்ற வில்லை. அவனுக்கு உயர்வாகத் தோன்றுவதெல்லாம் அவனது காதலே.

***கார்செய் காலையோடு கையறப் பிரிந்தோர்***
***தேர்தரு விருந்திற் தவிர்குதல் யாவது***
***மாற்றருந் தானை நோக்கி***
***யாற்றவு மிகுத்தல் வேந்தனது தொழிலே*** *(ஐங். 451)*

தலைவன் குறித்த பருவம் நினைத்து ஆற்றியிருந்த தலைவி அப்பருவ வரவின்கண் பாசறையினின்றும் வந்தார். அரசன் செய்தி கூறக்கேட்டு ஆற்றா ளாய் சொல்லியது.

தலைவியை நினையாது போரில் ஈடுபடும் தலைவனின் மன உணர்வு கள் புறத்திலும், காதலியை நினைந்துருகும் தலைவனின் மன உணர்வுகள் அகத்திலும் பிரித்து வைக்கப்பட்டுள்ளமையைக் காண முடிகிறது. பாசறையில் இருக்கும் அகத்திணைத் தலைவனின் அடிமன ஒலிப்பில் தலைவியின் துயரை நினைத்து நிற்கும் குரல் பெரிதும் ஒலிப்பதற்கு இப்புலனெறி மரபு காரணமாக இடமுண்டு.

*வினைமுற்றி மீளும் தலைவன்*

***பெருஞ்சின வேந்த னருந்தோழி நணியின்***
***விருந்துநனி பெறுதலு முரியண் மாதோ***
***விருண்டு தோன்று விசும்பினுயர் நிலையுலகத் (ஐங். 442)***

வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைவன் வினை முடியாமையின் பாசறைக் கண் இருந்து பருவ வரவின் கண் சொல்லியது.

இயற்கையில் இணைந்து வாழும் உயிர்களையும் தலைவியின் நிலையையும் சுட்டி வினை முற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகற்கு உரைக்கும் கூற்றுக்கள் தேரின் வேகத்தை விரைவுபடுத்தத் தூண்டும் குறிப்பு மொழிகள். இடத்தாலும் உடலாலும் பிரிந்திருக்கும் நிகழ்கால நிலையை மறந்து, மனத் தாலும் உணர்வாலும் தலைவியைக் கண்டுப் போரும் எதிர்காலம் நோக்கிய இன்ப நினைவின் மிதப்புகள். போரில் இறந்துபட்ட வீரனுக்கு அவன் பெயர் பொறித்த நடுகல் நடுவது பழங்காலத் தமிழ் மரபு. அவ்வீரனைத் தெய்வமாகக் கருதி அந்த நடுகல்லை வழிபடுவதும் அக்கால மரபு (புறம். 260).

வேந்தனுடன் வீரன் ஒருவன் போருக்கு சென்றிருந்தான். அவன் மனைவி விருந்தினர்கள் வீட்டிற்கு வரவேண்டும் அவர்களை உபசரிக்க வேண் டும் என்று நடுகல்லைத் தொழுது வழிபட்டாள் (புறம்-306).

**விருந் தெதிர் பெறுகதில் யானே யென்னையும்**
**...................... வேந்தனொடு**
**நாடு தரு விழுப்பகை எய்துக எனவே (புறம். 306, 5-7)**

விருந்தோம்பலாகிய அறத்தைச் செய்தால் தன் கணவன் வெற்றியுடன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கையோடு அவன் நடுகல்லை வழிபட்டாள் என்பதை இதனின்றும் அறியலாம். விருந்தோம்பலாகிய அறம் எத்துணை சிறப்புடையதாக போற்றப்பட்டது என்பது தெரிகிறது.

போருக்குச் சென்றிருந்த வீரன் ஒருவனின் மனைவி தனக்குரிய அறத்தை வீட்டின் கண் இருந்து செய்து வந்தாள். அப்பொழுது அவள் தன் வீட்டிற்கு

விருந்தினராக வந்த பாணனிடம் பொழுது மறைந்தது என்னிடம் இருப்பது பழைய முயல் கறியாக இருந்தாலும் தருகிறேன் அதனை உண்டு இங்கேயே இருந்து செல்க என்று உபசரிக்கிறாள்.

***தீங்கிருந் தீமோ முதுவாய்ப்பாண***

***.........................................***

***வாடாத் தாமரை சூட்டுவ னிணக்கே (புறம். 319, 9 – 15)***

வீரனுடைய மனைவி விருந்தினராக வந்த பாணருக்கும் அப்பாணர்களுடன் வந்த மற்றவர்களுக்கும் விருந்தளிக்கச் சிறந்த உணவுப் பொருள்கள் இல்லை. இருப்பினும் மடுக்கரையில் சிறுவர்கள் பிடித்துக் கொண்டு வந்த உடும்பினது தசையைப் பெய்து சமைக்கப்பட்ட தயிரோடு கூடிய கூழைக் கொடுத்து உண்பிக்கிறாள்.

மகளிரின் மறக்குல மாண்பு

சங்க இலக்கியத்தின் பாடுபொருளாக விளங்குபவை காதலும் வீரமும். புறப்பெண்டிர்க்கு மார்பு காட்டாமை. பகைவர்க்கு முதுகு காட்டாமை ஆகிய இரண்டும் அத்தகைய மறக்குடியில் பிறந்த மகளிரின் வீரம் என்றென்றும் வியப்புத் தருவதாகும். முறத்தால் புலியை ஓட்டிய மறக்குல மகளிர் வாழும் நாடு இது. இம்மறவர் குடியில் பிறந்த மகளிர், தம் புதல்வரைப் போர்க்களத்துக்கு அனுப்புவதும், அவர்கள் போரில் உயிர் துறக்க நேர்ந்த போது, ஈன்ற பொழுதினும் பெரிது மகிழ்வதும் பற்றிப் பல புறநானூற்றுப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

பகைவரோடு போர் புரிவதற்குக் காலையில் போர்க்களத்துக்குப் போனான். மாலையில் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த பலரும் அச்சிறுவன் போருக்குத் தோற்றுப் புறங்காட்டி ஓடிவிட்டான் என்று பேசிக் கொண்

டார்கள். இது கிழவியின் காதுக்கு எட்டியது. அவளுக்குச் சொல்ல முடியாத சினம். அப்படி அவன் இந்த அடர்ந்த போருக்குத் தோற்று ஓடினான் என்றால் அக்கொடியோன் பாலுண்ட என் மார்பை அறுத்து எறிவேன் என்று சினந்தாள். அங்கே கிடந்த வாள் ஒன்றைக் கையில் எடுத்தாள். நேராகப் போர்க்களம் சென்றாள். அங்கே கிடக்கும் பிணங்களைத் தன் கை வாளினால் புரட்டிப் பார்த்துக் கொண்டே போனாள். இரத்த வெள்ளத்தால் சிவந்திருந்த அச்செங் களத்தைத் துழாவினாள். அப்படித் துழாவுகின்றவள். ஓரிடத்தில், பகைவர் எறிந்த வேல் மார்பில் பட்டு உடம்பு சிதைந்து வேறாகித் தன் மகள் இறந்து கிடப்பதைக் கண்டாள், கண்டு சினம் மாறி அவனைப் பெற்றபோது அடைந்த இன்பத்தை விடப் பெரிதும் மகிழ்ந்தாளாம்.

***செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய***
***படுமகன் கிடக்கை காணுஉ***
***ஈன்ற ஞான்றினும் பெரிது வந்தனளே (புறம். 278 : 7 – 9)***

***போரிடும் அறம்***

***புறத்திணைகள் பெரும்பாலும் போரைச் சார்ந்தன***

***மறம் சார்ந்த போரில் அறத்திற்கும் இடமுண்டு***

புறத்திணைகள் ஏழும் போர் வினைகளைக் குறித்தன. எனினும் இவற் றுள் ஒரு பாகுபாடு உண்டு. வெட்சித்திணை ஒரு பெரும்போரைக் குறித்த தன்று. முனையகத்து ஊரவர் ஆநிரை கொள்ளவும் மீட்கவும் உண்டாம் பூசலே ஆண்டு விளைவது. வஞ்சிப்போரைக் கருத்திற்கொண்டு புறப்படும் செயல் மொழிவது. உழிஞை அரண் முற்றுவது. தும்பையே போரின் செறிவுறுநிலை குறிப்பது. வாகை வெற்றி குறிப்பது. காஞ்சி, போரில் வீழ்ந்தார் குறித்த இழிவு மொழிவது. பாடாண் வெற்றி பெற்றவரின் பண்பு நலன் போற்றிப்பாடுவது.[28]

பாசறை

1. வேந்தனின் ஊர்ப்புறத்தே இயற்கையாய் அமைந்த அரண்களை யுடையது. பகைவர் கண்களுக்கு எளிதில் புலப்படாதது, உள்ளே யிருப்போருக்குப் பகைவரைக் காட்டும் இயல்பினது, களிறும், மாவும் தேரும் படைவீரரும் ஒருங்கே தங்கியிருக்குமளவிற்குப் பரந்த இடத்திணையுடையது என அறியலாம்.

2. இத்தகு பாசறையில் வேந்தனும் வீரரும் தங்கியிருப்பர். பகலில் போரிடுவதும் இரவில் போரை நிறுத்திப் பாசறையில் ஓய்வு கொள்வதும் பண்டையோர் போர் நெறி, இரவின் வேந்தன் துயில் கொள்ளாது. புண்பட்ட வீரர்களுக்கு ஆறுதல் கூறி வரும் பாசறை வாழ்வினை நெடுநல்வாடை சிறக்க உரைத்துள்ளது.

3. தூது சென்ற புலவர் தம் தூது பயனற்றுப் போர் மூண்டபொழுது, இரு வேந்தரையும், ஒற்றுமைப்படுத்தும் முயற்சினையும் மேற் கொண்டனர்.

4. தம்மோடு ஒப்பாரிடம் மட்டுமே வீரர் போர் மேற்கொள்வர். தம் வலிமை கண்டு அஞ்சி, போருடற்றத் துணியாத வேந்தரிடம் போரிடார். அவ்வாறு போரிடத் துணிந்தாலும் அது அறனன்று என எடுத்துக்கூறிப் போரைத் தவிர்த்தனர் புலவர்.

5. தம்முள் மாறுபட்ட இருவேந்தர் போரிடத் துணிந்தபோர் முற்றியும் போர் புரியாமல் காவல் கடத்தினால் அதனால் மக்கள் துன்புறுவர். இவ்வேளைகளில் புலவர் அறிவுரை கூறி அமைதிக்கோ சுடு போருடற்றவோ வழி செய்வர்.

6. போர் மேற்கொண்டு பாசறையிலேயே தம் வாழ்நாளைக் கழிக்கும் வேந்தர்க்கு இல்லறத்தை நினைவுபடுத்திப் போரை விரைவில் முடிக்கத் தூண்டுவர்.

போரினைப் புலவர் நேரடியாகக் கண்டு பாடினர். புறமுதுகு காட்டாமை வீரமரணமெய்துதல் இவையே வாழ்வின் கொள்கையென வீரரிடையே நிலை பெறச் செய்தனர். [29]

## போருக்கான காரணங்கள்

போர் என்பது நாடுகளுக்கிடையே மாறாத ஒன்று என்பது தான் என்பார். என்.சுப்பிரமணியன் போருக்கான காரணங்களை அறிஞர் பலரும் உரைத்துள்ளனர். [30]

பழங்காலத்தில் போர் தவிர்க்க இயலாததாகவும் காலத்தின் தேவையாகவும் அமைந்திருந்தது. எனவே மூவேந்தர்களும் தங்களுக்குள் போருடற்றிக் கொண்டு மாண்டது வரலாற்றில் தவிர்க்க முடியாது. மூவேந்தரும் போருடற்றி அழிந்ததைக் குறை கூறுவோரும் உண்டு. மூவேந்தரும் போர் மேற்கொண்டதற்கான காரணங்களைப் பின்வருமாறு கூறலாம்.

1. தன்னாட்டில் வாழும் குடிகள் வளத்துடன் வாழ்வதற்குப் போதிய இட மின்மையாலும், இடம் சிறிதென்றும் ஊக்க மேலிட்டினாலும் வேந்தர் போர் தொடுப்பர் என்பதனை,

**எஞ்சாமண்ணசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சுதகத் தலைச்சென்ற றடல் குறித் தன்றே**

என்பர் தொல்காப்பியர்.

2. அரசுரிமைக்குத் தடையேற்படும் பொழுதும் போர் நிகழ்வதுண்டு. உருவப்ப நேர் இளஞ்சேட் சென்னியின் மகன் கரிகாற் பெருவளத் தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று அரசுரிமையைப் பெறுவதற்காகப் போருடற்றினான். *(சிலம்பு-165:1)*

3. இளவரசன் தமக்கு முறையாக வரும் அரசுரிமையை வேந்தர் தருமுன்னரே ஆட்சியுரிமை பெறுவதற்குப் போர் மேற்கொள்வ துண்டு.

4. தன் உரிமையை நிலைநாட்டுவதற்கு அல்லது பெறுவதற்கு தாயத் தாருடன் போர் நிகழ்த்துவதுண்டு. நலங்கிள்ளிக்கும், நெடுங் கிள்ளிக்கும் நடந்த போர் இதற்குச் சான்றாகும்.

வெற்றி பெற்ற வேந்த நெடுஞ்செழியன் வேந்தன் பெருமை கருதித் தான் பெற்ற வெற்றியைத் தன் பெயரோடு இணைத்து வழங்குவது சங்ககால வேந்தர் மரபு. [31]

1. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்
2. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
3. கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை
4. கானப்போர் எயில் கடந்த உக்கிரப்பெருவழுதி
5. செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி
6. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை
7. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

படைச்செலவு

பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் வஞ்சிப் பூச்சூடிப் படை நடத்திச் செல்வான். அவ்வாறு சென்ற படையினைப் புற நானூறு காட்டுகிறது. முன்னால் சென்ற படை வீரர்கள் பனம் நுங்கினை உண்ட தாகவும், இடையில் சென்ற படைவீரர்கள் பனம் பழத்தினை உண்டதாகவும் இறுதியில் சென்ற வீரர்கள் பனம் கிழங்கினை உண்டதாகவும் ஆலத்தூர் கிழார் குறிப்பிடுகின்றார். [32]

அரண்மனையில் வேந்தனைப் பிரிந்து துயருறும் அரசியின் இல் வாழ்க்கைக் காட்டிப் பின்னர் இல்ல நினைவின்றி நள்ளிரவிலும் படை மற வரைக் கண்டு பேசும் பாசறை வாழ்வைக் குறிப்பிட்டு அரசன் அரசி இரு வருக்குமுள்ள உணர்வு வேறுபாட்டைக் காட்டியிருப்பது. நள்ளிரவில் குளிர் காற்றையும் மழைத் தூறலையும் பொருட்படுத்தாமல் வாளை இடையிலே யுடைய தறுகண்மையுடைய இளைய வீரனின் தோள்மேல் வலக்கையையும் - இடக்கையால் குளிர்காற்றால் அலைப்புறும் தன் ஆடையைப் பிடித்துக் கொண்டு முன்னே வீரனொருவன் வெப்பந்தளிரைக் காட்டிய வேலை எடுத்துச் செல்ல பின்னே வெண்கொற்றக்குடை பிடித்துவர ஒவ்வொரு வீரனையும் படைத்தவன் அறிமுகப்படுத்த ஆறுதல் கூறிச் செல்லும் பாண்டியன் பாசறை வாழ்வின்

**நள்ளின் யாமத்தும் பள்ளி கொள்ளான்**
**சிலரொடு திரி தரும் வேந்தன்**
**பலரொடு முரணிய பாசறைத் தொழிலே**

என சிறப்பித்துரைப்பர் நக்கீரர்.

கடற்போர்

கடலில் கலம் செலுத்துவதில் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தனர் தமிழர்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கிரேக்க உரோம நாடுகளுடன் வாணிகத் தொடர்பினை மேற்கொண்டிருந்தனர். வாணிகத்திற்காகக் கட்டப் பட்ட கலங்கள் பின்னர்ப் போர்களுக்கும் பயன்படுத்தப் பெற்றன. சங்ககால வேந்தரிடம் மூன்று வகையான களங்கள் இருந்தாகக் கூறுவர்.

கரிகாற் பெருவளத்தான் இலங்கை மீது படையெடுத்துப் பன்னிராயிரம் சிங்களம் வரை சிறைகொணர்ந்து, காவிரிக்குக் கரைகட்டும் பணியில் ஈடு படுத்தினான் எனக் குறிப்பர். கே.கே.பிள்ளை, சேரன் செங்குட்டுவன் கடலின் நடுவில் கப்பலைச் செலுத்தித் தன் ஆட்சிக்கு இடையூறு செய்து வந்த கடம்பர் களைத் தொலைத்தான். இதனால் இவன் சேரமான் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனச் சிறப்பித்துரைக்கப் பெற்றான். கலங்கள் கடலில் செல் லும்போது பிற கலங்கள் செல்ல அஞ்சும் நிலையினை,

**சினமிகு தாளை வானவன் குடகடற்**

**பொலந்தரு நாவா யோட்டிய வவ்வழிப் (புறம். 126 : 14-16)**

செங்குட்டுவன் மேற்கொண்ட கடற்போர்களை இலக்கியங்கள் சிறக்க கூறுகின்றன.

எல்லை அடிப்படையில் பிரிவு

உரோம் நாடு செல்வத்தில் 50 கோடி செஸ்டர்கள் ஆண்டுதோறும் இருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் வாங்கச் செலவழிக்கின்றது என்ற குறிப்பு அன்றைய தமிழ்நாடு அயல்நாட்டு வாணிகத்தால் செழுமை யுற்று இருந்ததைக் காட்டுவதாகும். ஆனால் இச்செழுமை அன்று வாழ்ந்த தமிழ் மக்கள் அனைவரிடமும் காணப்பட்டதா என்பதே கேள்வி.

அக்காலப் புலவர்களில் பல தொழிலினரும் கொள்கையினரும் நிலையினரும் பெண்களும் இருந்துள்ளமையே இதற்குச் சான்றாகும்.

### தொழிற்கல்வி

அன்று தொழிற் கல்விக் குரியனவாயிருந்தன, மருத்துவம், வாணிகம், கட்டிடக்கலை, வானநூல், நெய்தல் கலை, உழவுத்தொழில், படைக்கலம் பயிறல், ஆட்சியியல், மனையியல், ஓவியக்கலை, படிமக்கலை (சிற்பம்) ஆசிரியரியல், புலவரியல் முதலியன என்று தமிழ் இலக்கியக் குறிப்புக்களைக் கொண்டு அறிதல் இயலுகின்றது. தமிழ்நாட்டு அறிவியல் கலையியல் அறிஞர்கட்கும் வெளிநாட்டு அறிவியல் கலையியல் அறிஞர்கட்கும் நெருங்கிய தொடர்பு இருந்துள்ளது. இருசாராரும் இங்கும் அங்கும் கலந்து உறவாடிப் பழகியுள்ளனர்.

### சேரிகள்

சோழர் துறைமுகப்பட்டினமான காவிரிப்பூம்பட்டினத்தை அடுத்து இரண்டு சேரிகள் இருந்தன. அவற்றுள் ஒன்று மாலைச்சேரி என்பது, சோழ நாட்டுடன் கடல் வாணிகம் செய்ய வந்த அயல்நாட்டு வணிகர்கள் தங்கியிருந்த குடியிருப்பு மாலைச்சேரி எனப்பட்டது (காதை அடி-131).

### ஓதற்பிரிவு

கல்வியின் பொருட்டுத் தலைவன் பிரிவான் என்பதனால் தலைவன் கல்வி பெற்று இதற்கு முன்பே அவன் நல்லாசிரியனை அடைந்து அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு குறிக்கோள் பொருள்களை உணர்த்தும் நூல்களையெல்லாம் முறைப்படி கற்றுத்துறை போயினர். ஆராய்ச்சித்திறன் மிக்க அறிஞர்கள் வெளிநாடு சென்று பல அறிவியல் துறைகளில் பொறி நுட்பத் துறைகளில் தொழில் நுணுக்கத் துறைகளிலும் மேலும் கற்று வருவதைக் காண முடிகிறது. ஓதற்பிரிவு என்பதற்கு இளம்பூரணர் நமது நாட்டகத்து வழக்காது

பிற நாட்டகத்து வழங்கும் நூல் இன்று வெளிநாடுகளுக்குச் சென்று கல்வி பெரும் வழக்கத்தை நினைவூட்டுகின்றது என்பர். [33]

**கைதொழு மரபில் கடவுள் சான்ற**

**செய்வினை மருங்குச் சென்றோர்**

என்று குறிப்பிடுவர்.

தூதுப்பிரிவு

ஓர் அரசனுக்கு ஏதேனும் ஒரு காரணத்தால் விபத்து நேருமாயின் அதனை நீக்குவதற்குப் பிரிவான் என்று இறையனர் களவியாசிரியர் கூறுகிறார். இரண்டாவது உலகப் பெரும்போர் நடைபெற்ற பொழுது போர்க் காரணமாக எத்தனையோ வீரர்கள் பல்வேறு போர்த் துறைகளில் பெரிய பெரிய பதவி களை வகித்தனர். அவர்கள் அவசியத்தின் நிமித்தம் அடிக்கடி தம் நாட்டை விட்டு அயல்நாடு போக வேண்டி வந்தது. இத்தகைய நிகழ்ச்சிகளே வேந்தர்க் குற்றுழிப் பிரியும் பிரிவுகளாகும்.

கடல் கடந்து அயல்நாட்டுக்குப் பிரிதலும் உண்டு. அவர் பிரிந்து செல் லுங்கால் தம்மொடு மகளிரை அழைத்துச் செல்லவில்லை. ஆடவர் மகளி ரோடு கடல் கடந்து சென்றால் சென்ற நாட்டிலேயே தங்கிவிடக் கூடும் என்றும் மகளிர் இருப்பின் அவரை நாடி ஆடவர் மீள்வர் என்றும் மண்ணை மறவா நிலையைப் போற்றும் வகையால் இம்முறையை வகுத்தனர் என்றும் கொள்ள லாம்.

பொருள்வயின் பிரிதலில் கூடப் பொதுவாக எல்லாப் பகுதிகளிலும் பெரும்பாலும் செட்டிநாட்டுப் பகுதிகளிலும் பணம் ஈட்டுவதற்காகப் பலர் வெளிநாடு செல்வதைக் காண முடிகிறது. ஏராளமான செல்வத்தில் புரளும்

செல்வர்களும் பொருள் தேடலின் நிமித்தம் வெளிநாடு செல்வதைக் காண்கின்றோம்.

வெளிநாட்டு வர்த்தகத்திற்கே குறைவில்லை. குடநாட்டார் தாம் விளைத்த மிளகைக் கப்பல்களிலேற்றிப் பிறவிடங்களுக்கனுப்பி வந்தனர். மேனாடுகளிலிருந்து ஏராளமான குதிரைகள் தமிழ் நாட்டுத் துறைமுகங்களில் வந்திறங்கின. ஈழத்திலிருந்தும் கடாரத்திலிருந்தும் (பர்மா) நுகரும் பண்டங்கள் வந்திறங்கின. சீனம் முதலிய கீழ் தேசங்களிலிருந்து, கற்பூரம், பன்னீர், குங்குமம் முதலியவைகளும் மேல் தேசங்களிலிருந்து மதுபான வகைகளும் இறக்குமதியாயின. தமிழ்நாட்டிலிருந்தோ பல வகையான வாசனைச் சரக்குகள் மிளகு, மல்லி வஸ்திரங்கள், பட்டுகள், முத்து, பவளம் முதலிய பல அரிய பண்டங்கள் அக்காலம் நாகரிகமடைந்துள்ள சகல நாடுகளுக்கும் ஏற்றுமதியாகி வந்தன.

தமிழ்நாட்டு முக்கிய துறைமுகங்களாகிய காவிரிப்பூம்பட்டினம் தொண்டி, முசிறி, கொற்கை முதலிய துறைகளில் தமிழர் மரக்கலங்களும் பிற நாட்டு மரக்கலங்களும் பாய் மரங்களையுயர்த்தி நிற்பன. காடுகள் போன்று தோன்றுவன. அன்றியும் கப்பல்களில் ஏற்றுவதற்குக் காத்திருக்கும் சரக்கு மூட்டைகளும் இறக்குமதியான சரக்குகளும் துறைமுகங்களில் வெகு உயரம் அடுக்கப்பட்டுக் குவிந்து கிடக்கும். இப்பொதிகளிலெல்லாம் அவ்வநாட்டு அரசர் முத்திரை பொறிக்கப்பட்டிருக்கும்.

கடலில் செல்லும் மரக்கலங்களுக்கு வழிகாட்டுதற்கும் துறைமுகங்களைக் காட்டுதற்கும், கடற்கரைகளில் ஆங்காங்கே தீபஸ்தம்பங்கள் நாட்டப்பட்டிருந்தன. கலங்கரை விளக்கங்கள் இரவெலாம் இடைவிடாது எரிந்து வந்தனபோலும். அத்துறைமுகப் பட்டணங்களிலும் அரசர் தலைநகரங்

களிலும் பிறநாட்டு வர்த்தகங்களும் தொழிலினருமாகிய பல ஜாதியர் வசித்து வந்தனர். யவனர் (கிரேக்கர், ரோமர் முதலியவர்) சோழகர் (அராபியர்) முதலியவரும் பிறநாட்டாரும் வெவ்வேறு தெருக்களில் வசித்து வந்தனர்.

மரக்கலம், கடல் வியாபாரம்-மதுரை

மேகம் படிந்த பெரிதாகிய மூன்று நீர்மையையுடைய அச்சம் நிலை பெற்ற கரிய கடலிடத்துக் கூடிய காற்றாலே வளைகின்ற திரையைக் குறுக்கே பிளந்தோடும்படி பாய் விரிக்கப்பட்டு இனிய ஓசையுடைய முரசு முழங்கா நிற்க, பொன் மிகுதற்குக் காரணமாகி சீரிய சரக்குகளை நாட்டில் உள்ளோர் நுகரும்படியாகக் கரையைச் சேர வாணிகம் வாய்த்து வந்த இழிதலைச் செய்யும் நெடிய கொடி பாய்மரத்தின் மேலேயாரும் இயல்பினையுடைய மரக்கலம் என்பது,

**விளைந்து முதிர்ந்த விழுமுத்தி**
**னிலங்குவளை யிருந்சேரிக்**
**கட்கொண்டிக் குடிப்பாக்கத்து**
**நற்கொற்கை**

சூல் முற்றி ஒளி முதிர்ந்த சீரிய முத்தியையும் விளங்குகின்ற சங்கினை யுடைய பெரிய சங்கு குளிப்பாரிருப்பினையும் கள்ளாகிய உணவினையுடைத் தாகிய இழிந்த குடிகளையுடைய சீறூர்களையுமுடைய நன்றாகிய கொற்கை,

**விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்**
**நனந்தலைத் தோத்து நன்கல னுய்ம்மார்**

சீரிய மரக்கலங்களைச் செலுத்தும் மரக்கல மீகாமர் அகன்ற இடத்தை யுடைய யவன தேசத்தினின்றும் இவ்விடத்துண்டாகிய பேரணிகலன்களை

ஆண்டுச் செலுத்துவதற்குப் பலரும் கூடிச் சேரக் கொண்டுவந்த குதிரைகள் என்பர். [34]

### நாட்டுபிரிவு

எல்லைகளுக்குட்பட்ட நாடு தமிழ் நாடென வழங்கித் தமிழ் மூவேந்த ரென அழைக்கப்பட்ட சேர, சோழ, பாண்டியருடைய ஆதீனத்திலிருந்தது.

### சேரநாடு

சேரர் பனந்தாரும் விற்கொடியுமுடையார். தற்காலக் கொச்சி, கோயம் புத்தூர், நீலகிரி, கோலார் வரையுள்ள மைசூர் நாடு, சேலம், சேர மன்னர் ஆதீனத்திலிருந்தன. பொருணையாற்றங்கறையிலிருந்த கருவூர் (வஞ்சி யெனவுமழைக்கப்படும்) இதன் முக்கிய தலைநகரி, தொண்டி, முசிறி முதலி யன துறைமுகப்பட்டணங்களாக இருந்தன.

### சோழநாடு

சோழர் ஆத்திமாலையும் புலிக்கொடியுமுடையார். தற்காலத் திருச்சி ராப்பள்ளி, தஞ்சாவூர், புதுக்கோட்டை, தென்ஆற்காடு, செங்கற்பட்டு, நெல்லூர் முதலிய ஜில்லாக்கள் இவராதீனத்திலிருந்தன. காவிரியாற்றின் சங்க முகத்திலிருந்த காவிரிப்பூட்பட்டினமும் உறையூரும், இந்நாட்டின் தலைநகர் களாய் வெவ்வேறு காலங்களிலிருந்தன.

### பாண்டியநாடு

பாண்டியர் வேம்பு மாலையும் மீனக் கொடியுமுடையார். தற்காலத் திருநெல்வேலி, தென் திருவாங்கூர், இராமநாதபுரம், மதுரை மாவட்டங்கள் இவர் ஆதீனத்திலிருந்தன. வைகை ஆற்றின் கரையடுத்து மதுரை இவர் தலை நகராயிருந்தது. கொற்கை இவர்க்கு முக்கிய துறைமுகம்.

சேர, சோழ, பாண்டியர் போர் செய்யப்போகும் காலங்களில் இம்மலை நாட்டுச் சிற்றரசர் துணை வேண்டிச் செல்வதும் துணை செய்யுமாறு அக்குறு நில மன்னருக்குப் பொருள் கொடுப்பதும் வழக்கமாயிருந்தது.

### தமிழ்நாட்டு வியாபாரம்

நாட்டின் வளம் பெருகுவதற்கான சாதனங்களைக் கையாடி வந்தனர். பிற நாட்டரசர் படையெடுத்து வருவாரெனும் பயமின்றிக் குடிகள் உயிர் வாழுமாறு தக்க புஜ பலமும் ராணுவ பலமும் உடையவராயிருந்தனர். செல்வ வளர்ச்சிக்கேதுவான பயிர்த்தொழில், கைத்தொழில், உள்நாட்டுப் பிறநாட்டு வியாபாரம் முதலியன செழித்தோங்குதற்கேதுவாகத் தேசத்தில் சமாதானம் நிலைத்திருக்குமாறு செய்தனர்.

### 1. தூதர்

இவர் பிறநாட்டரசரோடு சந்து செய்யும் காலங்களில் அவ்வந்நாடு களுக்கேகி அரசரைக் கண்டு பேசி வருபவர்.

### 2. ஒற்றர்

இவர் பிறநாட்டில் நடக்கும் காரியங்களை உடனுக்குடனே தம்மரச ருக்கு அறிவித்து வருபவர்.

தமிழ்நாட்டு வியாபாரப் பிரசித்தியைப் பற்றி அக்கால மேனாட்டுச் சரிதாசிரியர் பலவிடங்களில் கூறியிருக்கின்றனர். அவற்றின்படி கி.பி.18ஆம் யாண்டிலிருந்த ஸ்ட்ராபோ என்பவர் பாரமேற்றி இந்தியாவிற்குச் செல்லும் நூற்றிருபது கப்பல்களைத் தாம் கண்டதாகக் கூறுகின்றார். ப்ளினி யென்பவர் (கி.பி.78 இந்தியாவிலிருந்து ரோம ராஜ்யத்திற்கு வருடந்தோறும் ஏற்றுமதி யாகும் சரக்குகளின் விலை ஐந்து கோடியே ஐம்பது லவிம்ஸெஸ்டர்கள் (9,86,979 பவுன்) என எழுதுகிறார். பெரிப்ளஸ் எனும் நூலில் தொண்டி, முசிறி

எனும் துறைமுகங்களில் இந்திய வியாபாரக் கப்பல்கள் நிறைந்திருக்கும். இங்கு மிளகு வியாபாரம் அதிகம். பாண்டிய ராஜ்யத்தைச் சேர்ந்த கொற்கையில் முத்துக் குளிக்கிறார்கள். அடிமைகளும் கைதிகளுமே முத்துக் குளிக்க அனுப் பப்படுகின்றனர். அங்கே முத்துக்களைப் பங்கிட்டுத் துவாரமிட்டு ஏற்றுமதி செய்கின்றனர்.

இதற்கு சமீபத்தில் நேர்த்தியான மஸ்லீன் நெசவு செய்யப்பட்டு ஏற்று மதியாகிறது என்கின்றனர். கி.மு. முதல் நூற்றாண்டிலேயே பாண்டியராஜனும் அக்கால ரோமராயனாயிருந்த அகஸ்து இராயனும் உடன்படிக்கை செய்து சிநேகிதராயிருந்தனர். ரோம போர்ச் சேவகர் தமிழரசரிடம் ராணுவ வீரராயிருந் தனர். வடவேங்கடம் தென்குமரி இடைப்பட்ட தமிழக எல்லைக்குள் நிலை யான பாலை இல்லை. எனினும் பல பாலைப் பாடல்களில் நிலையாய சுரம் புனையப்படுதலைக் கற்கின்றோம். இச்சுரங்கள் வேங்கடத்திற்கு வடபால் உள்ள பிறநாட்டுப் பகுதிகளாகும்.

**வில்லலைத் துண்ணும் வல்லாண் வாழ்க்கைத்**
**தமிழ்கெழு மூவர் காக்கும்**
**மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்தே (அகம். 31 : 13 – 15)**

**செந்நுதல் யானை வேங்கடம் தழீஇ**
**வெம்முனை அருஞ்சுரம் இறந்தோர் (அகம். 265 : 21 – 23)**

தமிழ்மொழி வழங்காத அயல்நாட்டுச் சுரங்களைத் தலைவன் பொரு ளீட்டுவான். கடந்து செல்கின்றான். மாற்றுமொழியும் வேற்றுநாடும் புதிய பாலை வழியும் காதலியின் அவலத்திற்கு ஏதுவாகின்றன. வேங்கடம் என்ற சொற்றானும் வேம்+கடம் எனப் புரியுற்று, வேகும் சுரம் (பாலை நிலம்) என்று பொருள் தருதல் காண்க. தமிழ் கூறு நல்லுலகத்திணையும் அதன் ஒழுக

லாற்றையுமே சொல்லுவதாக வரம்பு கொண்டமையின் தொல்காப்பியர் தமிழக எல்லைக்குட்பட்ட நிலப்பாங்கினையும் பருவப்பாங்கினையுமே குறிப்பாராயினர். நம் எல்லைக்குள் முதுவேனில் தோன்றுதலின் பாலைக்குப் பெரும்பொழுது வரைந்தார். சுரப்பகுதியின்மையின் நிலம் என ஒன்று வரையா தமைந்தார்.

தமிழனத்தார் பலர் கடலோடிகளாகவும் வணிகப் பரதர்களாகவும் தொன்றுமுதிர் இந்தமிழ் ஞாலத்தில் விளங்கினர். கண்ணகியின் தந்தை மாநாய் கன் கடல் வணிகன் எனவும், கோவலனது தகப்பன் மாசாத்துவானை நில வணிகன் எனவும் கருத இடமுண்டு. தமிழகம் கடலகமாக இருந்தும் தமிழர் கள் கடலர்களாக இருந்தும் ''வருணன் மேய பெருமணல் உலகம்'' என்று தொல் காப்பியம் கடற்றிணை (நெய்தற்றிணை) 950 அகத்திணையின் காதல னது தனிக் கடற்செலவை நிற்பித்திருந்தும், ஏனோ சங்கச் சான்றோர்கள் பாலைத்திணையில் நீர்வழிப் பிரிவுகளைப் பாடிற்றிலர்.[35] அப்பிரிவுக்கு ஆற்றாத தலைவியர் தம் இரங்கல்களை நெய்தல் திணையிலும், கடல்வினை முற்றிய தலைவர் தம் வரவுகளை நெய்தல் திணையிலும், கடல்வினை முற்றிய தலைவர் தம் வரவுகளை முல்லைத்திணையிலும் அவ்வழிப் புணர்ச்சிகளைக் குறிஞ்சித் திணையிலும் தொடர்ந்து பாடினர். இவற்றைச் சங்க இலக்கியத்தில் வரும் பாலைத்திணைச் செய்யுட்களும் வரவுகளையும் புணர்வுகளையும் கூறுவன. அகத்திணை என்பது நிலத்திணையாகவே உள்ளது.

நிலத்திணையில் தேர்ப்பாகன் கூறப்படுகின்றான். இந்நீர்த்திணையில் கப்பலோட்டியை இளநாகனார் காட்டுகின்றார். நிலப்பாலையில் முதுவேனி லும் நண்பகலும் வரும் என்பர். [36]

தொகுப்புரை

புறத்திணையியலில் போர் பற்றிய செய்திகள் போர் என்பது நாடுகளுக் கிடையே மாறாத ஒன்று பழங்காலத்தில் போர் தவிர்க்க இயலாததாகவும் காலத்தின் தேவையாகவும் அமைந்திருந்தது. எனவே, மூவேந்தர்களும் தங்களுக்குள் போரிட்டுக்கொண்டு மாண்டது வரலாற்றில் தவிர்க்க முடியாதது.

தலைவனின் பரத்தமையால் உண்டான பிரிவுத்துயரைவிட அலர்வாய்ப் பெண்டிரின் தூற்றலே வேதனையை மிகுவிக்கின்றது. இவ்வலர் அடுத்தவரின் செயலை அசைபோடும் அக்காலச் சமுதாயப் போக்கையே காட்டுகிறது.

பொருள்வயின் பிரிவில் குடிமை நலம் காக்கவும், அறப்பணி புரியவும், வேண்டும் ஆக்கம் தேடலுக்குப் புரிதலாகும். பொதுநலப் பிரிவில் காலில் பிரிவு, கலத்தின் பிரிவு, எல்லை அடிப்படையில் பிரிதல் ஆகியவை கொண் டுள்ளன. காலிற் பிரிவுக்குச் செல்லும்போது தலைவனுடன் தலைவியும் உடன் செல்வது உண்டு. மரக்கலத்தில் கடல் கடந்து செல்லும் வழக்கம் பெண்களுக்கு இல்லை என்பர். கலத்தில் பிரிவில் பெண்களை உடன் அழைத்துச் செல்கின்ற னர். வேறு நாடுகளிலும் தலைவன் தலைவியை விட்டு நீண்ட நாட்கள் தங்கி விடுகிறான். எல்லை அடிப்படையில் தலைவியை விட்டுச் செல்வதைக் காட்டுகின்றன.

சான்றெண் விளக்கம்

1. முனைவர் நிர்மலா மோகன், சங்கச் சான்றோர் ஆளுமைத்திறன், ப. 68
2. மேலது, ப. 70
3. கி. இராசா, தொல்காப்பியமும் இலக்கிய வகை வளர்ச்சியும், ப. 48
4. இராணி, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப. 88
5. ம.ரா.போ. குருசாமி, சங்க காலம், ப. 220
6. குழந்தை புலவர், தொல்காப்பியர் காலத் தமிழர், ப. 120
7. கு.வெ. பாலசுப்பிரமணியம், சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு, ப. 80
8. மேலது, ப. 40
9. ஆ. வேலுப்பிள்ளை, சங்க இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 12
10. தி.வே. கோபாலையர், சீவக சிந்தாமணி, ப. 57
11. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், இராமாயணம், ப. 70
12. சா. கிருட்டினமூர்த்தி, தமிழிலக்கிய வகைமையியல், ப. 249
13. மேலது, ப. 156
14. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்வியல், ப. 157
15. மேலது, ப. 88
16. மேலது, ப. 150
17. மேலது, ப. 157
18. தமிழண்ணல், தொல்காப்பியம் பொருளதிகாரம், ப. 88
19. மேலது, ப. 99
20. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 250
21. மேலது, ப. 220
22. தி.சு. பாலசந்திரன், சங்க இலக்கிய கட்டுரைகள், ப. 70
23. சிலம்பு நா. செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள் சமூக மானுடவியல் ஆய்வு, ப. 50

24. புலவர் சே. மாணிக்கம், திருக்குறள், ப. 20

25. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 155

26. வ.சுப. மாணிக்கம், சங்க இலக்கிய ஆய்வுகள். ப. 80

27. சிலம்பு நா. செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள் சமூக மானுடவியல் ஆய்வு, ப. 50

28. செ. பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 58

29. மேலது, ப. 70

30. மேலது, ப. 58

31. மேலது, ப. 40

32. ஞா.சா. துரைசாமி பிள்ளை, சங்கத் தமிவ் இலக்கியம், ப. 106

33. மேலது, ப. 120

34. மேலது, ப. 96

35. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 155

36. கு.வெ. பாலசுப்பிரமணியம், சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு, ப. 80

இயல் ஐந்து

# சங்க இலக்கியப் பிரிவுகள் காட்டும் சமுதாயம்

சமுதாயம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் இனத்தவன் தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்ள ஏற்படுத்திக் கொண்ட ஒரு கூட்டமைப்பாகும். மனிதன் தான் வாழும் சூழலில் சமுதாயத்தில் நிலவும் பண்பாட்டைப் பெறுகின்றான். சமுதாய நடத்தையின் அடிப்படையில் மனிதச் சமுதாய உறவு முறைகள் அமைகின்றன. பல இல்லங்கள் இணைந்ததே சமுதாயமாகும். தனிமனிதனின் பண்பாடே சமுதாயப் பண்பாடாகவும் அறமாகவும் பரவுகிறது. தொல்காப்பியம் காலம் முதல் சங்க இலக்கிய காலம் வரை அறத்தை அடிப்படையாகக் கொண்டே நூல்கள் எழுதப்பட்டன.

## 1. அந்தணர் (பிராமணர்)

நூல்-கரகம்,முக்கோல்,மனை அந்தணர்க்கு உரியன - மனுதர்மம் வேதம் ஓதல், வேதம் ஓதுவித்தல், வேள்வி இயற்றல், ஈதல், ஏற்றல் ஆகியன அந்தணர்க்கு உரியன.

## 2. அரசர் (சத்திரியர்)

படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர் ஆகியன அரசர்க்குரியன - உலகை ஆளுதல், மக்களைக் காத்தல், கொடை, வேள்வி பயிற்றுவித்தல் எவற்றாலும் ஈர்க்கப்படாத மனத்தில் இருத்தல் ஆகியன அரசர்க்கு உரியன.

### 3.வணிகர் (வைசிகர்)

வணிகர் வணிக வாழ்க்கையை மேற்கொள்வர், எண் வகை உணவு களை உண்டாக்கும் தொழிலும், வணிகர்க்கு உரியது, வைசியர்க்கு கண்ணியம் உரியன அரசர் வணிகர் இருவர் படைக்கல வகையைப் பெறுவர். செல்வம் தேடுதல், கடல்வினை பொருள் முதலியன கொண்டு வணிகம் செய்தல், தானம் செய்தல் ஆரியரைக் காத்தல் பயிர்த்தொழில் செய்தல் ஆகியன வணி கர்க்கு உரியன.

### 4. வேளாளர் (நாத்திகர்)

பயிர்த்தொழில் செய்து வாழ்தல் அல்லது பிறவகைத் தொழில் வேளாளர்க்கு இல்லை. பிராமணர், சத்திரியன் வைசியர் ஆகிய மூவர்க்கும் மனம் கோணாமல் பொறாமை இன்றி பணி புரிதல் வேளாளர்க்கு உரியன.

தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் சில சமூகப் பிரிவுகள் நிலவி இருந் தன. ஆயர், வேட்டுவர், கிழவர் என அவர்களை நில அடிப்படையில் பாகு படுத்தித் தொல்காப்பியர் கூறியுள்ளார். ஆயர் முல்லை நிலத்திலும், வேட்டுவர் மலை நிலத்திலும் கிழவர் மருத நிலத்திலும் வாழ்ந்துள்ளனர். இப்பகுப்பு முறையே அன்றி, அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் அறிவன் எனப்படும் கணியர், தாபதர், வீரர் ஆகிய பிரிவுகளையும் புறத்திணை இயலில் தொல்காப் பியர் கட்டியுள்ளார். மேலும் பாணர், கூத்தர், விரலியர் (பொருள்) முதலிய தொல்குடிப் பிரிவினரும் தொல்காப்பியத்துள் இடம் பெற்று உள்ளனர்.[1]

### வாழ்வியல்

சங்க காலம் நிலவுடைமையை அடிப்படையாகக் கொண்ட உடைமைச் சமுதாயமாக மாறிய நிலையில் இனக்குழு வாழ்வில் எச்சங்களும் நிலவி யுள்ளன.

குடும்பங்கள் உடைமைப் பாதுகாப்பின் அங்கமாக அமைய வேந்து விடு தொழிலும் பொருள்வயின் பிரிவும் பொருளீட்டலுக்கான ஆதாரங்களாக அமைகின்றன. ஆண், பெண் எனும் இருவரில் ஆணே பொருளாதார ஈட்டலுக் காக மாறுகின்றான். ஆண் வாரிசு என்பதையே முதன்மைப்படுத்தியுள்ளனர். மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே என்பது பெண்ணின் இரண்டாம் நிலைத் தன்மையும் பெண் ஆணைச் சார்ந்தே வாழ வேண்டிய சார்பு நிலையும் வெளிப்படுகின்றது.

தொல்காப்பியர் பிரிவைப் பாலை என்பர். பாலை என்பது ஓர் ஒழுக்கம். அது பிரிவு என்றும் ஒழுக்கத்தைச் சுட்டும். பிரிந்திருக்கும் நிலையிலும் ஒழுக் கத்தைக் கடைப்பிடிப்பது பாலை ஒழுக்கமாகும். பாலையில் பிரிவு இல்லை யென்றால் அன்பு விரியாது, வெற்றி வாராது.

1. இடத்தையும் காலத்தையும் ஒட்டி முதற்பொருள் என்றும் கடவுள் முதல் தொழில் துறையான பொருண்மைகளை பின்பற்றிக் கருப் பொருள் என்றும், கூடல் முதல் பிரிவு ஈறாக உள்ள நிகழ்வுக்களைப் பொருத்து உரிப்பொருள் என்றும் வகுக்கப்பட்டுள்ளன.

2. சினம் மிகுந்த கொற்றவைத் தெய்வம், நன்மதியம், வழிப்போக்க ரிடம் கொன்று பரிக்கப்பட்ட உடைமை, கடின வாழ்க்கையோடு ஒன்றிய காட்டு விலங்கு, வறண்ட நிலத்திலும் தோன்றும் தாவரம், உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பும் பறைக்கருவி நிலையான தொழிலான நிரை கவர்தல் போன்ற கூறுகள் பாலை நில மக்க ளுக்கே உரியவை.

3. நேரிய பின்னணியைக் கொண்ட சங்ககாலச் சமுதாயத்தில் கடமையும், பொறுப்பும் மிகுந்த படைப்பாளிகளாகப் புலவர் பெருமக்கள் வாழ்ந்துள்ளனர்.

4. தலைவன் தலைவி பிரிவு, நற்றாய்-தலைவி பிரிவு, செவிலிப்பிரிவு என உரிப்பொருள் ஒழுக்கத்தை முற்றிலும் பின்பற்றிய நெறியில் பாலைப்பாடல்கள் அமைந்துள்ளன.

5. தலைவன் தலைவியின் மீதுள்ள பாசத்தைத்தன் உள்ளத்தோடு உரையாடுவதை ஐங்குறுநூறு புலப்படுத்துகின்றது.

6. தலைவி தலைவன்பால் கொண்ட அன்பை பிரிவுத் துயரம் என்றும் களத்தில் ஐங்குறுநூறு வெளிப்படுத்துகின்றது.

7. தோழியர் - தலைவியின் காதல் தீர்க்கும் உற்ற துணையாகவும் தலைவன் தலைவியர் இடையேயான ஊடகமாகவும் செயல்பட்டுள்ளனர் என்பதை ஐங்குறுநூறு காட்டுகிறது.

8. செவிலி தாயரும் நற்றாயரும் தலைவியின் இளமைக்காலம், பாலை நிலக் கொடுமை, காட்டு வாழ்க்கைக்குப் பொருந்தாத தலைவியின் மென்மை போன்றவற்றின் திறன் அறிந்து புலம்பல் மொழி பேசுகின்றமையை ஐங்குறுநூறும், கலித்தொகையும் காட்டுகின்றன.

9. பாலைநில வழிச் செல்வோர் தலைவன் தலைவியரை உடன்போக்கின் போது வாழ்த்தும் அற உணர்வையும் தயார் தம் மகனைத் தேடி வரும் போது ஆறுதல் பேசும் இரக்கச் சிந்தனையையும் பெற்று

விளங்கியுள்ளனர். இந்நிலையைச் சங்கப் பாலைப் பாடல்கள் அனைத்திலும் அறிய முடிகிறது.

10. தலைவர்கள், உணர்ச்சி உள்ளத்துடன் இருப்பினும் தலைவியின் எழிலைத் தரும் பாலை வழியிலும் நினைந்து இன்புறும் பக்குவத் தைக் கொண்டுள்ளார் என்பதை நற்றிணைப் பாடல் காட்டுகிறது.

11. தலைவியர் கூடி இணைந்திருக்கும் இன்பத்தைவிட பிரிவுத் துன் பமே மேலானது எனக் கருதும் வகையில் அவை மிகுந்த பாத்திரப் படைப்பை நற்றிணையில் பாலைப் பாடல்கள் வெளிப்படுத்தி யுள்ளன.

12. தோழியர் அன்பு, காலத்தால் அழியாதது என்பதை வலியுறுத்தும் வகையில் தலைவிக்குப் பிரிவு நிலையில் ஆறுதல் உரைப்பவர் களாக உள்ளனர்.

13. தலைவர்கள் வாழ்க்கை நடத்தத் தேவையான பொருளை ஈட்டு வதற்காகத் தன்னை வருத்திக் கொள்ளும் சூழலிலும் தலைவி மீதான காதல் உணர்வை உள்ளத்தில் ஆழமாகப் பதித்துக் கொண் டுள்ளனர்.

14. தலைவியர், பிரிவுத் துயரில் ஆழ்ந்திருக்கும் நிலையிலும் இயற்கைப் பொருள்களை வாழ்வியல் நோக்கோடு இணைத்தே பேசுகின்றனர்.

15. பாலைத்திணையில் மகளிரின் உள்ளத்தில் தலைவன் செல்லும் வழியின் ஏதமே மிகுதியான கவலை தருகிறது. குறிஞ்சி, நெய்தல்

திணைகளில் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிகிறான். தலைவன் வரைவு நீட்டிக்கிறான். ஒருவழித் தணத்து வருகிறான். அலரோ துன்புறுத்துகிறது. இற்செறிப்பு நிகழ்கிறது. பருவ வரவோ பிரிவுத் துன்பத்தை அதிகமாக்குகிறது. இந்நிலையில் ஆற்றாத தோழியைத் தலைவி ஆற்றுவிக்கிறாள்.

16. குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவன் களவில் தலைவியிடம் காட்டிய அன்பையும், கற்பில் அது மாறிய நிலையையும் முரண் நிலையில் காட்டித் தலைவனைத் திருத்த முயல்கிறாள் தோழி என்பர். [2]

சங்க இலக்கியத் தோழி தலைவிக்கு வாழ்க்கையின் உண்மைகளை அறிவுறுத்த, மணிமேகலை, சிந்தாமணி காலத் தோழியர் சமயக் கொள்கையை அறிவுரையாக்குகின்றனர்.

**பொருளீட்டல்**

**பொருள் பற்றிய சிந்தனைகள்**

பழங்காலச் சமுதாயத்தில் பண்டமாற்று வளர்ச்சியடைந்த பின்னர்ப் பொருள் பற்றிய மக்களின் சிந்தனை விரிவடைந்தது. பொருளீட்டும் நோக்கம், பொருளின் தேவை, பொருளின் பயன், பொருளின் தன்மை, பொருளற்றார் இழிவு ஆகியவற்றைப் பற்றி மக்கள் தெளிவாக உணர்ந்திருந்தமையை அறிய முடிகின்றது. குறிப்பாகப் பொருள்வயின் பிரிவு அடிப்படையில் அமைந்த அகப்பாடல்களில் பொருள் பற்றிய தெளிவான எண்ணங்களை உணர முடி கின்றது.

பொருளீட்டும் நோக்கம்

தம்மை நாடி வந்தோரையும் தம் சுற்றத்தாரையும் பாதுகாப்பதை ஒவ்வொருவரும் தம் கடமையாகக் கருதினர். அதற்காகவே பொருளீட்டும் முயற்சிகளில் ஈடுபட்டனர்.

***இரப்போர் ஏந்துகை நிறைய புறப்போர்***
***புலம்பில் உள்ளமொடு புதுவதந் துவக்கும் (அகம். 389, 11-15)***

தம்மிடம் வந்து இரந்தோர்க்கு வழங்கவும் பகைவரின் சிறுமையான சொற்கள் வாளாகவும் தம் புகழை நிலைநிறுத்தவும் பொருளீட்டச் சென்றனர் என அறிய முடிகின்றது.

***... ஈதல் இன்பம் வெஃகி மே வரச்***
***செய்பொருள் திறவர் ஆகி... (அகம். 69, 5-6)***

***சுரனிறந்து அரிய என்னார் உரனழிந்து***
***உண்மலி நெஞ்சமொடு வண்மை வேண்டி (நற். 333, 5-7)***

***இல்லென இரந்தோர்க் கொன் றீயாமை யிளிவெனக்***
***கல்லிறந்து செயல் சூழ்ந்த பொருள் (பாலைக்கலி. 2, 15-16)***

பிறருக்கு வழங்க வேண்டும் என்றும் நோக்கத்திற்காகவே பொருளீட்டப்பட்டது.

பொருளின் தேவை

வறுமையால் வாடும் மக்களின் துன்பத்தைத் தீர்க்க வேண்டும் என்ற அருள் நெஞ்சம் அமைந்திருந்தால் மட்டும் பயனில்லை. அதனைச் செயல் படுத்த பொருளும் தேவை.

ஆர் உயிர் நிற்கும் ஆறுயாது என ஊடல் தீர்ப்பானாகிய ஒரு தலைவன் பேசுகிறான். தலைவன் அறத்தால் பொருள் ஈட்டி, பொருளால் இன்பம் துய்க் கிறான். ஆகவே, அவன் பொருளுக்கு ஏதுவான வினைகளை மேற்கொள் கிறான்.

***செயல்படு மனத்தர் செய்பொருட்டு***

***அகல்வர், ஆடவ ரது வதன் பண்பே (நற். 24, 8-9)***

என்று பெரியோர் கொள்கின்றனர். பொருளால் நல்வாழ்வு வாழ்தலே அவர் தம் இலட்சியம். அதனைக் கொண்டு சுற்றத்தாரையும், இல்லோரையும் புரக்கின்ற னர் கொள் எனக் கொடுக்கும், ஈகை, அறம் வாய்ந்து, இளைஞரையும் முதி யோரையும் புலவர், பரணர், கூத்தர் முதலிய இயல் இசை வல்லாரையும் புரந்தனர்.

அறம் நிலை நிறுத்தவும், ஓதுதற்கும், மன்னன் பொருட்டுப் போரிடைச் சென்று பகை தணித்தற்கும், கலத்திலும், காலிலும் சென்று பொருளீட்டுதற்கு மாக ஆடவர் தம் மனைவியரைப் பிரிந்து செல்லுதல் உண்டு.

***கைதொழு மரபின் கடவுள் சான்ற***

***செய்வினை மருங்கில் சென் றோர் (அகம். 125, 14-16)***

என்று ஓதற்பிரிவு குறிக்கப்படுகிறது. கலத்திலும், காலினும் தருவனர் ஈட்ட நீரினம் நிலத்திலும் மக்கள் சென்று வாணிகம் முதலியன புரிந்து பொருள்

தேடுதலைப் பட்டினப்பாலை முதலியன விரிவாகக் கூறுகின்றன. போரின் பொருட்டாக மறவர் வேலும், வில்லும் தாங்கித் தம் வீரம் மறக்குடித் தாய்,

**வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நண்ணடை நல்கல் வேந்தர்க்குக் கடனே**

என்று தன் மகனுடைய கடமையை அறிவுறுத்துகின்றாள். போரிலே விழுப் புண் பட்டு இறந்தால் மகிழ்வும், புறமுதுகிடின் துயரமும் கொள்ளும் வீரத் தாய்மார் சரிதங்களைப் புறநானூற்றில் காணலாம். பகைவரது செருக்கினை அறுப்பதற்கும் தம்மைச் சார்ந்தவர்களுக்கு ஒரு துன்பம் நேர்ந்தவிடத்து உடன் உதவுவதற்கும் பொருள் தேவையாகும்.

**செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந்தோர்க்கும்**
**உறுமிடத் துய்க்கும் உதவி ஆண்மையும்**

என்னும் பாடலடிகள் விளக்கியுள்ளன. பகைவரது செருக்கினை அறுக்கும் கருவியாகப் பொருளைக் கருதும் கருத்து பிற்காலத்திலும் வழுப் பெற் றமையை,

**செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்**
***எஃகு அதனின் கூரியது இல் (குறள். 759)***

என்னும் குறள்வழி அறியலாம்.

அறத்தினின்றும் வழுவாமல் வாழும் வாழ்க்கையும் பிறருடைய வாயி லில் நின்று ஒன்றை இரந்து பெறாமல் தன்மானத்துடன் வாழும் வாழ்க்கையும் பொருளால் அமையக் கூடியதாகும் என்பதை,

**அறக்கடைப் பாடஅ வாழ்க்கையும் என்றும்**

**பிறன் கடைச் செலாஅக் செல்வமும் இரண்டும்**

**பொருளின் ஆகும் (அகம். 155, 1-3)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

நட்புடையாரின் வறுமையையும் சுற்றத்தாரின் துன்பத்தையும் பகை வரது செல்வ வளத்தையும் காணும் போது தலைவனுக்கு ஓரிடத்தில் தங்கி வாழ்தல் இயலாது அந்நிலையை மாற்ற வேண்டும் என்று எண்ணும் அவனுக்கு இரவும் பகலும் தியாகச் சுட்டது. அதனைப் பொருளீட்டும் முயற்சி என்னும் நீரால் தனித்தன்மையை அகப்பாடல் வழி அறிய முடிகிறது.

தலைவன் பொருள்வயின் பிரிவு மேற்கொள்வதாகக் கூறியவுடன் தோழி நன்று அன்று என்று கூறி உடன்பட்டாள். அதனையறிந்த தலைவி, பொருளுக்காகப் பிரிதல் ஆடவரின் இயல்பு எனவும் அதற்கு உடன்படுதலே பண்பான செயலாகும் எனவும் கூறி தோழியைப் பாராட்டும் நிலையை,

**...வேற்று நாட்டாரிடைச்**

**சேறும் நாமெனச் சொல்லச் சேயிழை (நற். 24,5-9)**

ஒவ்வொரு ஆடவனும் உழைத்துப் பொருளீட்டல் தவிர்க்க இயலாத கடமையாகக் கருதப்பட்டது. முன்னோர் ஈட்டி வைத்த பொருளைத் துய்த்து வாழ்வோர் உள்ளவராகவே கருதப்படாத நிலை இருந்தது. எனவே செல்வக் குடியில் பிறந்த தலைவனாக இருப்பினும் தன் முயற்சியில் பொருளீட்டல் அவசியம் என்பது வலியுறுத்தப்பட்டது.

தலைவன் பிறருக்காகவே பொருளீட்டும் முயற்சியை மேற்கொண் டுள்ள அருள் நெஞ்சமுடையவன் என்பதை,

***பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு***

***காமர் பொருட்பிணிப் போகிய (நற். 186, 8-10)***

*என்ற பாடல் அடி காட்டுகிறது.*

பொருளின் தன்மை

*பொருள் எவ்வளவு ஈட்டினாலும் நிறைவு ஏற்படாத மனநிலையையே தரவல்லது எனக் கூறப்பட்டுள்ளது.*

***சுரம்பல விலங்கிய அரும் பொருள்***

***நிரம்பா ஆதலின் நீடலோ இன்றே (குறும். 59 : 5-6)***

*உழைப்பினால் மட்டும் பொருளைப் பெற இயலும். அவ்வாறான்றிப் பொருள் பெற விரும்புவோர் ஓரிடத்தில் குவிந்து கிடக்கும். பொருளை முகந்து கொண்டு வந்துவிட இயலாது என்பதை,*

***... சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது***

*என்னும் அடியினால் அறியலாம்.*

பொருளீட்டும் வழி

*ஒருவர் ஈட்டக் கூடிய பொருள்கேடற்ற வழியில் வந்ததாக இருக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்துள்ளனர் என்பதை,*

***அவரோ***

***கேடில் விழுப்பொருள் தருமார் பாசி மலை***

*என்ற குறுந்தொகை அடிகளால் அறியலாம்.*

செம்மையான வழிகளிலிருந்து நீங்கித் தவறான வழியில் பொருளீட்டி னால் அப்பொருளே இம்மைக்கும் மறுமைக்கும் பகையாக மாறும் என்பதை,

**...செம்மையின் இகந்தொரிஇப் பொருள்**

**செய்வார்க்கு அப்பொருள் (கலி-14, 14-15)**

இம்மையும் மறுமையும் பகையாது தளியானோ என்ற கலிப்பாடல் உணர்த்துகின்றது.

சமுதாயத்தின் நன்மைகளுக்கேற்பத் தீமைகளும் இருத்தல் இயற்கை. அறவழியில் பொருளீட்ட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டாலும் பொருளைக் கவரும் களவர்களும் இருந்துள்ளமை புலனாகின்றது. அவர்கள் வழிச் செல்வோரின் பொருளைக் கொள்ளையிட்டதோடு பொருள் இல்லாத நிலையில் உயிரையும் பறித்துள்ளனர். அவர்கள் வலிமையான உடலையும் புலி போன்ற நோக்கினையும் உடையவர்கள். சுருண்ட கூந்தலையும் உடைய வர்கள் அவர்கள் வழிப்போக்கரிடம் பொருள் இல்லாத நிலையில் அவர்களைத் துன்புறுத்திக் கொன்றுள்ளனர் என்பதை,

**கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்**

**துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வெளவலிற் (பாலைக்கலி 4:4-5)**

என்ற கலித்தொகைப் பாடலால் அறியலாம்.

### அரசின் பொருளாதாரம்

ஒவ்வொரு சமுதாயமும் மாற்றமடைந்து புதிய சமுதாயம் உருவாகும் போது பொருளாதார நிலையிலும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. சேகரித்த உணவுப் பொருள்களைப் பகுத்துண்டு வாழ்ந்த சமுதாய நிலை, உற்பத்தி முறை தோன்றிய பின்னர், தனியுடைமை தோன்ற வழிவகுத்தது. ஒவ்வொருவரும்

தங்களது பொருளாதாரத்தைப் பெருக்கும் முயற்சிகளில் ஈடுபடத் தொடங்கினர். மருத நில நாகரிகம் அளித்த பரிசிலாக இறுதியில் அரசு என்னும் நிறுவனம் தோற்றம் கொண்டது. அரசினை மையமாக வைத்தே சமுதாயம் இயங்கும் நிலை ஏற்பட்டது. மக்களின் வாழ்க்கை முறையிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. ஞானி இதனைப் பற்றிக் குறிப்பிடுகையில், இப்புதியச் சமுதாயம் வேளாண்மை, தொழில் வளர்ச்சியை பெருக்கி நகரங்கள், நாகரிகம், கல்வி முதலியவற்றை ஊக்குவித்ததன் மூலம் முன்னையச் சமுதாயத்தைவிட வளர்ச்சி பெற்ற சமுதாயமாகிறது. குறுகிய நிலங்களிலிருந்தும் குறுகிய வாழ்க்கை முறையிலிருந்தும் மக்களை விடுவித்து மக்களிடம் புதிய உறவு முறைகளை இது வளர்த்து வருகிறது. பண்டைச்சமுதாயத்திலிருந்த பொதுமை நீதி ஆகியவை தனது சமுதாய அடிப்படையோடு அழிந்து விடுவனஅல்ல. அவை புதிய சமுதாயத்தின் கட்டுமானத்திற்கு வருமாற்றிக் கொண்டு வாழ்கின்றன. இப்புதிய சமுதாயமும் தனக்குத் தேவையான அளவு ஏற்றுக் கொள்கிறது. பொருளாதார அடிப்படை மாறினாலும் தான் அழியாமல் புதிய நிலைகளுக்கேற்பத் தன்னை உருமாற்றிக் கொள்ளும் கலாச்சாரத்தின் தன்மை இது என்று குறிப்பிட்டுள்ளார்.

### கடமையாற்றல்

சங்ககாலச் சமூகம் ஒரு போர் விருப்பச் சமூகமாக இருந்திருக்கிறது. ஆடவனாகப் பிறந்த ஒருவனின் சமூகக் கடமை அவன் போர்க்குச் சென்று களிற்று யானைகளை வென்று வருதலே எனப் பொன்முடியார் கூறுவார். போர்க்கடமை பூண்ட ஆடவன், நாட்டில் போர்ச்சூழல் உண்டாகும் போது போர்ப்பறை கேட்டு விரும்பி அத்தொழில் மேற்செல்வான்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் நெடிய காட்டிடத்துப் பாசறையில் தங்கி போர்க் கடமைகளை ஆற்றத் தங்கியிருக்கும் போது போர் நினைப்பில் ஆழ்ந்து இருக்கிறான். வந்த வினை முடித்து அவன் ஊர் திரும்பும்போது

அச்செய்தி தலைவிக்கு மகிழ்ச்சிப் பரபரப்பை உண்டாக்குகிறது. இவ்வாறு தலைவியின் பிரிவுத் துயரையும், தலைவனின் வினை முடித்துத் திரும்பு தலையையும், தலைவனின் இன்பத் துடிதுடிப்பையும் மிக நுணுக்கமாக காண முடிகிறது.

போர் தொழில் கருதி தலைவியைப் பிரிந்து சென்ற மன்னன் பாசறை யில் தங்கியிருக்கையில் நள்ளிரவில் தீவட்டிப் பிடித்தோர் உடன் வரச்சென்று போரில் புண்பட்ட வீரர்களுக்கும் இனிய ஆறுதல் மொழிகளைக் கூறித் தேற்று வதை,

**நள்ளென் யாமத்தும் வள்ளி தேற்றுவகையும்**
**சிலரோடு திரிநறம் வேந்தன்**
**பலலோடு முரனிய பாசறைத் தொழிலே!**

எனும் வரிகள் பறைசாற்றி அறிவிக்கிறது.

அரசன் பாசறையில் உறக்கம் கொள்ளாது கடமை உணர்வோடு செயல் படும் திறத்தை எடுத்துக் காட்டுகிறது.

ஒவ்வொருவரின் கடமைகள் என்ன என்பதை ஒரு தாய் கூறுவதாக, ‘என் முதன்மையான கடமை பெற்று வளர்த்து வெ ளியே அனுப்புதல்; தந்தையின் கடமையோ, சான்றோன் ஆக்குதல், வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லனின் கடமை, நல்ல முறையில் அவனுக்குப் போர்ப்பயிற்சி முதலியன அளித்தல் வேந்தனின் கடமை, இவ்வளவு கடமைகளையும் பிறர் செய்ய போரிலே அஞ் சாது நின்று ஒளிர்வாள். கொண்டு யானையுடன் பகைவரைக் கொன்று மீண்டு வருதல் வளர்ந்த காளையான அவன் கடமையாகும்’ என்பதைப் புறநானூறு காட்டுகிறது. [3]

பொருளீட்டுதல்

பிறர் உழைப்பினால் உண்டு வாழாது தன் முயற்சியில் பொருளீட்டித் தாமுண்டு வாழ வேண்டும் என்றும், பழந்தமிழர் கொள்கைக்கு பொருட்பிரிவு படுத்தியது ஆன்ற சான்றாகும். பழந்செல்வங்களுள் முதன்மையானதாகும்.

பொருள் தேடுவதன் அவசியம்

இன்பத்திற்கும் அகத்திற்கும் அடிப்படையான பொருளைத் தேடுவ தற்கு நம் முன்னோர் மேற்கொண்ட நெறிகளைத் தொல்காப்பியம் பறைசாற்று கிறது. இல்வாழ்க்கையினை மேற்கொள்ளும் தலைவன் தன்னைச் சார்ந்த மனைவி, மக்கள், பெற்றோர், உற்றார், உறவினர்களைப் பாதுகாக்கும் கடமை யுடையது என்கிறார். இவ்வாழ்வான் குறித்துத் திருவள்ளுவர்,

***இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்***
***நல்லாற்றின் நின்ற துணை (குறள். 41)***

என்று குறிப்பிடுவதாலும், செல்வம் உடையவரைப் புகழ்ந்தும் இல்லாதாரை இகழ்ந்தும் பேசுவர் என்ற காரணத்தினாலும் மேலும் தன் முன்னோர் சேர்த்து வைத்தப் பொருள் இருந்தாலும் அப்பொருளால் வாழ்வை நடத்துவது தனக்கும் பெருமை ஆகாது என்ற எண்ணத்தாலும் தலைவன் பொருள் தேடச் செல்வான் என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன.

பொருள்வயின் பிரிவைப்பற்றி பேசுகையில் பொருள் இல்லாத குறையால் பொருள் திரட்ட வேண்டும் என்பதை,

***முந்நீர் வழக்கம் மகடூஉ வேண்டில்லை (தொல்.அகத். 980)***

என்று குறிப்பிடுகிறார். காலிலும், களத்திலும் சென்று பொருள் தேடுவதற் குரிய மக்களைச் சுட்டுகின்றபோது சமுதாயத்தில் உயர்ந்த குடிமக்கள் என்று கருதப்படுபவர்களே அத்தகு செயல்களுக்கு உரியவர்கள் என்கிறார்.[4] அது

மட்டுமல்லாமல் உயர்ந்தோர்கள், பொருள் தேடும் முறையில் அறநெறி இருத்தல் என்கிறார். இதனை பொருள் தேடும்போது அறத்திற்கு ஆக்கம் தாராத வற்றைத் தேடுவது இல்லை. அறத்திற்கு அப்பாற்பட்ட பொருள் இன்பமாகிய பொருள் பயனைத் தந்தாலும் அது சிறந்ததாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்பதையும் அறிய முடிகிறது. இதனை,

***அறக்கழிவுடையன பொருட்பயப் படவரின்***

***வழக்கென வழங்கலும் பழித்தன்று என்ப (தொல்.பொரு. 1164)***

என்கிறார்.

மேலும் பொருளைப் பாதுகாக்கவும், நிலைநாட்டவும் பிரிவு ஏற்படும் என்பதை மேவுகின்ற சிறப்பினை உடைய மக்களை அல்லாத தேவரது பூசை யும், விழாவும் முதலியனவும் முல்லை முதலாகச் சொல்லப்பட்ட எல்லா நிலங்களிலும் மக்கள் தப்பிய வழி தப்பாது நிறுத்தல் வேண்டியும் செய்யப் பெற்ற பொருளைக் காப்பதற்காகவும் செல்கின்ற வழக்கம் உண்டு.

***மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய***

***முல்லை முதலாச் செல்லிய முறையால்***

***இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே (தொல்.அகத். 974)***

தொல்காப்பியர் பொருளை அறத்திற்கும் இன்பத்திற்கும் நடுவனதாக வைத்துள்ளதோடு ஐந்து திணைகளிலும் இந்த மூன்றும் இருப்பதாகவும் குறிப் பிடுகிறார்.

***இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு***

***அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் (தொல்.கள. 1038)***

என்பதால் ஐந்திணை மக்களும் தத்தமக்குரிய ஒழுக்க நெறியில் இருந்தனர் எனலாம். மேலும் குறிப்பிட்டுள்ள ஐவகைப் பிரிவுகளையும் பார்க்கும்போது அவற்றிற்கு பொருளே அடிப்படை நோக்கமாக இருந்ததாலும்,

***வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு***

***ஊதியம் கருதிய ஒரு திறத்தானும் (தொல்.அகத். 987)***

என்று குறிப்பிடுவதாலும் அப்பிரிவுகளைப் பொருள் நோக்கில் இரண்டு பிரிவுக்குள் கொண்டு வரலாம்.

1. அறிவு முயற்சியால் தேடும் பொருள்
2. உடல் முயற்சியால் தேடும் பொருள்

இவ்வாறு பொருள் செயல் வகைக்குரிய காரணங்களைத் தொல்காப் பியம் கூறுகிறது.

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியயோர் செய்யும் தொழில் கள் இவையெனவும் தொல்காப்பியம் கூறுகின்றது.

அந்தணர்க்கு அறுவகைத் தொழில், அரசர்க்கு ஐவகைத் தொழில், வணிகர்க்கும், வேளாளருக்கும் தனித்தனியே அறுவகைத் தொழில்கள் உண்டு. இதனை,

***அறுவகைப்பட்ட பார்ப்பணப் பக்கமும்***

***ஐவகை மரபின அரசர் பக்கமும்***

***இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் (புறத். 1021)***

என்ற நூற்பாவால் அறியலாம்.

ஓதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், பொருளைப் பெறுதல் பொருளைக் கொடுக்கச் செய்தல் இவை ஆறும் அந்தணருக்கு உரியவை. ஓதல், வேள்வி செய்தல், ஈதல், நாட்டைக் காத்தல், தீயோரைக் கண்டித்தல் இந்த ஐந்து தொழில்களும் அரசருக்கு உரியவை. ஓதல், வேள்வி செய்தல், ஈதல், உழவுத் தொழில் செய்தல், மந்தைகளைக் காப்பாற்றுதல், வாணிகம் புரிதல் இந்த ஆறு தொழில்களும் வாணிகர்களுக்கு உரியவை. ஓதல், ஈதல், உழவு, பசு மந்தை களைக் காப்பாற்றுதல், வாணிகம், மேலோர் மூவர்க்கும் கீழ்ப்படிந்து நடத்தல் இந்த ஆறும் வேளாளருக்கு உரியவை.

அரசர் கொடுத்தால் படைக்கலமும் மாலையும் வேளாளர் பெறக்கூடிய பொருள்கள் என்பர்.

**வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும்**
***வாய்ந்தனர் என்ப அவர் பெறும் பொருளே (மரபி. 1582)***

ஆகவே, வேளாளர் போருக்குச் செல்வதற்கும் உரியவர்களாகயிருந் தனர். இது மன்னனின் விருப்பத்தையும் பொறுத்து அமையும்.

**இடைஇரு வகையோர் அல்லது நாடின்**
***படை வகை பெறா அர் என் மனார் புலவர் (மரபி. 1577)***

ஆராய்ந்தால் இந்த நால்வரின் இடையில் உள்ளவர்களான அரசர், வணிகர் ஆகிய இருவகையினரைத் தவிர மற்றவர்கள் ஆயுதத் தரிக்கும் உரிமை அற்றவர்கள் என்று கூறுவார்கள் புலவர்கள் எனத் தொல்காப்பியர் குறிப்பிடு கிறார்.

**விருந்தளிக்கும் பண்பு**

இல்வாழ்க்கை நடத்தும் கணவனும் மனைவியும் தம் உற்றார் உற வினரைக் காக்கக் கடமைப்பட்டவர். அவருடன் நில்லாது, தம் இல்லம் நாடி வரும் பிறரையும் உண்டியாலும் உரையுளாலும் உபசரித்தல் அவர்தம் கடமை என்று அறநூல்கள் கூறுகின்றன. இப்பணியைக் கணவன் அல்லது மனைவி மட்டும் விரும்பிச் செய்தல் இயலாது. இருவரும் மனம் ஒன்றுபட்டாலே செய்தல் இயலும். இருவருள் ஒருவர் மாறுபடினும் விருந்து நன்முறையில் நடைபெறாது. எனவே விருந்து போற்றும் கணவனும், மனைவியும் ஒத்த உணர்ச்சியுடையவராயிருத்தல் இன்றியமையாதது. ஆகவே விருந்து நடை பெறும் இல்லத்தில் உள்ள கணவனும் மனைவியும் மனம் ஒத்து வாழ்கின்றனர் என்பது கருத்தாகும். அஃதாவது அவர்களது இல்வாழ்க்கை செம்மையுற நடைபெறுகின்றது என்பது பொருளாகும்[5] என்பர்.

'தனக்கு இன்ன பிறர்க்கு இன்னா' என்பதை உணர்ந்து போற்றும் அருளுறை நெறியின் அடிப்படைப் பண்பே விருந்தோம்பலாகும்.[6] இல்லத் தாரின் கடமைகளில் விருந்தோம்பல் முதன்மைப் பண்பைப் பெற்றிருக்கிறது. இதற்கு முக்கியப் பங்கேற்பதால் தலைவியின் உயிர் பண்புகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. கணவன் மனைவியரிடையே ஊடல் தீர்க்கும் வாயில்களாக வும் விளங்குகிறது. தம்மைத் தேடி வருவோர்க்கு இன்முகம் காட்டி வரவேற்று, உணவு அளித்து உபசரிப்பது இல்லறத்தில் வாழ்பவரின் பண்பாகும். இல்லற மகளிரின் இன்றியமையாத பண்புகளில் ஒன்று விருந்தோம்பல் ஆகும்.

விருந்தோம்பலை எளிய குடும்பத்தைச் சேர்ந்த பெண்களும் தங்க ளுடைய தலையாய கடமையாகக் கருதியமை அக்காலத் தமிழ் மக்களின் விருந் தோம்பும் உணர்வுக்கு சிறந்த சான்றாகத் திகழ்கிறது.

இல்லற நெறியில் விருந்தோம்பல் உயர்ந்த நெறியாகும் போக்குவரத்து வசதி இல்லாத அக்காலச் சூழலே விருந்தோம்பல் நெறி உருவாகக் காரணம். உயிர்கள் துன்புறுதல் கூடாது என்ற உயர்ந்த நோக்கமே விருந்தோம்பலைச் சிறந்த நெறியாக ஆக்கியது.

**புகா அக்காலைப் புக்கு எதிப் பட்டுழிப்**

**பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும் (களவி. 1053)**

தலைவன் தன் வீட்டில் புகுந்த போது அவனை விருந்தினனாகக் கருதிய போதும் தலைவனின் விருப்பம் உணர்ந்து அவனை விருந்தினனாக ஏற்றுக் கொள்ள விரும்பும் போதும் தலைவிக்குக் கூற்று நிகழும் விருந்தினை வாய்ப் பாகக் கொண்டு கூற்று நிகழ்கிறது.

சங்கத் தமிழரின் விருந்தோம்பல் உணவியலின் அடிப்படையிலேயே உயிர் நாடியாகவே உள்ளது அக்கால விருந்துக்கு அடிப்படையாக அமைவது உணவு வகைகளே.

**நாளது சின்மையும் இளமையது அருமையும்**

**......... ......... ......... .........**

**இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும் (அகத். 987)**

வாழும் நாள் சில என்பதைக் கூறி, இளமையின் அருமையைக் கூறி முயற்சியின் சிறப்பைச் சொல், தகுதியது அமைதியும், பொருள் இன்மையின் இளிவையும், பொருள் உடைமையின் உயர்ச்சியும், அன்பினது பெருக்கத்தையும், பிரிவினது கொடுமையும் காட்டுகின்றன.

*இல்லறக்கடமை*

*அட்டில் தொழில் வன்மை*

*இல்லறம் செம்மையுற நடைபெறுவதற்குப் பொருள் மிக இன்றியமை யாததாகும். வெளியில் சென்று தொழிலாற்றிப் பொருளீட்டுவது கணவ னுடைய கடமையாகும்.*

***இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே (தொல்.அகத். 974)***

*என்பது தொல்காப்பியம் ஒள்ளிய பொருளை ஈட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வான் என்பதை இவ்வடி உணர்த்துகிறது.*

*மனைவியின் கடமை இல்லின் கண் இருந்து இல்லத்து செயல்களைச் செம்மையுற ஆற்றுவதாகும். இல்லறத்தை ஓம்பும் மனைவி தன் கணவனுக் கும் விருந்தினர்க்கும் அளிப்பதற்குச் சுவை பொருந்திய உணவுகளை ஆக்கு வதில் தேர்ந்தவளாய் இருத்தல் வேண்டும் என்பதை உணரலாம். புறநானூறு அட்டில் தொழில் வன்மையையும் மனைவிக்குரிய சிறந்த பண்பாடாகப் போற்றுகிறது.*

*''சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி மார்பில் அணிந்த மாலையை மனை வாழ்க்கையையுடைய மகளிரின் முயக்கத்தால் மாறுபடுத்த முடியுமேயன்றிப் பகைவரின் போர் வீரர்களால் அதை மலைத்தல் இயலாது என்று ஊன்பொதி பசுங்குடையார் அம்மன்னனின் வீரச் சிறப்பைப் புகழ்ந்து பாடுகிறார். இளஞ்சேட்சென்னியை முயங்கும் மனை வாழ்க்கையுடைய மகளிர் அட்டில் தொழில் வன்மையில் சிறப்புற்று விளங்குபவர் என்று இப்புலவர் கூறுகின்றார்.''* [7]

*அன்பு, கற்பு, பொறுமை, நிறை, விருந்தோம்பல், அட்டில், தொழில் வன்மை ஆகியவை மனைவிக்குரிய மாண்புகள் என்பதே மேலே குறிப்பிடப்*

பட்டுள்ளது. இவ்வாறு பல்வேறு கடமைகளை இல்லறத்தில் புரிந்து வாழும் பெண்கள் அதன் காரணமாகத் தங்களைத் தாங்களே உயர்ந்தவர்களாக கருதிக் கொண்டு நடந்ததாகச் சான்று ஏதும் இல்லை. மகளிர் சமுதாய வாழ்வில் சுதந்தரமான அதே நேரத்தில் தங்களுக்கு இயல்பான நாணத்தோடு கலந்து பழகினர் என்று கனகசபைப் பிள்ளை சுட்டிக் காட்டுகிறார்.

பொருள் ஈட்டச் செல்லப் பிரியும் காலத்தும் என்று பொருளின் அவசியத்தையும், பொருள் தேடும் பருவத்தையும், பொருளின் மேன்மையையும், பொருள் இல்லாதானின் இழிவையும் உரைக்கிறார். இதனால்தான் உழைப்பின் மூலம் வாழ்க்கை நடத்துவதே சிறந்த இல்லறம் என்ற எண்ணம் உடையவர்களாக இருக்கின்றனர்.

### காதலினும் கடமைக்கு முதலிடம்

பழந்தமிழ் மக்கள், காதலினும் கடமைக்கு முதலிடம் அளித்தனர் எனலாம். தலைவன் வினை செய்தல் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல நினைப்பதைத் தோழியிடம் கூறினான். இதனைக் கேட்ட தோழி தலைவனை நோக்கித் தலைவி உம்மைவிட்டுப் பிரிதலைச் சிறிதும் விரும்பாதவன். அதனால் நீர் செல்வீராக என்று சொல்வதற்கு அஞ்சுகின்றேன். எனவே சென்று வினை முடிப்பீராக. சென்ற இடத்தில் நெடுங்காலம் தங்காமல் விரைவில் வருவீராக என்று கூறினாள். இக்கருத்தமைந்த பாடல் நற்றிணையில் 229 வது பாடலாக உள்ளது.

தலைவியின் காதல் நினைவு அதனையும் கடந்து, தலைவன் கடமையை நிறைவேற்றுதலின் இன்றியமையாக் கடமை செய்யாத வரை பிறர் இகழ்ந்துரைத்தல் ஆகியவற்றைப் புலவர் புலப்படுத்தியிருப்பது நல்ல பயன் தருவதாகும்.

### கல்வி நிலையும் மேம்பாடும்

*தொல்காப்பியர் காலத்தில் கல்வி முறை எவ்வாறு இருந்தது என்பதனை ஒருவாறு உய்த்துணர முடிகிறது. இனி கல்வியின் பொருட் பிரிகின்றமைக்குக் காலவரையறை கூறுகின்றார். வேண்டிய கல்விக்குரிய காலவரையறை வகுக்கப் பட்டது. ஆகவே, அன்று கல்வியைப் பொதுக்கல்வி என்றும் சிறப்புக் கல்வி என்றும் இரு பிரிவாகப் பிரித்திருந்தனர். பொதுக்கல்வி என்பது யாவரும் பெற வேண்டிய எண்ணும் எழுத்துமாகும். சிறப்புக் கல்வி என்பது ஏதேனும் ஒரு தொழில் பற்றிய கல்வியாகும். திருமணம் ஆன பின்னர் சிறப்புக் கல்வியின் பொருட்டு மூன்று ஆண்டு பிரிந்திருக்கலாம் என்பதால் திருமணம் ஆகும் வரையில் தான் ஊரிலேயே பொதுக் கல்வியைக் கற்றிருப்பர். வெளி யூர்க்குக் கல்வியின் பொருட்டுப் பிரிவது தம் ஊரில் பெற முடியாத உயர் கல்வி என்று தான் கொள்ள வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் பொதுக் கல்வி, சிறப்புக்கல்வி, ஆராய்ச்சிக்கல்வி என மூன்றும் எல்லா மக்களுக்கும் உரியன வாய் இருந்தன. தகுதியுடையோர் பெற்றனர். வருண வேறுபாட்டால் சிலர் விலக்கப்பட்டிலர் அன்று தமிழகத்தின் வருண வேறுபாடும் கிடையாது. இன்ன வருணத்திற்கு இன்ன கல்வி தான் என்று வரையறுக்க வேண்டிய நிலை யும் உண்டாக வில்லை.*

***வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது*** *(தொல்.கற்பு. 1134)*

*என்ற அடிகள் புலப்படுத்தியது.*

*உயர்கல்வி தனிமனிதனுக்கு வேண்டிய கல்வி என்றும் அவன் நாட்டிற் கும் வேண்டிய கல்வி என்றும் இரு வகைப்படும் தனக்கு வேண்டிய கல்வி என்றும், தன் நாட்டிற்கு வேண்டிய கல்வி என்றும் ஒருவன் பொருள் கொள்ளும்படி தொல்காப்பியர் சூத்திரம் அமைந்திருப்பது கற்றறிந்தார் கண்டு மகிழத் தகுந்ததாய் உள்ளது.*

அந்தக் கல்வியும் வேற்று நாட்டில் சென்று கற்றுக்கொள்வதாயினும் அந்நாட்டில் மூன்றாண்டுக்கு மேல் தங்கிவிடக் கூடாதென்றும் மூன்றாண்டுக் குள்ளேயே தன் நாடு திரும்பிவிட வேண்டுமென்றும் தொல்காப்பியர் வலி யுறுத்திக் கூறுவர்.

**கல்வி பற்றிய சங்ககாலச் செய்தி**

நாட்டிற்கு நலம் தரும் கல்வியின் பொருட்டுப் பிரிந்து செல்வதெனத் தீர்மானித்த தலைவன், தலைவி, தோழி இருவரிடமும் தெரிவித்துப் பிரிந்து போனான். தலைவி தோழியைப் பார்த்துச் சொன்னார். உயர்ந்த செல்வமும் ஆகிய கல்வியைத் தன் நாட்டிற்குக் கொண்டு வரும் பொருட்டு வள்ளிக் கொடி படர்ந்த காட்டைக் கடந்து சென்றார் தலைவர் என்றாள் தலைவி.

இதனை,

**அவரே கேடுஇல் விழுப்பொருள் தருமார் பாசிலை**
**வாடா வள்ளி அம் காடு இறந் தோரே**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

கல்வி பங்காளிகளால் திருடர்களால் வலியோர்களால் அரசர்களால் கவர்ந்து கொள்ள முடியாதது. தக்காரிடத்திலேயே கல்வி இருப்பதால் அது விழுப்பொருள் ஆகும். இக்கருத்துக்களைக் கருதியே கேடு இல்விழுச்செல் லும் கல்வி என்றும் (குறள்-400) கூறப்பட்டது.

மேற்கண்டவாறு தலைவி கூறியதைக் கேட்ட தோழி தான் முன்பே தலைவன் கல்விக்காகப் பிரிவதை அறிந்ததுண்டு என்றும் அதனால் அவனோடு பேசியதுண்டு என்றும் பேசிய செய்தி என்றும் கூறினாள்.

கற்றும் கேட்டும் நிறைந்த அறிவையுடைய பெரியோரிடம் சென்று நீர் குற்றமற்ற பல நூல்களைக் கசடறக் கற்க விரும்புதல் நல்ல செய்திதான். ஆனால் இவள் முகம் இனிய நிலாக்கதிர்களையுடைய தீபங்களைப் போன்றது. அந்த முகம் நீர் பிரிந்தால் பாம்பால் விழுங்கப்பட்டுப் பாழடையுமே நீர் கற்கும் கல்வியால் அந்த முகத்தை மீட்க முடியுமா? (கலி-14) என்கிறாள்.

**கல்வியின் பிரிதல்**

தலைவியை விட்டுத் தோழி சென்றாள். தனியாக இருந்த தலைவி தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். ‘பிரிவுத் துன்பத்தால் நான் வருந்திக் கொண்டிருக்கிறேன். எனினும் கரையை முட்டி விழும் காட்டாற்றினால் இடிந்து போன கரையிலே நிற்கும் மாமரத்தின் வேர்கள் யாவும் நீரால் அலசப் பட்டுக் கண்ணுக்கு விளங்கித் தோன்றும் காலத்தில் காற்றால் அலையும் அம்மரத்தின் அழகிய தளிர்கள் நடுங்குதல் போலவிடாமல் நடுங்கும்’ என நெஞ்சத்தோடு இப்பிரிவுத்துன்பத்தையும் நான் எப்படித் தாங்குவேன் என்று வருந்தினாள். [8]

தலைவன் பிரிவில் மிகவும் வருந்தி மெலிந்த தலைவியைத் திரும்பி வந்ததைக் கண்ட தோழி வற்புறுத்திச் சொன்னார்கள். பெரிய விசும்பு அதிரும் படி மின்னி இடி முதலான தொகுதிகளோடு கூடிய கரிய மேகம் மழை பெய்வ தற்காகக் கடல் நீரை முகந்து கொண்டு வந்து நிற்கிறது என்று கூறித் தலைவன் வரும் கார் காலப் பருவத்தைக் காட்டித் தலைவியை வற்புறுத்தி ஆற்றியிருக் கும்படி கூறினார் தோழி.

தலைவன் கல்விக்குப் பிரிந்தான் என்பதில் தலைவிக்கு வருத்தமில்லை. ஆனால், பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதனால், வருந்துகிறாள்.

மாஞ்சோலையிலுள்ள குயில்கள் ஆணும் பெண்ணும் உட்கார்ந்து கொண்டு ஒன்றையொன்று எதிர் எதிர் நின்று வண்டுகள் மொய்க்கும்படி மலர் களைத் தட்டிலில் வைத்து ஏற்றிக் கொண்டு தெரு தோறும் விலை கூறிவரும் 'பூவிலை மடந்தையீர் வாங்கீரோ' என்ற குரலும் தலைவியை மிகவும் வருத்து கின்றன என்பதை அறிந்த தோழி கூறினாள். [9]

## தலைவியும் தோழியும் வருந்துதல்

தலைவியும் தோழியும் தலைவனது பிரிவால் வருந்தியிருந்தனர். எனி னும் அவர்கள் சிந்திக்கத் தொடங்கினர். நாட்டின் நலன் நாடி கல்விக் கற்கச் சென்ற தலைவன் உரிய முறையில் அவனை முடித்துக் கொண்டு வருதற்கேற்ற காலம் கழியும் வரை ஆற்றியிருத்தல் வேண்டுமென்ற முடிவுக்கு வந்தனர். அதனால் அமைதி பெற்று வாழ்ந்து வந்தாள்.

கல்வியின் பொருட்டுச் சென்ற தலைவன் தான் போன நாட்டிலுள்ள கல்வியைப்பற்றி ஆய்ந்தான். சிற்சில பகுதிகளில் தன் நாட்டுக்கல்வி அந்நாட்டி னுள்ளதைவிட விஞ்சியதாக இருப்பதைக் கண்டான். அந்நாட்டு அறிஞர் களிடம் அது பற்றித் தெரிவித்தான். அவர்களும் தலைவனிடம் மகிழ்ச்சியோடு விஞ்சியுள்ள பகுதிகளை விளக்கும்படி வேண்டினர். அவனும் அவ்வாறே செய்தான். அந்நாட்டு அறிஞர்களும் அவனுக்குப் பாராட்டுச் செய்து பொன் முடிப்பைப் பரிசாகத் தந்தனர். கல்வியின் சிற்சிலவற்றை அந்நாட்டினர் எளிமையாக்கி வைத்திருந்தனர். அவற்றை அந்நாட்டு அறிஞர்களிடம் தலை வன் நன்கு விளங்கிக் கொண்டான். இவ்வாறு கல்வியைக் கொடுத்தும் கொண் டும் செயற்பட்டு உரிய காலத்தையும் பயனுடையதாகச் செலவிட்டு குறித்த நாளில் தன் நாடு திரும்பி வந்தான்.

### சங்க சமூகத்தின் கல்வியின் பெருமை

சங்க நூல்கள் புலமை வாய்ந்த பெண் மக்களைக் காட்டுகின்றன. ந.சஞ்சீவியின் சங்க இலக்கிய ஆராய்ச்சியில் பெண்பாற் புலவர் என உறுதி படக் கூறக் கூடியவர்கள் முப்பதின் மரைக் காட்டுகிறது. இவர்கள் மிக அதிக மாக (59) பாடல்களைப் பாடியுள்ள ஔவையாரே. புறநானூற்றில் மிகுதியாகப் பாடிய புலவர் என்ற சிறப்பினைப் பெண்களுக்கு ஔவையார் பெற்றுத் தரு கிறார். பதிற்றுப் பத்தின் ஆறாம் பத்தைப் பாடிய காக்கைப்பாடினி நற்சென் னையர் குறிக்கத் தக்கவராவார்.

சங்கப் பாக்கள் 2379இல் 154 மட்டுமே இவரால் பாடப்பெற்றன என்ப தும் கருதத்தக்கது. அவை அகப்பாடல் 67 ஆக அமைகின்றன. எண்ணிக்கையில் இவை மிகக் குறைவாயினும் அன்று கல்வியில் வல்ல பெண்டிர் பலர் இருந் ததை ஔவையாரை நோக்க அறிய முடிகிறது. அன்றைய மகளிர் கற்ற கல்வி அவர்களில் உடலுறுப்புகளுக்குப் பயிற்சி தருவதாகவும், திருமணத்திற்குப் பிறகு இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்குத் துணை செய்யும் கருவியாகவும் குடும்பக் கல்வியைத் தாயிடமும் செவிலித் தாயிடமும் தோழியிடமும் கற்றனர் எனலாம்.

### தனிமனித மேம்பாடு

தனி மனிதனைச் சமுதாய உறுப்பினராகவும் குடும்பத்தைச் சமுதாயத் தின் அடிப்படையாகவும் ஏற்றுக்கொள்வதற்குத் திருமண உறவு முறை மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. திருமண உறவில் ஒரு ஆணும் பெண் ணும் ஒரே வீட்டில் சேர்ந்து வாழ்ந்தாலும், சமூகம் அதனைக் குடும்பம் என்றோ அவர்களைக் குடும்பத்தார் என்றோ ஏற்றுக்கொள்வதில்லை. சமுதாயத்தின் அக ஒழுக்கத்தைப் பற்றிப் பேச வருகின்ற தொல்காப்பியர் அதனைக் களவு, கற்பு என இருவகையாக பாகுபடுத்துகிறார்.

## தனிக்குடும்பம்

*இரட்டைக் காப்பியங்களில் தனிக் குடும்ப அமைப்பே காணப்பட்டன. கோவலன்-கண்ணகி திருமணம் முடிந்த பின்னர் கோவலனது தாய் அறவோர் ஓம்புதல் விருந்தினரைப் பேணுதல் முதலிய சிறப்புடைய கண்ணகியின் இல் வாழ்க்கையும் பல்வேறு செல்வங்களுடன் சிறப்புப் பெறும் நிலையையும் காண அவர்களைத் தனிக்குடும்பமாக அமர்த்த எண்ணுகிறாள். அவர்கள் தனிக் குடும்பம் நடத்த ஏற்பாடுகளையும் செய்கிறாள்.*

**வாரொலி கூந்தலைப் பேரியற் கிந்தி**

***மறப்படும் கேண்மையோ டறப்பரி சாரமு (சிலம்பு. 284, 88)***

*மேற்கூறிய செய்தி அக்காலத்தில் திருமணம் முடிந்தவுடன் மணமக்கள் தனிக்குடும்பம் நடத்திச் செல்வதைத் தெரிவிக்கின்றது. மனிதச் சமுதாயத்தின் வளர்ச்சி நிலையை ஆராய்ந்த மார்கன், மனிதப் பண்பாட்டில் குடும்பம் என்ற நிறுவனத்தை மட்டும் ஐந்து படி நிலைகளில் கூறுகிறார்.* [10]

## தொல்காப்பியம் காட்டும் குடும்பம்

*இதில் அறியப்படும் குடும்பம் தனிக்குடும்பமே ஆகும். இந்த நெறியே மிகுதியாகப் போற்றப்பட்டு வந்துள்ளது. உடன்போக்கினை அடுத்து நிகழும் திருமணமும் பின்னர் அவர்களைத் தனிக் குடும்பமாக வைக்கும் மனையறப் படுத்தும் நெறியும் விளக்குகின்றன. தலைவன் காதற்பரத்தையோடும், காமக் கிழத்தியோடும் சேர்ந்து வாழ்ந்த குறிப்பும் காணப்படுகிறது. அகத்திணையில் களவியல், கற்பியல் பெரும்பாலும் தாய், செவிலித்தாய், தோழி ஆகியோரைப் பற்றிய செய்திகள் அதிகமாகக் காணப்படுகிறது. இவர்கள் இருவரும் தலைவி யின் வீட்டில் எல்லா நேரத்திலும் தங்கி உடனுறைபவர்களாகவும் இருக்கின்ற னர் தலைவியின் தந்தையைப் பற்றியும் தமையனைப் பற்றியும் ஓரிரு இடங்களில் குறிப்பிடுகிறார்.*

***தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப (களவியல், 1083)***

*பெரும்பாலும் பெண்களின் கூற்றுகளே காணப்படுகின்றன. இதற்கான காரணம் அகவாழ்வின் கடமைகளைப் பெண்ணுக்கும், புறவாழ்வின் கடமை களை ஆணுக்கும் அக்காலச் சமுதாயம் வகுத்திருந்ததேயாகும்.*

## பெண்டிர் பொறுப்புகள்

*அவரவர் இயல்பிற்கேற்பச் சமூக அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் ஒவ் வொரு சூழலிலும் சில பொறுப்புகள் உள்ளன. எச்சூழலிலும் அவற்றை அவர் நிறைவேற்றுவது அவரது கடமையாகிறது. இவ்வகையில் ஒவ்வொரு பெண் ணும் தனது பருவம் மற்றும் தகுதிக்கு ஏற்ப இல்லப் பொறுப்புகளை மேற் கொண்டுள்ளனர். வாழ்வின் தலையாய பகுதியாக நடுநிற்கும் பருவத்தில் பெண், மிக எளிய நிலையிலும் இல்லத்தைச் சிதையவிடாது சிறப்பாக நடத்திச் செல்பவளாகத் (குறுந். 295:3-6) திகழ்ந்து கணவனுக்கும் அவள் தாயாகிறாள் (குறு.19:1) இத்தாய்மைப் பண்பு பல்வேறு சூழ்ல்களிலும் பலவாறாகச் சங்கப் பாக்களில் எதிரொலிக்கின்றன. அவற்றுள் குழந்தை வளர்ப்பு முதன்மை பெறு கிறது. சிறுபருவத்திலேயே பெண்டிர் இல்லப் பணிகளில் ஈடுபடுத்தப் பட்டதை, வினைவயிற் பிரிந்த தலைவன் திரும்புவதைக் குறிக்கும் பாடல்கள் மிகுதியும், 'மாலை நனி விருந்து அயர்மார் தேர்வரும் என்னும் உரை வாராதே' (குறுந்-156;6-7) என்ற வரிகள் காட்டுகின்றன.* [11]

*1. ஆடவர் பரத்தையிற் பிரிந்த பொழுது, பெண்டிரின் ஏவல் மகளிர் நிகழ்த்தும் செவ்வணி (பரி. 20-22) நிகழ்வு பெண்டிரின் மதிப்பு குறைத்தலில் ஆழமாக நோக்கத்தக்கதாகும். அது சங்கச் சமூகத்தில் பெண்டிர், ஆடவருக்கு வாரிசுகளைப் பெற்று தரும் கருவியாகக் கருதப்பட்டனரோ என்ற எண்ணத்தை எழுப்புகிறது. ஒவ்வொரு சான்று தவிர வேறு சங்கப் பாக்களில் அறியவராமை*

அக்காலத்திலேயே இவ்வழக்கம் கடியப்பட்டிருக்கலாம் என்ற உணர்வையும் தருகிறது.

### சங்கச் சமூகத்தின் பெண்டிர் நிலை

சங்கச் சமூகம் பெண்மைக்கு அளிக்கும் விளக்கம் பெண்டிரின் பொறுப்பாக கடமையாகக் காட்டுவன. பெண்டிரின் செயற்பாடுகள் பெண்டிர் பெற்ற மதிப்புகள், பெண்டிர் மதிப்புக் குறைத்தல் சில தனிக்கூறுகள், பெண் டிர் ஆடவர் இடையே காணும் வேறுபாடுகள் ஆகியன இவளுள் நோக்கப் பட்டு அன்றைய பெண்டிரின் நிலை உறுதியளிக்கப்படுகிறது.

கணவனுக்காக மட்டுமே தன்னை அணி செய்து கொண்டு (ஐங். 496;3-5, நெடு. 53-56) அவனது நலத்திற்காக வழிபட்டு (மது.550, 556, குறுந்.218) சாதல் அஞ்சேன், அஞ்சுவல் சாவல் பிறப்பு பிரிதாவது, ஆயின் மறக்குவேன். சொல் என் காதலன் என (நற்.397:7-9) வருந்தி, இம்மை மாறி மறுமையாயினும் நீயாகியர் என் கணவனே யானே நின் நெஞ்சில் நிறைய வேண்டும் (குறு-49) என வேண்டிய பெண்மை தன்னை ஆணுக்குள் அடக்கமாக வெளிக்காட்டு கிறது.

### பெண்கள் குடும்பத்தின் மையம்

பண்டைய காலத்தொட்டு உலக வரலாற்றில் பெரும்பான்மையான காலம் இந்திய நாடு முதன்மையானதாக இருந்து வருவதற்கு மிக அடிப்படை யான காரணம் தமது இல்வாழ்க்கை முறையே. குடும்ப வாழ்வில் ஒவ்வொரு வருக்குமே தனித்தனியானதும் அதே சமயம் சிறப்பானதுமான பங்கு உள்ளது. குடும்பத்துக்கு மையமாக அச்சாணியாக பெண்களே விளங்குகின்றனர்.

# பெண்டிர் இல்லப்பணி

- இளையோர்
  - பொதுநிலை
    1. நீர் கொணர்தல்
    2. வீட்டுத் தோட்டம் அமைத்தல்
    3. உணவுப் பொருள் கொடுத்தல்
    4. சமைத்தல்
  - நில அடிப்படை
    - இல்லத்தைச் சுற்றி
      - குறிஞ்சி
        - தினை உணத்தல்
      - முல்லை
        1. ஆநிரை பாதுகாத்தல்
        2. தந்தைக்கு உணவு கொண்டு செல்லல்
        3. சிறுசிறு இல்லப் பணிகள்
      - மருதம்
        - அறி வுறுத்தல்
      - நெய்தல்
        1. மீன் உணத்தல்
        2. தந்தைக்கு உணவு கொண்டு செல்லல்
    - இல்லத்திற்கு வெளியே
      - குறிஞ்சி
        - தினைப் புனக் காவல்
      - முல்லை
        1. மோர், நெய் விற்றல்
        2. மாடு மேய்த்தல்
      - மருதம்
        1. களை எடுத்தல்
        2. கதிர் பாதுகாப்பு
        3. பூ விற்றல்
      - நெய்தல்
        1. மீன் விற்றல்
        2. உப்பு விற்றல்
- தாய்
  - இல்லப்பணி
    1. குழந்தை வளர்ப்பு
    2. விருந்தோம்பல்
    3. சமைத்தல்
    4. இல்லத்தூய்மை
    5. தேவையான பொருள் வாங்கல்
    6. துணைவர் விழுப்புண் ஆற்றல்
    7. திருமணம் நிகழ்த்துவித்தல்
  - புறப்பணி
    1. பொருட் பங்கீடு
    2. உப்பு விற்றல்
    3. பொருள் உற்பத்தியில் ஈடுபடல்
- முதியோர்
  1. விரிச்சி கேட்டல்
  2. குறி பார்த்தல்
  3. குழந்தைகளைப் பேணல்
  4. பூ பண்ணியும் விற்றல்

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையும் தாயின் கருவில் தொடங்கி மனைவியின் ஆதரவில் முடிகிறது. குடும்பத்தில் உள்ள அனைவருமே தன் தாய்மையாலும் பெண்மையாலும் வழி நடத்தப்படுகின்றனர். தாய்மையின் தெய்வீகமும் பெண்மையின் அன்பும் தான் குடும்ப வாழ்க்கையை நிறைவு செய்கிறது. எனவே, பெண்களே குடும்பத்தின் மையமாக உள்ளனர் எனச் சொல்வது மிகையாகாது.

### கடமையும் உரிமையும்

குடும்பத்தை நடத்துகின்ற பொறுப்பில் உள்ளவர்களுக்கு குடும்பம் அடிப்படையான கடமைகளை விதித்துள்ளது. தனது குடும்பத்தாரைக் காப் பாற்றுவது என்பது ஒரு குடும்பத் தலைவரின் தலையாய கடமையாகச் சொல் லப்பட்டுள்ளது. அதற்காக அவர் நியாயமான முறையில் உழைத்து, பொருள் சேர்த்து, வீண் செலவு செய்யாமல் தனது குடும்பத்தாரின் ஒட்டுமொத்த நலனுக் காக வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். தனது சொந்த நலனைவிட குடும்பத்தாரின் நலனையே முன்னிறுத்த வேண்டும. அதேபோல குடும்பத் தலைவிக்கு என்று தலையாய கடமைகள் உள்ளன. அவ்வாறே குடும்ப உறுப் பினர்கள் ஒவ்வொருவரும் தனது கடமைகளைத் தவறாமல் செய்கின்ற போது குடும்பங்கள் நிறைவானதாக விளங்கும்.

### திருமணத்தோற்றம்

வளர்ச்சியடைந்த மனிதனால் ஏற்படுத்தப்பட்ட பல சடங்குகளில் திருமணமும் ஒன்றாகும். குடும்பத்தில் ஆணின் ஆட்சி நிலை பெறுவதும், தனது சொத்துக்கு வாரிசாக குழந்தைகள் பெறுவதும் இத்திருமணத்தின் இலட்சியங்கள் என்று எங்கெல்ஸ் கூறுகிறார். வாழ்க்கையை கூட்டுப் பொறுப் பில் நடத்துவதற்குப் பலரறிய செய்து கொள்ளும் ஒப்பந்தம் என்கிறார் பெரி யார் ஈ.வெ.ராமசாமி. இந்தச் சமூகவியல் அறிஞர்கள் கூற்றிலிருந்து திருமணத் தின் உண்மை நிலையினை உணர முடிகின்றது. [12]

புறக்காரணிகள்

தனிமனிதன் சார்ந்த சமுதாயம், சமூகம், பண்பாடு, பிற தொடர்புகள் சார்ந்தது. அன்றியும் சமூகத்தில் அவ்வப்போது நிகழ்கின்ற புற மாற்றங்கள் அனைத்தும் குடும்பத்தைச் சிதைக்கின்றன. கல்வி, நகர்மயமாதல் தொழில் மயமாதல், திருமண முறைகளில் ஏற்படுகின்ற மாற்றம், சட்ட முறைமைகள் போன்றன குறிப்பிடத்தக்க புறக்காரணிகளாக விளங்குகின்றன.

பெண்ணுக்கே கற்பு

கற்பு கற்பென்று சொல்ல வந்தார் இரு கட்சிக்கும், அஃது பொதுவில் வைப்போம் என்பது இக்காலத்து மக்கள் வேண்டும் நீதி. கற்பொழுக்கம் ஆணுக்கும், பெண்ணுக்கும் பொதுவாகும். முன்பு தொல்காப்பியர் காலத் திலே கற்பு பெண்களுக்குரிய தனி உடைமை என்றே கருதப்பட்டது. [13]

ஒரு பெண் ஒரே ஆடவனை மணந்து அவனுடன் இணைபிரியாக் காதல் கொண்டு இன்புற்று வாழ வேண்டும். அவன் எவ்வளவுதான் தவறுகள் செய் தாலும் அவள் மட்டும் தவறுகள் செய்யாமல் அவனுக்கு அடங்கியே நடக்க வேண்டும். காதலின் உள்ளம் களிக்க, உடல்நலம் பெற அவனுக்குப் பணி விடை புரிவதே கற்புள்ள பெண்ணின் கடமை. கணவன் செய்யும் இழி செயல் களை ஊரார் அறிந்தால் அவனைப் பற்றி இழிவாக எண்ணுவார்கள். ஆதலால் அவன் செய்யும் குற்றங்களை மறைப்பதே மனைவியின் கடமை. இதுபோன்ற குணங்கள் பெண்களுக்கு வேண்டும். இவை கற்புடைமையாகும்.

**போக்குடன் அறிந்தபின் தோழியோடு கெழீஇக்**
***கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும் (தொல்.பொருள். கள. 1061)***

இவை பெண்களுக்குக் கற்பே உயிர் என்பதை விளக்குகின்றன. கற்பின் வழி நடப்பதே கடமை எனக் காட்டப்பட்டுள்ளது.

## கற்புக் கோட்பாடு

*சங்க இலக்கியங்களில் பெரிதாகச் சொல்லப்படும் வாழ்க்கை மதிப்பு கற்பு என்பதாகும். நிலவுடைமை ஆதிக்கம் தோன்றுகிற காலங்களில் எல்லாம் பெண்கள் ஆடவனின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியிருக்கின்றனர். நிலத்திற்கும் உடையவனான ஆடவன் பெண்ணைத் தனக்குரிய உடைமைப் பொருள்களில் ஒன்றாகக் கருதுகிறான். தமக்குரிய உடைமைப் பொருள், தமக்குரிய போகப்பொருள் தமக்கு அடங்கி நடக்க வேண்டிய உயிர் என்றே பெண்ணை அவன் மதிப்பிடுகிறான். இதனால் பெண்ணைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்து காக்க வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்படுவதால் அவளுக்கு உயர்ந்த மதிப்புகளைக் கூறி அம்மதிப்புகளையே அவளைக் காக்கும் கவசமாக ஆக்கி விடுகிறான்.*

*இதனை வள்ளுவர்,*

***சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்***
***நிறைகாக்கும் காப்பே தலை (குறள் 57)***

*என்பார்.*[14]

*சங்க இலக்கியத்தில் கற்பு என்கிற மிகப்பெரிய பெருமை அவளுக்குப் வலியுறுத்தப்படுகிறது. ஆடவனைப் பற்றி எளிமையாகக் கூறும் சங்க இலக்கியம் பெண்களின் கற்பைப் பற்றிப் பலவாறாகப் பாராட்டுவது கொண்டு அவள் ஏற்றம் பெறுகிறாள்.*

## சங்க இலக்கியத்தில் பெண்கள் வீரம்

*சங்க காலத்தில் பெண்கள் வீரர்களையே மணந்தனர். காளை அடக்குதல், வில் வித்தை போன்ற போட்டிகள் நடத்தப் பெற்று, போட்டிகளில் வெற்றி பெற்ற ஆடவர்களையே அவர்கள் கணவர்களாக ஏற்றுக் கொண்டனர். அதனைப் போலவே பெண்களும் வெற்றி வீராங்கனைகளாகவே திகழ்ந்துள்ள*

னர். முதல் நாள் போரில் மன்னனுக்கு உதவச் சென்ற தனது இளம் வயது மகனை (சிறுவனை) தயார்படுத்தி வாளைக் கையில் கொடுத்து அனுப்பினாள். அவனும் போர்க்களத்தில் இறந்துபடுவான். பெண் ஆனவள் தந்தை, தனது கணவன், மகன் போர்க்களத்தில் வீரமரணம் அடைந்தனர் எனக் கேட்டால் மகிழ்வுறுவர். போர்க்களத்தில் புறமுதுகிட்டு ஓடினர். புறப் புண்பட்டனர் என்று கேள்வியுற்றால் வேதனைப்படுவாள்.

**கொல் ஏற்றுக் கோடு**

***அஞ்சு வானை மறுமையும் புல்லாளே ஆயமகள் (முல்லைப்பாட்டு)***

கூர்மையான கொம்புகளை உடைய காளையினை அடக்கக்கூடிய ஆடவனையே ஆய மகள் மணந்து கொள்வாள் என்று சோழன் நல்லுருத்திரன் குறிப்பிடுகிறார்.

மக்கட்பேறு

மனைவியின் மாண்பு வீட்டிற்கு மங்கலமாகும். அம்மாண்பிற்கு அணிகலனாகத் திகழ்வது மக்கள்பேறு என்பதை,

**மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்**

**நன்கலம் நன்மக்கட் பேறு (குறள்-60)**

என்பார் வள்ளுவர். மக்கட்பேறு என்பது ஒருவனையும் ஒருத்தியையும் தம் வாழ்நாள் முழுவதும் ஒன்றுபடுத்துவதாகும் என்பர். [15]

குடும்பம் என்பது தனித்தியங்கும் போக்குடையதன்று. ஒவ்வொரு தனிமனிதனும் குடும்பம் என்ற குழுவாகி இரத்த உறவுடைய பல குடும்பங்கள் கால்வழிக் குழுக்கள் சமூகமாகி பல சமூகங்கள் பெரும் சமுதாயமாகின்றன.

தனிமனிதன் தொடங்கிச் சமுதாயமாக விரிந்து நிற்கும் மனிதப் பரப்பின் உறவில் பல தொடர் நிலைகள் உள்ளன. குடும்பம் கால்வழிக் குழுக்கள், சமூகம், சமுதாயம் என்பன நில உடைமைச் சமூகத்திடம் காணப்படும் அமைப்பாகும்.

### குடும்ப மேம்பாடு

### குடும்பம் பொது வரையறைகள்

குடும்பம் பற்றிக் குறிப்பிடும்பொழுது பலவிதமான கருத்துக்களைக் காணலாம். குடும்பம் ஒரு நிறுவனம் என்றும், நிலையம் ஒரு குழு என்றும் வழங்குகின்றனர். மூன்றும் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்ட பொருள் உடையவை.

குடும்பம் என்பது திருமணத்தின் மூலம் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நிலையான நெருக்கமான இணைப்பினால் அவிழ்க்க முடியாதபடி பிணைக்கப்பட்ட ஒன்றாக இருக்கின்றது. அவை அவர்களுடைய உறவுகளை ஒரு குறிப்பிட்ட திட்டவட்டமான வழியில் ஒழுங்குபடுத்துகின்றது. அந்தப் பிணைப்பு இருவருக்குமிடையே ஒருவித ஈடுபாட்டையும், கவர்ச்சியையும் பொதுநல உணர்ச்சியையும், கணவன் மனைவி என்ற ஆன்மீக இரத்த உறவையு முதன்மையாகக் கொள்கிறது.

குடும்பம் அதன் நிறுவன மதிப்பிலும், சமூக வாழ்க்கையில் அவை செலுத்தும் ஆதிக்கத்திலும் தனக்கு நிகராக எந்தக் குழுவையும் நிறுவனத்தை யும் பெறாது ஈடும் எடுப்புமின்றித் தலைதூக்கி நிற்கின்றது என்பது புலனாகும்.

### குடும்பத்தின் தோற்றம் வளர்ச்சி

குடும்பம் தோன்றி வாழ்வதற்காக சூழ்நிலைகள் இப்படிதான் தோற்றம் பெற்றிருக்க வேண்டும் என்று படிமலர்ச்சி இயலார் விளக்கம் அளிக்கின்றனர்.

மக்களும் உயிரினங்களும் தோன்றி வாழ்வதற்கான சூழ்நிலைகள் அடங்கிய இந்த மண்ணுலகம் தோன்றிய காலம் முதல் இன்று வரை ஏற்பட்ட அனைத்து வகையான மாற்றங்களையும் வளர்ச்சியோடு பண்பாடுகளின் வளர்ச்சியும் ஒன்றிவிட்டன. உலகம் உயிரினம், பண்பாடு இம்மூன்றின் வளர்ச்சி நிலை களுள் ஒவ்வொன்றின் வளர்ச்சி நிலையிலும் உரிய தனித்தன்மை உண்டு. பல மில்லியன் ஆண்டுகளுக்கு முன் படிமலர்ச்சி அடையத் தொடங்கிய மண்ணு லகத்தில் பனியாறுகள் நிறைந்த சூழ்நிலை காலப்போக்கில் வெவ்வேறு சூழ் நிலைகளில் வாழ்ந்த மக்களும் தனித்தனியான பண்பாட்டினை ஏற்படுத்திக் கொண்டனர்.

குடும்பத்தின் தோற்றம் குறித்து இருவேறு கொள்கைகள் அறிஞர் களிடையே நிலவுகின்றன. ஒன்று குடும்பம் என்ற அமைப்பு இயல்பாகவே மனிதச் சமூகத்தில் அமைந்திருந்தது. இரண்டு குடும்பம் என்ற அமைப்பு சமூக வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் தோன்றியது எனலாம்.

### தோற்றக் கொள்கை ஒன்று

''பாஸ்கர் கிஸ்பர்ட், வெஸ்டர் மார்க் போன்ற அறிஞர்கள் குடும்ப அமைப்பு இயல்பாக அமைந்துவிட்ட ஓர் அமைப்பு எனவும் விளக்கியிருக் கின்றனர்.'' சமூக வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் குடும்பம் தோன்றி யிருக்க வேண்டும் என்பவர்களின் கருத்தை இவர்கள் மறுத்துரைத்தனர். [10]

### தோற்றக் கொள்கை இரண்டு

எல்.எச்.மார்கன், ஜே.எல்.லப்டாக், ஜே.ஜி.பிரேசன், ஆர்.பிரிஸ்பால்ட் முதலிய அறிஞர்கள் குடும்பம் சமூக வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காலக்கட் டத்தில் தோன்றியது என்ற கொள்கையை உடையவர்கள்.[17] குடும்பம் எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் காணப்படுகின்ற ஒரு நிறுவனம் என்பதை

இவர்கள் ஏற்கவில்லை. குடும்பம் என்பது இயக்கமுள்ளது என்பதும் மாறுதல் களுக்குட்பட்டது என்பதும் இவர்கள் கொள்கையாகும்.

குடும்பம் என்பது இயக்கமுள்ள சித்தாந்தத்தையே குறிக்கிறது. என் றைக்கும் இயங்காதிருப்பதில்லை. சமுதாயம் சூழ்நிலையிலிருந்து மேல் நிலைக்கு முன்னேற குடும்பமும் கீழான வடிவத்திலிருந்து மேலான வடிவத் திற்கு முன்னேறிச் செல்கிறது என்பதை எங்கெல்ஸ் 1884-ல் விளக்குகிறார். [18]

''மனிதச் சமூகத்தின் தொடக்கக் காலத்தில் குடும்பமோ மணமுறையோ இருந்தது கிடையாது எனவும் மனிதர்களிடம் வன்முறையற்ற புணர்வு நிலை கள் காணப்பெற்றன எனவும், ஓர் ஆடவர் குழு ஒரு பெண்டிர் குழுவுடன் கட்டுப்பாடாற்ற முறையில் உறவு கொண்டனர் என்பதும் அறிஞர்களின் கருத் தாகும்.[19] இக்கருத்திற்கு அரணாக எண்ணற்ற பழங்குடி மக்களின் வாழ்க்கை முறைகளைச் சான்று காட்டினர். கட்டுப்பாடாற்ற புணர்ச்சி உ றவுநிலைக்குப் பிறகு தாயினுடைய பொருளாதார சமூகப் பாதுகாப்பு தேவைகளின் காரணம் பற்றித் தாய்வழித் தலைமுறைக் குடும்பம் எழுந்தது என்பர். பிறகு ஆடவ னுடைய கைப்பற்றும் ஆர்வம் சொத்துரிமை ஆதிக்கம், வாரிசுரிமை போன்ற காரணங்களினால் ஆண்வழித் தலைமை தோன்றி ஒருதார மணமுறை வலி யுறுத்தப் பெற்றது. ஒருதாரக் குடும்ப முறைக்கு முன்பாகப் பல்வேறு குடும்ப முறைகள் வழக்கிலிருந்தமையை அறிஞர்கள் விளக்கியுள்ளனர். இரத்த உறவுக் குடும்பம், இணைக் குடும்பம் முதலிய குடும்ப நிலைகளின் வளர்ச்சி நிலை யில் ஒருதாரக் குடும்பம் தோன்றியது.

குடும்பம் என்பது ஓர் இயக்கமுள்ள நிறுவனம், அது சமூக வளர்ச்சியில் ஒரு காலக்கட்டத்தில் தோன்றியது, பொருளாதார நிலைகள் அடியொற்றியது என்பன அறிஞர்களின் கருத்துரையாகும்.

### கூட்டுக்குடும்பம்

கணவன், மனைவி, பிள்ளைகள் அடங்கிய குடும்பம், தனிக்குடும்ப அமைப்பு எனவும், இவர்களோடு அவர் தம் பெற்றோர், சகோதரர்கள் மற்றும் பலர் அடங்கிய குடும்பம் கூட்டுக்குடும்ப அமைப்பு எனவும் குடும்ப அமைப்பு எனவும் இருவகைப்படும்.

தாய், தந்தை, பிள்ளைகள் அடங்கிய குடும்பம் நடுவணுக் குடும்பம் (Nuclear family) அல்லது முதனிலைக் குடும்பம் (Primary family) அல்லது உடனடி குடும்பம் (Immediate family) என வழங்கப்படும் இவர்களோடு உறவினர் சேர்ந்த குடும்பம் விரிந்த குடும்பம் (Extended family) எனப் பெறும். இவ்வுறவு முறையே நெருங்கிய உறவு கொண்டது, தூரத்து உறவு கொண்டது என இருவகைப்படும்.

இந்தியச் சமூக அமைப்பில் கூட்டுக்குடும்பம், தனிக்குடும்பம் எனும் இரு அமைப்புகள் இருந்தன என்று ம.சு,கோபாலகிருஷ்ணன் (1963) கூறு கிறார்.[20] ஆரியரின் ஆதிகுடும்பம் கூட்டு குடும்பமாக இருந்தமையை வேதங் கள் விளக்கியுள்ளன. பாடகர் இனத்து ஆண்கள் திருமணம் செய்து கொண்டு பிரிந்து செல்வர் பெற்றோருடன் கடைசி வரை இருந்து காப்பாற்றும் பொறுப்பு இளைய பிள்ளைக்கு உரியது. (எட்கர் தர்சன் 1986) சங்கத் தமிழரின் குடும்பம் தனிக்குடும்ப அமைப்பினை உடையது. [21]

### குடும்பத்தின் பன்முகத் தன்மை

மனிதச் சமூகத்தின் முக்கியமான நோக்கம் மனித இனமும், சமூக வாழ்வும் தொடர்ந்து நிலை பெற்றிருக்க வேண்டும் என்பதே. இந்த நிலை யைப் பேணிக் காக்க வேண்டுமானால் மனித இனத்தவர் ஒவ்வொரு தலை முறையினரை உருவாக்க வேண்டும். மனித சமுதாயத்தில் தோன்றி வளர்ந்

துள்ள மிகப் பழமையான நிறுவனமாக குடும்பம் விளங்குகிறது. மனிதச் சமுதாயத்தைக் கட்டியமைக்கும் முக்கிய அலகாகவும் மனிதர்களின் பண்பாட்டைப் பேணிக் காக்கும் ஆதாரக் களமாகவும் அமைகிறது.

ஆதிமனிதன் தொடங்கி இன்றைய வரையிலும் காலத்தளத்தை வென்று நிற்பதாலும் தொல்குடி முதல் நாகரிகச் சமூகம் வரை காணப்படும் சம காலத் தளத்தின் வேறுபட்ட பண்புகளை வென்று நிற்பதாலும் குடும்பம் என்னும் நிறுவனமானது பல பொதுப் பண்புகளைப் பெற்றுள்ளது. குடும்ப அமைப்பானது சமூகத்திற்குச் சமூகம் பண்பாட்டிற்குப் பண்பாடு வேறுபட்டதாகவும் உள்ளது. இவ்வேறுபாடுகள் சாது, வர்க்கம், சமயம், இனம், வரலாற்றுப் பின்புலம் ஆகிய பொதுவான அடிப்படைகளில் காணப்படுகின்றன.

குடும்பம் என்னும் நிறுவனமானது, உலகளாவிய அமைப்பாகவும் பல பொதுப் பண்புகளைக் கொண்டதாகவும், மாறுபட்ட தன்மைகளைக் கொண்டதாகவும் உள்ளது. தனிமனிதர்களே சமுதாயத்தைக் கட்டியமைக்கிறார்கள். தனிமனிதர்களுக்கும் சமுதாயத்திற்கும் இடையே ஒரு இயைபு பெறாத முரண்பாட்டு போக்கும் கூட உள்ளது. தனி மனிதர்களின் வாழ்வியல் போக்கு வேறு வகையில் காணப்படுகிறது. தனிமனிதன் மற்றும் சமுதாயப் போக்குகளின் கருத்தியல் நிலைகளில் முரண்பாடு காணப்படும். குடும்பம் என்னும் நிறுவனத்தின் இயல்புகளின் மீது தனித்த பண்புகளை ஏற்படுத்துவதாகும்.

### குடும்பத்தின் பணிகள்

குடும்பத்தின் அமைப்பு, செயல்பாடுகள் ஆகியவற்றில் பன்முகத் தன்மை உள்ளது. அதன் பணிகளிலும் பன்முகத்தன்மை காணப்படுகிறது. குடும்பம் தனிமனிதருக்காகவும், சமூகத்திற்காகவும் பெரும் பங்காற்றுகிறது. பன்முகப் பணிகளுள் பாலியல், இனப்பெருக்கம், பொருளாதாரம், கல்வி

ஆகிய நான்கு பணிகள் முதன்மையானது என்று லெவியும், பாலர்சும் கூறு கின்றனர்.[16]

ஹெலன் பொசான்கு என்பவர் குடும்பமானது அன்பு செலுத்தும் இடமாகவும் பொழுது போக்கிடமாகவும், பொருளாதாரப் பணியிடமாகவும் கல்வியளிக்கும் இடமாகவும் விளங்குவதாகக் கூறுகின்றார். [22]

கூட்டுக் குடும்பங்கள் தனிக்குடும்பங்களாக மாறும்போது பொருளா தார நிலையிலும் மாறுதல்கள் ஏற்படுகிறது. சொத்துகள் பங்கிடப்படுவதையும் வருவாயின் தன்மை வேறுபடுவதையும் காணலாம்.

**இல்வாழ்க்கை**

இல்வாழ்க்கை என்பதே மனிதன் பக்குவப்படும் தளம் என்பதால் பல துன்பங்கள் வந்து சேர்வது இயற்கை.

குடும்ப வாழ்வின் மற்றவரோடு கூடி வாழும் வாழ்க்கையில் சக மனித ரின் உணர்வுகளையும், சுக துக்கங்களையும் பகிர்ந்து கொள்ளும் போது சகிப்புத் தன்மையும், பிறர் மீது அன்பும் அரவணைப்பும் கொள்ளும் மனப்பக்குவமும் பெறப்படுகின்றது. உலக வாழ்க்கையில் இல்லறம், துறவறம் என்ற இரண்டு நிலைகளும் எதிரெதிர் தன்மையை கொண்டவை. அவற்றுள் துறவறம் என்பது தவத்தின்பால் செல்லும் தனிமனித விழுமியமாகும். வான்முகியார் என்னும் புலவர் இல்லறத்தையும் துறவறத்தையும் சீர்தூக்கிப் பார்த்து தவத்திற்கு உள்ள பெருமையில் சிறு கடுகு போன்றது. உலக வாழ்க்கையான இல்லற வாழ்க்கை என்று குறிப்பிடுகின்றார்.

**வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு**
**ஐயவி அனைத்தும் ஆற்றாது (புறம். 358)**

இல்லறம் என்ற சிறு கடுகு போன்ற வாழ்க்கையினாலேயே மனித மனம் பக்குவமடையாததோடு கூட்டுணர்வையும் வாழ்க்கை ஒத்திசைவையும் ஏற்படுத்துகின்றன. தனிமனிதன் குடும்பம் சமூகம் என்ற கட்டமைப்பில் தனிமனிதன் சிறக்கக் குடும்பம் என்று கூறுவதற்குப் பொருத்தமானதாகும்.

**மனைவிளக்கு**

வயது முதிர்ந்த பிசிராந்தையார் என்ற புலவருக்கு தலை மயிர் நரைக் காதலைக் கண்டவர்கள் அதற்குரிய காரணத்தை வினவியபோது அதற்குப் பல காரணங்களைக் கூறும் புலவர் தம் மனைவி மனையறம் சிறப்புறுதற்கேற்ற பண்பாடுகள் நிறைந்தவள் என்பதை முதற்காரணமாகக் குறிப்பிடுகிறார். 'மாண்ட என் மனைவி என்கிறார். என் மனைவி இல்லறத்திற்குரிய மாட்சிமை நிறைந்தவள் ஆதலின் அவர் எள்ளவும் துன்பமின்றி இன்பமாக வாழ்ந்தார் என்பதும் அதனால் அவருக்கு நரை தோன்றவில்லை என்பது கருத்தாகும். [23]

தன் அரசனுக்குப் பகைவரால் துன்பம் நேரின் தன் அரசர் படைக்கே அரணாக விளங்கும் இணையற்ற ஒரு வீரனை,

***மனைக்கு விளக் காகிய வாணுதல் கணவன் (புறம். 314)***

என்று ஐயூர் முடவனார் என்னும் புலவர் கூறுகிறார்.

தன் அரசனையே பகைவரிடமிருந்து பாதுகாக்கும் பெரு வீரனாயினும் அவனுக்குப் புகழைத் தருபவள் இல்லத்திற்குரிய மாண்புகள் எல்லாம் நிறையப் பெற்று மனைக்கு ஒளி விளக்காக விளங்கும் அவன் மனைவியே என் பதை புறநானூறு உணர்த்துகிறது. ஒரு குடும்பம் ஒளிர்வதற்கேற்ற மனைவி யின் பண்பாடுகளைப் புறநானூறு அறிவுறுத்துகிறது.

மனைமாட்சி

கணவனும், மனைவியும் கூடி அறம், பொருள், இன்பம் வழுவாமல் வாழும் வாழ்க்கை இல்லறமாகும். தலைவன் தன் குலப் பெருமை விளங்க மனை வாழ்க்கை நடத்துவாள் என்பதை நன்னெறிப்படரும் தொன்னலம் என்கிறார் தொல்காப்பியர். [24]

கற்பியல்-184

சேரமான் குடக்கோர் சேரல் இரும்பொறையைக் காண வருகிறார். பெருங்குன்றூர்கிழார். தம் மனைவி வறுமையால் துன்புறுவதைப் பொறுக்க இயலாது வந்ததாகக் கூறுகிறார். [25]

**மனைத்தொலைந் திருந்த வெண் வானுதற் படர்ந்தே**

என்றார் வறுமையால் வாழும் தன் மனைவியின் துன்பத்தைக் கண்டு அதைத் தீர்த்தற் பொருட்டுப் பெருந்தலைச்சாத்தனார் குமணனிடம் வந்தாகப் பாடு கிறார்.

**மனையோள் எவ்வம் நோக்கி நினைகி**
**நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண (புறம். 164, 7-8)**

அன்புப் பெருக்கினால் மனைவி பல் வகையிலும் மாண்புடையவளாக விளங்குகிறாள்.

கணவன் மனைவியர் மேற்கொள்ளும் இல்வாழ்க்கை அறம், பொருள் இன்பங்களால் சிறப்புறும். இம்மூன்றாலும் தன் குடிப்பெருமை விளங்கத் தலைவன் மனை வாழ்க்கை நடத்துவான் என்பதை,

***நன்னெறிப் படரும் தொன்னலம் (தொல். பொருள். கற்பு. 1092)***

*என்று தொல்காப்பியம் குறிக்கின்றது.*

*சோழன் நலங்கிள்ளிக்கு முதுகண்ணன் சாத்தனார் என்ற புலவர் கூறும் நல்லுரையில்,*

***அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்***
***ஆற்றும் பெருமிறின் செல்வம்***
***ஆற்றாமை நிற் போற்றாமையே (புறம். 28, 15-17)***

*என்று அறிவுறுத்துகிறார்.*

*எல்லா அறங்களுக்கும் அன்பே அடிப்படை என்பதை வள்ளுவர்,*

***அறத்திற்கே அன்பு சார்பென்ப (குறள்-6)***

*என்று கூறுகிறார்.*

*அன்புடைமை அதிகாரத்தில் இல்லறம் இனிது நடத்தலும், பிற உயிர் கள் மேல் அன்பு பிறத்தலும் அன்பின் பயனாதலின் இவை வேண்டப்பட்டது எனலாம். கணவன் மனைவியிடத்து வேரூன்றி வளரும் அன்பு நாளடைவில் தம் மக்கள், உற்றார், உறவினர், சமுதாயத்தினர் ஆகிய பலரிடமும் பரவி அமைந்து பல அறங்களுக்கு வழிகோலுவதாகும் என்பர்.*

*போருக்கு வீறிட்டெழுந்த பூதப் பாண்டியன்,*

***அவர்ப்புறங் காணே னாயின் சிறந்த***
***பேரமர் உண்கண் இவளினும் பிரிக (புறம். 71,5-6)***

என்று கூறும் வஞ்சினம் மனைவியைப் பிரிதல் மிகப்பெரிய கொடுமை என விளக்குகின்றது.

அரசர்களைப் போல புலவர்களும் மனைவியரிடத்துத் தாம் கொண்டிருந்த அன்பினைப் புலப்படுத்தியுள்ளனர். வறுமையால் வாடும் தன் மனைவியின் துன்பத்தைக் கண்டு அதனைத் தீர்த்தற்பொருட்டு வந்தாகக் குமணனிடம் கூறுகிறார் பெருந்தலைச்சாத்தனார்.

**மனையோள் எவ்வம் நோக்கி நினைகி**

**நற்படர்ந் திசினே நற்போர்க்குமண (புறம். 164,7-8)**

என்ற புறநானூற்றுத் தொடர்கள் விளக்குகின்றன.

கணவன்மார்கள் தத்தம் மனைவியரிடம் காட்டிய அன்பைப் போல, மனைவியரும் தத்தம் கணவன் மார்களிடம் அன்பு செலுத்தி இல்லறம் நிகழ்த்தியுள்ளனர். கணவன் பிரிவிலேயே அன்பு பெரிதும் புலப்படுகின்றது.

**மனை வாழ்க்கை**

மனை வாழ்க்கையில் ஒத்த அன்பு, கணவன், மனைவியர் இருவருக்கும் உரிய பண்பாகும். ஒத்த பண்பையே ‘காதல்’ என அழைத்தனர்.

**யாக்கைக்கு**

**உயிரியைந்தன்ன நட்பின் உயிர்**

**வாழ்தல் அன்ன காதல்**

**சாதல் அன்ன பிரிவு அரியோளே (அகம்-339, 11-14)**

என்பது உத்தமக் காதல் வாழ்க்கையின் இலட்சியத்தைப் புலப்படுத்துகிறது. காதல் வாழ்வில் இருவரும் பிரியாது கூடி வாழ்தலையே பெரும் பேறாகக்

கருதினர். வறிய வாழ்க்கை வந்தாலும் பிரியா வாழ்க்கையே பெருமை தரும் வாழ்க்கை என்று அறிவுறுத்தப்படுகின்றது.

**வாழ்க்கை வகை**

உலக வாழ்க்கை, இல்லறம், துறவறம், தனி வாழ்க்கை என மூவகைப் படும்.

ஒரு கற்புடைப் பெண்ணை மணந்து இல்லத்திலிருந்து அறஞ்செய்து வாழும் வாழ்க்கை இல்லறமாகும். உலகப் பற்றை ஒழித்து வீடுபேற்று முயற்சி யில் ஈடுபடுவது துறவறமாகும். மானஞ்செய்யாது உலகப் பற்றோடு தனியா யிருப்பது தனி வாழ்க்கை, இவற்றுள் இல்லறத்தையே சிறந்ததாகக் கொண்ட னர் தமிழர். இறைவன் மக்களை ஆணும் பெண்ணுமாய் படைத்தார். அவர்கள் கூடி வாழ்தற் பொருட்டே இல்லறத்தாலும் ஒருவர் வீடு பேற்றை அடைய முடியும்.

***அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்***
***போ ஒய்ப் பெறுவது எவன் (குறள். 46)***

என்றார் அற நூலாசிரியர் திருவள்ளுவர்.

***இல்லற மல்லது நல்லற மன்று***

என்றார் ஔவையார்.

**சங்க காலத்தில் பெண்களின் நிலை**

பெண்ணுக்கு இல்லத்தில் எத்தகைய இடம் தரப்பட்டுள்ளது என்பதைக் கண்டறிவதுதான் அவனுடைய உரிமையை அந்தக் காலத்தில் அறம் விடுவ தற்கு ஏற்ற வழியாகும். ‘இல்லாள்’ என்று பெண் அழைக்கப் பட்டாள். ‘வாழ்க் கைத் துணை நலம்’ என்றும் குறிப்பிடப்படுகிறாள். மனைக்கு உரியவள்

என்பதால் ‘மனைவி’ என்றும் சுட்டிக்காட்டப்படுகிறாள். இவ்வாறு மனைவி ‘இல்லாள், வாழ்க்கைத்துணை ஆகிய சொற்களால் அவள் எட்டப்படுவதி லிருந்து எவ்வாறு வாழ்க்கையில் மிக இன்றியமையாத பங்கை அவள் பெற்றி ருந்தாள் என்பதை உணர முடிகிறது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் பெண்கள் இல்லறத்தில் சிறப்பான பங்கை ஆற்றியிருக்கிறார்கள். இல்லறத்தில் பெரும் பங்கை ஜே.ஞானம்பாள் குறிப்பிடுகிறார். [26]

நிறைந்த பெருமைகளை அவளுக்குச் சூட்டிய போதும் ஆடவர் செய்த தவறுகளால் அவள் அமைதி குலைந்து வாழ்ந்திருப்பதற்கு வாய்ப்பு இருந்திருக் கிறது என்பது உண்மைதான். இருப்பினும் ‘ஊடல்’ என்ற ஒன்றைத் தவிர மிகப் பெரிய கருத்து வேறுபாட்டையோ, சண்டையையோ இல்லற வாழ்க்கையில் பெண்கள் நிகழ்த்தியதாக சான்றுகள் கிட்டவில்லை. இக்கருத்தை அரண் செய்வது போல் அ.ச.ஞானசம்பந்தன் அமைதி இல்லாத வாழ்வில் பண்பாடு, நாகரிகம், குறிக்கோள் என்பன தோன்றாமல் தோன்றினாலும் நிலைத்து வராது என்கிறார். [27]

மேன்மைத் தன்மை வாய்ந்த பெண்கள் மென்மைத் தன்மை காரணமாக இல்லறத்தில் புறக்கணிக்கப்பட்டிருக்க கூடுமோ, என்ற ஐயத்திற்கும் சங்க இலக்கியம் சரியான விடையைச் சுட்டிக் காட்டுகிறது. உடலால் பெண் மென்மைத் தன்மை பெற்றிருந்தபோதிலும் உணர்வுகளால் அவளது வன்மை மதிக்கப்பட்டே இருந்திருக்கிறது. இதை கே.கே.பிள்ளை மகளிர் தம் உடல் மென்மை கருதியும் எதிர்த்து நிற்கும் ஆற்றலின்மை கருதியும் மகளிர் அனு தாபத்தோடு கவனிக்கப்பட்டார்கள் என்று சுட்டுகின்றார். [28]

சமுதாய மேம்பாடு

*சங்க காலச் சமுதாயத்தின் வாழ்க்கைக் கூறுகளை அகம், புறம் என்னும் இரண்டு பிரிவுகளுக்குள் அடக்கிக் கூறுகின்றன. சங்க இலக்கியங்கள் குடும்பம் சார்ந்தன என்றும் அறக் கடமைகள் சார்ந்தன என்றும் நம்வாழ்வில் இரு கூறுகள் உள்ளன. இச்சமுதாய அடிப்படையிலேயே அகம் (காதல் - கணவன் - மனைவி - உறவு - குடும்பம்) என்றும் புறம் போர் (போர் ஆட்சி - புறக்கடமை கள்) என்றும் இருபிரிவாயின. அகம், திணை நில அடிப்படையிலும் புறம் சமுதாய வாழ்வு அடிப்படையிலும் பிரிவுப்பட்டன (2008;85) என்கிறார்.*[29]

*ஒரு சமுதாயத்தின் உயர்ந்த பண்பாட்டிற்கு அளவுகோலாக விருந்தோம் பல்தான். இவ்விருந்தோம்பலின் சிறந்து விளங்கியவர்கள் சங்க காலப் பொது மக்கள் என்பதை,*

***நீரின்றமையா யாக்கைக் கெல்லாம்***
***உண்டி கொடுத்தோருயிர் கொடுத் தோரே (புறம். 18–19)***

*என்று புறநானூறு கூறுகிறது.*

*குதிரை பூட்டிய தேரில் ஆரவாரித்துக் கொண்டு வரும் விருந்தினரை எதிர்கொண்டால் எந்நாளும் புலவியை மறப்பேன் என்று கூறும் பெண்ணைக் கலித்தொகையும் (கலி-75, 16-17) இல்லம் நாடி வந்த விருந்தினரை ஓம்பத் தன் பழைய வாட படையை ஈடாக வைத்ததைப் புறநானூறும் (புறம்-31,5-6) எடுத்துக்காட்டும். ஒரு தலைவி நடுகல்லை வணங்கி நான் விருந்து பெறுவே னாக (புறம்-306,3-5) என்று வேண்டுவதைப் புறநானூறு கூறும்.*

### அகத்திணையும் சமுதாயப் பின்னணியும்

திணை மரபு என்பது கவிதை, மரபு மட்டுமில்லை. அது சமுதாய மரபாகும். இந்தச் சமுதாய மரபை, சமுதாயப் பின்புலத்தை ஐந்திணைக் கோட்பாடு வெளிப்படுத்துவதை காண முடிகிறது.

மலைக்குப் புணர்ச்சியையும், பாலைக்குப் பிரிவையும், காட்டுக்கு இருந்தலையும், கடற்கரைக்கு இரங்கலையும் பண்டையோர் கொண்டதற்குத் தொல்காப்பியத்தில் அதன் உரையிலாவது ஏற்புடைய காரணம் காண்டல் அரிதாம் என்ற இராகவய்யங்காரின் கருத்தை முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியும்.

இராகவையங்கார் ஒழுக்க முறைகள் திணைக் கோட்பாட்டோடு தொடர்புடையவை என்றும், ஒவ்வொரு ஒழுக்க முறையும் ஒரு நிலப் பகுதிக்குத் தேவையானதொன்று என்றும், அக்காலச் சமுதாயத் தேவைகளுக்கு இல்வொழுக்க முறைகள் தொடர்புடையன என்றும் இத்தொடர்புகளாலேயே இலக்கிய மரபுகள் தொல்காப்பியர் வருணித்த முறையில் வளர்ச்சி பெற்றன என்றும் கூறுகிறார். (2003-280) பி.டி.சீனிவாச ஐயங்கார், இராமச்சந்திர தீட்சிதர், தனிநாயக அடிகள் போன்றோர் கருத்துகளை எடுத்துக்காட்டி திணைக்கோட் பாடு சமுதாய வாழ்வியல் அடிப்படையில் எழுந்ததைக் குறிப்பிட்டுக் காட்டி யுள்ளார்.[30] மலையில் தொடங்கிய வாழ்வு சமதளம் நோக்கியும் வளமான வாழ்விடம் நோக்கியும் படிப்படியாக வளர்ந்த வளர்ச்சியே ஐந்திணை வாழ்வு என்பது பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்தாகும்.

நிலப்பரப்பின் இந்த ஐந்து இயற்கைப் பிரிவுகளும் தமிழ்நாட்டில் சிறுசிறு அளவிலேனும் காணப்படுகின்றன. தென்னிந்தியர் ஒரு நிலப்பிரிவி லிருந்து பிறிதொரு நிலப் பிரிவிற்கு பரவி வாழ்ந்தமையால் அந்நிலப்பரப்பு ஒவ்வொன்றும் உருவாக்கி அளித்த நாகரிகத்தை படிப்படியாக வளர்த்துள்ள

னர். மனிதன் பண்டு கடந்து வந்த நாகரிகத்தின் படிக்கட்டுகள் ஐந்தாகும். அவை வேட்டையாடுதல், நாடோடி வாழ்க்கை, கால்நடை மேய்த்தல், கடல் மேற்சேறல், தொழில் மயக்கம் கலந்த உழவுத் தொழில் மேற்கோடல் இவை முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதத் திணைக்கு நிகராகும். ஒவ்வொரு நிலப்பிரிவையும் சார்ந்த இயற்கை வளங்கள் இயல்புகள் நிலத்திற் குரிய நாகரிக வளர்ச்சிக்குத் தூண்டுதலாய் அமைந்தன. (1989,15-16)

'சங்க கால வாழ்வியல்' (1986) என்னும் நூலில் என்.சுப்பிரமணியன் சீனிவாச ஐயங்காரின் கருத்தை மறுத்துள்ளார். இந்நிலங்கள் முறையே வேடர், கள்ளர், இடையர், மீனவர், உழவர் என்பார் வாழிடங்கள் இவ்வாறு அமைக் கப்பட்ட ஒரு சமுதாய ஏற்பாடு தென்னிந்திய நாகரிக வளர்ச்சியின் வரலாற் றைத் தோற்றுவதாக அவர் கண்டார். வேடர், இடையர், மீனவர், கள்ளர், உழவர் என்போர் இன்று போலவேதான் அன்றும் ஒருவர் பக்கலில் ஒருவராக வாழ்ந்தனர். முதலில் மலைப்பகுதியில் தொடங்கிய வாழ்வு பின்னர் படிப்படி யாக சமநிலம் நோக்கி வந்து வளர்ந்து ஏற்புடையதாக இல்லை. சங்க இலக் கியச் சான்றுகளே இதை மறுப்பதற்கான ஆதாரங்களாக அமைகின்றன. பத்துப் பாட்டின் ஆற்றுப்படைப் பாடல்களும், மதுரைக்காஞ்சியும் ஏக காலத்தில் நானில வாழ்வு நிலவியதைக் காட்டுகின்றன.

**கற்பு - விளக்கம்**

அன்றைய கற்பு என்பது மரபுப்படியும், சடங்கு முறையுடனும் தலைவி யின் உறவினர் மணம் செய்து கொடுப்பர். உறவினர் இல்லாதபோது சடங் கோடு கூடிய திருமணம் நடைபெறும். கற்பென்று சிறப்பித்துச் சொல்லப்படு வது சடங்கோடு பொருந்திக் கொள்ளுதற்குரிய மரபினையுடைய தலைவன் கொள்ளுதற்குரிய மரபினையுடைய தலைவியைக் கொடுத்தற்குரிய தலைவி யின் தமர் மணம் செய்து கொடுப்ப மணந்து கொள்ளுதலாகும்.

தலைவன் தலைவனுடன் சேர்ந்து உடன்போக்கில் சென்றவிடத்துக் கொடுத்தற்குரிய தமர் இல்லாதவிடத்தும் சடங்கோடு கூடிய மணம் நடை பெறுதல் உளதாகும். இவற்றிலிருந்து இன்று பேசப்படும் கற்பு அன்று உயர் குடியில் நிலவவில்லை. களவொழுக்கத்திலேயே பாலுறவு நிகழ்ந்து விடு கிறது. பின்னர் சடங்குமுறை, கணவன் மனைவி என்ற குடும்ப உறவு சொத் துரிமைக்கு முக்கியமாகிறது. இன்றும் சடங்கு முறை கணவன், மனைவி, குடும்பம், சொத்துரிமை வாரிசுக்குக் குழந்தை என்ற நிலை நீடிக்கிறது.

காமக் கிழத்தியைத் தலைவன் வைத்திருத்தல் பரத்தையரிடம் செல்லல் அன்று நடைமுறையாயிருந்தது. இன்றும் செல்வந்தரிடம் தொடர்கிறதைக் காணலாம். காமக்கிழத்தியும் பரத்தையும் சொத்துரிமை பெற முடியாது.

தொல்காப்பியம் கூறும் சமூகம் ஆணாதிக்க சமூகம் என்பதில் சந்தேக மில்லை. உயர்குடியினருடன் மட்டுமே பழகினார். அவர்களின் நெறியற்ற வாழ்க்கையையே எழுதினர். சிறுபான்மையினரான உயர்குடிப் பிறந்த வரையே தலைவன் தலைவியையும் தன் நூலில் கொண்டுள்ளனர். அவர்கள் வாழ்க்கையே பொதுமைப்படுத்தினர். பொதுமக்கள் வாழ்க்கை அவ்வா றில்லை, காமக்கிழத்தியர், பரத்தையர் உயர்குடியினருக்கு மட்டும் அனுமதிக் கப்பட்டனர். இவர்களுக்குச் சொத்துரிமை கிடையாது. சடங்குடன் கூடிய திருமணமே சொத்துரிமைக்கு முக்கியமாகும். காமக்கிழத்தியர், பரத்தையர் உயர்குடிப் பிறந்தவர் எனக் கூறிவிட முடியாது. பொருள் தேட அரசுப்பணி காரணமாக தலைவன் பிரிந்திருக்கும் காலம் வரை தலைவியின் ஏக்கம் கற்பனையாக ஆண் புலவரால் கற்பிக்கப்பட்டிருக்கலாம்.

### மரபும் சமூகமும்

மரபு பழமை அல்லது தொன்மை என்ற பொருளில் எழுதப்படாத சமூகச்சட்டமாக இருந்து வருகிறது. ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிய ஒன்றாக

ஒரு சமூகத்தினரின் பண்பாட்டைக் கட்டிக் காப்பதற்காக அவ்வச் சமூகத் தாராலேயே பழங்காலத்தில் உருவாக்கப்பட்டு காலங்காலமாக நடைமுறை யில் இருந்து வருவதாகும். மக்கள் தலைமுறை தலைமுறையாகக் குழுவாகச் சேர்ந்து கற்பித்துக் கொண்ட நடத்தை முறைகளும் நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் சேர்ந்த தொகுதியே மரபு என்று சமூக விஞ்ஞானிகள் விளக்கம் தந்துள்ளனர். [31]

கேட் மில்லட் என்ற பெண்ணியவாதி மரபு மற்றும் பண்பாடு அடிப் படையிலான கருத்துருவம் என்பது மேலாதிக்கம் செய்யும் குழுவினரின் தேவை மற்றும் மதிப்புகளுக்கேற்ப ஆண்களை அழிவு போர், ஆற்றல், சக்தி, திறமை போன்ற பண்புகள் உள்ளவர்களாகவும், பெண்களை அமைதி, அறி யாமை, கற்பு போன்ற பண்புள்ளவர்களாகவும் உருவாக்கியுள்ளது என்பர். [32]

மரபு நோக்கில் இன்றைய சமூகம் எதிர்கொள்ளும் பழக்க வழக்கங்கள் முந்தைய தலைமுறை ஏற்படுத்தி வைத்து காலங்கடந்தும் நிற்கும் காரணத் தினால் தொடர்ந்து பெரிதும் பின்பற்றி வரப்படுகின்றன. மரபு மாற்றம் உடை யது. அதுபோல மரபு என்ற சொல்லின் பொருளும் சிற்சில மாற்றங்களைக் கண்டாலும் பழமை, தொன்மை என்ற மூலத்தினை ஒட்டியதாகவே கருதலாம். காலம் கடந்து நின்ற பழக்க வழக்கங்கள் மரபாக ஏற்கப்படுகின்றன என்பதை அறிய முடிகிறது.

மரபு குடும்பத் தளத்தில் அதிகம் கட்டிக்காக்கப்படுகிறது. பெண்ணின் பிறப்பு, வளர்ப்பு, உணர்வு, உடை, நடத்தை வெளிப்பாடு, இயங்குவெளி, திருமணம், குடும்பப்பாங்கு, நிலை என்ற அனைத்து நிலையிலும் மரபின் ஆட்சியில் பெண் சிறைப்பட்டிருக்கிறாள். மரபுப் பழக்க வழக்கங்கள் ஒவ்வொரு சமூகத்திலும் ஆண்களுக்கு வேறாகவும் பெண்களுக்கு வேறாகவும்

கட்டமைக்கப்பட்டு குடும்பத்திலும் சமூகத்திலும் இருவருக்கும் தனித்தனி பங்கு நிலைகளையும் தகுதிகளையும் வரையறுத்து உள்ளன.

மரபும் மரபுசார், பண்பாடும் இருபாலருக்கும் உரியனவாக உணரப் பட்டாலும் இவ்விரண்டும் காலங்காலமாகப் பெண்களிடத்தில் தான் அதிகம் வற்புறுத்தப்பட்டு வருகின்றன. ஆண்களின் பண்பாட்டை எதிர்நோக்கும் சமூகம் அவர்களுக்குக் கட்டாயமாக அதனை வற்புறுத்தவில்லை. ஆனால் பெண்களுக்கு மரபும் பண்பாடும் வற்புறுத்தப்படுகின்றன. ஒரு சமூகத்தின் மரபும் பண்பாடும் காக்கப்படுவது சமூகப் பெண்களிடமே உள்ளதாகவும் நம்பப்படுகிறது.

பெண்களின் வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரை பல மரபு சார்ந்த பழக்க வழக்கங்களும் சட்ட திட்டங்களும் கடைப்பிடிக்கப்படுகின்றன. சிறு வயதிலேயே மரபு குறித்த செய்திகளைத் தாய்வழி அடிமைப்படப் போவதைத் தாம் உணராமலேயே தம் உரிமையை விட்டுக் கொடுத்து வருகின்றனர்.

தேவையற்ற சடங்குகள் கூட மரபின் பெயரால் நடத்தப்படுகின்றன. மரபை மீறக்கூடாது, என்பதுவே ஒரு மரபாக ஆகி இருக்கின்றது. பெண்கள் கடைப்பிடிக்கின்ற மற்றும் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளாகச் சில வற்றை இன்னும் வழக்கில் பயன்பாட்டில் வைத்துள்ளனர்.

### பண்பு

தொல்காப்பியர் தலைவன், தலைவியைப் பெயர் கூறிச் சுட்டாவிட்டா லும் அவ்விருவருக்கும் சில பண்புகள் பொருந்தியிருத்தல் வேண்டும் என்பர். பிறப்பு, ஒழுக்கம், ஆண்மை, வயது, உரு, அன்பு, நிறை, அருள், செல்வம் என்று பத்து வகைப் பண்புகள் ஒத்தவராகத் தலைமக்கள் இருத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் வலியுறுத்தும் மரபாகும்.

பழமை

தமிழிலக்கியம் மூவாயிரம் ஆண்டுகளாக இருந்து வரும் மரபுகளை உடையது எனலாம். இன்றுள்ள பழைய இலக்கண நூலாகிய தொல்காப்பியம் இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது. அந்நூல் இலக்கிய மரபு களைப் பற்றிக் கூறியுள்ளது.

**நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**

***பாடல் சான்ற புலனெறி வழக்கம் (தொல்.பொருள்.அக. 999)***

என்று தொல்காப்பியர் கூறியது கற்பனையும் உண்மையும் கலந்த இலக்கிய மரபாகும்.

காலத்தால் மிகப் பழயனவாய் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் அமைந்தனவாய் இருப்பினும், அந்த மரபுகளில் சில இன்றும் போற்றத் தக்கன வாக இருத்தல் குறிப்பிடத்தக்கது. (எ.கா.) காதல் பாட்டுகள் அகத்திணைப் பாட்டுகளாய்ப் பாட வேண்டும்.

**மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**

***சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர் (தொல். அகத். 1000)***

என்பர்.

அடையாளங்கள்

ஒவ்வொரு இனமும் தங்களுக்குள் தங்களுடையதாகக் கருதப்படும் வாழ்க்கை, பண்பாட்டு அடையாளங்களைக் கொண்டிருக்கும் தமிழர்கள் வாழ்வியலில் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், வழிபாடுகள், விழாக்கள், கலைகள் என பல மரபுவழி அடையாளங்களைக் கொண்டுள்ள னர். இவ்வடையாளங்களைத் தம் பண்பாட்டோடு ஆழமான நெருக்கம் உடை யனவாகக் கருதுகிறார்கள். என் பக்தவத்சல ரெட்டி, ஆறு. இராமநாதன்

ஆகியோர் தனக்கென அடையாளங்களை உள்ளடக்கிய எந்தவொரு குழுவிற்கும் அல்லது சமூகத்திற்கும் பண்டைய காலத்தில் மரபு உரிமைகள் என்பவை அக்குழுவின் அல்லது சமூகத்தின் பண்பாட்டு மதிப்புகள், சமூக அக்கறைகள் மற்றும் நடத்தை முன்மாதிரிகள் ஆகியவற்றைக் கொண்டிலங்கும் முதுகெலும்பு போன்று முக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்றும், கடந்த காலத்தின் பொருள் பொதிந்த மதிப்பீடுகளை நாம் உறவு முறைகளிலும் குடும்ப அமைப்பிலும், நம்பிக்கைகளிலும், பழக்க வழக்கங்களிலும், உணவு முறைகள், இருப்பிடங்கள் ஆகியவற்றிலும் கண்டுகொள்ளலாம் என்கின்றனர்.

திருமணம்

ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் முறையான அற வழிப்பட்ட வாழ்க்கை சிறந்த இல்லறம் எனச் சான்றோரால் போற்றப்படுகிறது. இவ்வில்லறத் தொடக்கத்திற்கான ஆண், பெண் உறவு, இணைப்பு சடங்கு திருமணம் எனப்படுகிறது. படித்த பெண்கள், வசதியுடைய பெண்கள் சராசரிப் பெண்கள் யாராக இருப்பினும் அனைவருமே ஒவ்வொரு வகையிலும் மரபு சார்ந்து சில விதிமுறைகள் காரணமாக இன்னல்களை எதிர்கொள்கின்றனர்.

ஆண்கள் தங்களது ஆணாதிக்க நிலை, பெண் கல்வியின்மை பெண்களின் பெண்மைப் பண்பு எதிர்ப்புணர்வின்மை ஆகியவற்றையெல்லாம் தங்கள் சுயநலத்திற்காக செயற்கையாக பெண்கள் மேல் திணிக்கின்றனர் எனும் கருத்தாக்கம் பெண் அடிமையுறக் காரணத்தை விளக்குவதாக அமைகிறது என்று விளக்குகிறார். பெண் இன்னும் ஒரு பெண்ணாக, மனைவியாக, குழந்தை பெறுபவளாக, குடும்பத்தை நிர்வகிப்பவளாகப் பார்க்கப்படுகிறாள். பெண் ஆணுக்கு நிகர் எனச் சமத்துவப் பேச்சு சில சமயம் எழுகிறது.

மனித வாழ்க்கையில் மூன்று முக்கிய நிகழ்வுகள் ஏற்படுகின்றன. இம்மூன்று நிகழ்வையும் குடும்பம், சமூகம், சார்ந்த சடங்குமுறைகளுடன்

நிகழ்த்து வதையும் காணலாம். ஒன்று பிறப்பு, இரண்டாவது திருமணம், மூன்றாவது இறப்பு இம்மூன்றிலும் பிறப்பும் இறப்பும் அறியாமலே ஏற்பட்டு விடுகிறது.

சமுதாயம் என்பது சமுதாய உறவுமுறைகளால் பின்னப்பட்ட ஒரு வலை எனலாம். இவ்வுறவு முறைகள் குடும்பம் திருமணம் என்றும் சமுதாய நிறுவனங்களால் ஏற்படுகின்றன.

**சான்றெண் விளக்கம்**

1. தமிழண்ணல் தொல்காப்பியம் பொருளதிகாரம், ப. 22
2. உலக நாயகி பழனி (ப.ஆ), இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனை, ப. 40
3. ஞானி, மார்ச்சியமும் தமிழ் இலக்கியம், பக். 3,9
4. ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 50
5. இராசமாணிக்கனர் பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 205
6. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 39
7. ப. பூங்காவனம் குடும்ப உ றவுகள் (ஒரு பெண் நிலை நோக்கு), ப.21
8. ஈ.வே. இராமசாமியின் சிந்தனைகள் பாகம், ப. 85
9. கோ.சுரேஷ், இலக்கியங்களில் வாழ்வியல் சிந்தனைகள், ப. 8
10. சிலம்பு நா.செல்வராசு, பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை, ப. 180
11. மேலது, ப. 181
12. மேலது
13. மேலது, ப. 182
14. சே. மாணிக்கம், திருக்குறள், 12
15. மேலது, ப. 201
16. ப. பூங்காவனம், குடும்ப உறவுகள் (ஒரு பெண் நிலை நோக்கு), ப.21
17. மேலது, ப. 18
18. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 4

19. மேலது, ப. 41
20. தமிழண்ணல், தொல்காப்பியம் பொருளதிகாரம், கற்பு-ப.184
21. செ. பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 29
22. தமிழண்ணல் தொல்.பொருள்.கற்பு, ப. 5
23. மேலது, ப. 22
24. மேலது, ப. 58
25. புறநானூறு, (மூலமும் உரையும்) ப. 72
26. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 35
27. தமிழண்ணல், தொல்காப்பிய பொருளதிகாரம், ப. 35
28. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.19
29. மேலது, ப. 20
30. ஆ.செந்தாமரைகண்ணி, பெண்களும் மரபுகளும், ப. 5
31. மேலது, ப. 5
32. தமிழண்ணல், சங்க மரபு, ப. 98

இயல் ஐந்து

# சங்க இலக்கியப் பிரிவுகள் காட்டும் சமுதாயம்

சமுதாயம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் இனத்தவன் தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்ள ஏற்படுத்திக் கொண்ட ஒரு கூட்டமைப்பாகும். மனிதன் தான் வாழும் சூழலில் சமுதாயத்தில் நிலவும் பண்பாட்டைப் பெறுகின்றான். சமுதாய நடத்தையின் அடிப்படையில் மனிதச் சமுதாய உறவு முறைகள் அமைகின்றன. பல இல்லங்கள் இணைந்ததே சமுதாயமாகும். தனிமனிதனின் பண்பாடே சமுதாயப் பண்பாடாகவும் அறமாகவும் பரவுகிறது. தொல்காப்பியம் காலம் முதல் சங்க இலக்கிய காலம் வரை அறத்தை அடிப்படையாகக் கொண்டே நூல்கள் எழுதப்பட்டன.

### 1. அந்தணர் (பிராமணர்)

நூல்-கரகம், முக்கோல், மனை அந்தணர்க்கு உரியன - மனுதர்மம் வேதம் ஓதல், வேதம் ஓதுவித்தல், வேள்வி இயற்றல், ஈதல், ஏற்றல் ஆகியன அந்தணர்க்கு உரியன.

### 2. அரசர் (சத்திரியர்)

படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர் ஆகியன அரசர்க்குரியன - உலகை ஆளுதல், மக்களைக் காத்தல், கொடை, வேள்வி பயிற்றுவித்தல் எவற்றாலும் ஈர்க்கப்படாத மனத்தில் இருத்தல் ஆகியன அரசர்க்கு உரியன.

3.வணிகர் (வைசிகர்)

வணிகர் வணிக வாழ்க்கையை மேற்கொள்வர், எண் வகை உணவு களை உண்டாக்கும் தொழிலும், வணிகர்க்கு உரியது, வைசியர்க்கு கண்ணியம் உரியன அரசர் வணிகர் இருவர் படைக்கல வகையைப் பெறுவர். செல்வம் தேடுதல், கடல்வினை பொருள் முதலியன கொண்டு வணிகம் செய்தல், தானம் செய்தல் ஆரியரைக் காத்தல் பயிர்த்தொழில் செய்தல் ஆகியன வணி கர்க்கு உரியன.

4. வேளாளர் (நூத்திகர்)

பயிர்த்தொழில் செய்து வாழ்தல் அல்லது பிறவகைத் தொழில் வேளாளர்க்கு இல்லை. பிராமணர், சத்திரியன் வைசியர் ஆகிய மூவர்க்கும் மனம் கோணாமல் பொறாமை இன்றி பணி புரிதல் வேளாளர்க்கு உரியன.

தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் சில சமூகப் பிரிவுகள் நிலவி இருந் தன. ஆயர், வேட்டுவர், கிழவர் என அவர்களை நில அடிப்படையில் பாகு படுத்தித் தொல்காப்பியர் கூறியுள்ளார். ஆயர் முல்லை நிலத்திலும், வேட்டுவர் மலை நிலத்திலும் கிழவர் மருத நிலத்திலும் வாழ்ந்துள்ளனர். இப்பகுப்பு முறையே அன்றி, அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் அறிவன் எனப்படும் கணியர், தாபதர், வீரர் ஆகிய பிரிவுகளையும் புறத்திணை இயலில் தொல்காப் பியர் கட்டியுள்ளார். மேலும் பாணர், கூத்தர், விரலியர் (பொருள்) முதலிய தொல்குடிப் பிரிவினரும் தொல்காப்பியத்துள் இடம் பெற்று உள்ளனர்.[1]

வாழ்வியல்

சங்க காலம் நிலவுடைமையை அடிப்படையாகக் கொண்ட உடைமைச் சமுதாயமாக மாறிய நிலையில் இனக்குழு வாழ்வில் எச்சங்களும் நிலவி யுள்ளன.

குடும்பங்கள் உடைமைப் பாதுகாப்பின் அங்கமாக அமைய வேந்து விடு தொழிலும் பொருள்வயின் பிரிவும் பொருளீட்டலுக்கான ஆதாரங்களாக அமைகின்றன. ஆண், பெண் எனும் இருவரில் ஆணே பொருளாதார ஈட்டலுக் காக மாறுகின்றான். ஆண் வாரிசு என்பதையே முதன்மைப்படுத்தியுள்ளனர். மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே என்பது பெண்ணின் இரண்டாம் நிலைத் தன்மையும் பெண் ஆணைச் சார்ந்தே வாழ வேண்டிய சார்பு நிலையும் வெளிப்படுகின்றது.

தொல்காப்பியர் பிரிவைப் பாலை என்பர். பாலை என்பது ஓர் ஒழுக்கம். அது பிரிவு என்றும் ஒழுக்கத்தைச் சுட்டும். பிரிந்திருக்கும் நிலையிலும் ஒழுக் கத்தைக் கடைப்பிடிப்பது பாலை ஒழுக்கமாகும். பாலையில் பிரிவு இல்லை யென்றால் அன்பு விரியாது, வெற்றி வாராது.

1. இடத்தையும் காலத்தையும் ஒட்டி முதற்பொருள் என்றும் கடவுள் முதல் தொழில் துறையான பொருண்மைகளை பின்பற்றிக் கருப் பொருள் என்றும், கூடல் முதல் பிரிவு ஈறாக உள்ள நிகழ்வுக்களைப் பொருத்து உரிப்பொருள் என்றும் வகுக்கப்பட்டுள்ளன.

2. சினம் மிகுந்த கொற்றவைத் தெய்வம், நன்மதியம், வழிப்போக்க ரிடம் கொன்று பரிக்கப்பட்ட உடைமை, கடின வாழ்க்கையோடு ஒன்றிய காட்டு விலங்கு, வறண்ட நிலத்திலும் தோன்றும் தாவரம், உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பும் பறைக்கருவி நிலையான தொழிலான நிரை கவர்தல் போன்ற கூறுகள் பாலை நில மக்க ளுக்கே உரியவை.

3. நேரிய பின்னணியைக் கொண்ட சங்ககாலச் சமுதாயத்தில் கடமை யும், பொறுப்பும் மிகுந்த படைப்பாளிகளாகப் புலவர் பெருமக்கள் வாழ்ந்துள்ளனர்.

4. தலைவன் தலைவி பிரிவு, நற்றாய்-தலைவி பிரிவு, செவிலிப்பிரிவு என உரிப்பொருள் ஒழுக்கத்தை முற்றிலும் பின்பற்றிய நெறியில் பாலைப்பாடல்கள் அமைந்துள்ளன.

5. தலைவன் தலைவியின் மீதுள்ள பாசத்தைத்தன் உள்ளத்தோடு உரையாடுவதை ஐங்குறுநூறு புலப்படுத்துகின்றது.

6. தலைவி தலைவன்பால் கொண்ட அன்பை பிரிவுத் துயரம் என்றும் களத்தில் ஐங்குறுநூறு வெளிப்படுத்துகின்றது.

7. தோழியர் - தலைவியின் காதல் தீர்க்கும் உற்ற துணையாகவும் தலை வன் தலைவியர் இடையேயான ஊடகமாகவும் செயல்பட்டுள்ள னர் என்பதை ஐங்குறுநூறு காட்டுகிறது.

8. செவிலி தாயரும் நற்றாயரும் தலைவியின் இளமைக்காலம், பாலை நிலக் கொடுமை, காட்டு வாழ்க்கைக்குப் பொருந்தாத தலைவியின் மென்மை போன்றவற்றின் திறன் அறிந்து புலம்பல் மொழி பேசு கின்றமையை ஐங்குறுநூறும், கலித்தொகையும் காட்டுகின்றன.

9. பாலைநில வழிச் செல்வோர் தலைவன் தலைவியரை உடன்போக் கின் போது வாழ்த்தும் அற உணர்வையும் தயார் தம் மகனைத் தேடி வரும் போது ஆறுதல் பேசும் இரக்கச் சிந்தனையையும் பெற்று

விளங்கியுள்ளனர். இந்நிலையைச் சங்கப் பாலைப் பாடல்கள் அனைத்திலும் அறிய முடிகிறது.

10. தலைவர்கள், உணர்ச்சி உள்ளத்துடன் இருப்பினும் தலைவியின் எழிலைத் தரும் பாலை வழியிலும் நினைந்து இன்புறும் பக்குவத் தைக் கொண்டுள்ளார் என்பதை நற்றிணைப் பாடல் காட்டுகிறது.

11. தலைவியர் கூடி இணைந்திருக்கும் இன்பத்தைவிட பிரிவுத் துன் பமே மேலானது எனக் கருதும் வகையில் அவை மிகுந்த பாத்திரப் படைப்பை நற்றிணையில் பாலைப் பாடல்கள் வெளிப்படுத்தி யுள்ளன.

12. தோழியர் அன்பு, காலத்தால் அழியாதது என்பதை வலியுறுத்தும் வகையில் தலைவிக்குப் பிரிவு நிலையில் ஆறுதல் உரைப்பவர் களாக உள்ளனர்.

13. தலைவர்கள் வாழ்க்கை நடத்தத் தேவையான பொருளை ஈட்டு வதற்காகத் தன்னை வருத்திக் கொள்ளும் சூழலிலும் தலைவி மீதான காதல் உணர்வை உள்ளத்தில் ஆழமாகப் பதித்துக் கொண் டுள்ளனர்.

14. தலைவியர், பிரிவுத் துயரில் ஆழ்ந்திருக்கும் நிலையிலும் இயற்கைப் பொருள்களை வாழ்வியல் நோக்கோடு இணைத்தே பேசுகின்றனர்.

15. பாலைத்திணையில் மகளிரின் உள்ளத்தில் தலைவன் செல்லும் வழியின் ஏதமே மிகுதியான கவலை தருகிறது. குறிஞ்சி, நெய்தல்

திணைகளில் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிகிறான். தலைவன் வரைவு நீட்டிக்கிறான். ஒருவழித் தணத்து வருகிறான். அலரோ துன்புறுத்துகிறது. இற்செறிப்பு நிகழ்கிறது. பருவ வரவோ பிரிவுத் துன்பத்தை அதிகமாக்குகிறது. இந்நிலையில் ஆற்றாத தோழியைத் தலைவி ஆற்றுவிக்கிறாள்.

16. குறிஞ்சி, நெய்தல் திணைகளில் தலைவன் களவில் தலைவியிடம் காட்டிய அன்பையும், கற்பில் அது மாறிய நிலையையும் முரண் நிலையில் காட்டித் தலைவனைத் திருத்த முயல்கிறாள் தோழி என்பர். [2]

சங்க இலக்கியத் தோழி தலைவிக்கு வாழ்க்கையின் உண்மைகளை அறிவுறுத்த, மணிமேகலை, சிந்தாமணி காலத் தோழியர் சமயக் கொள்கையை அறிவுரையாக்குகின்றனர்.

### பொருளீட்டல்

### பொருள் பற்றிய சிந்தனைகள்

பழங்காலச் சமுதாயத்தில் பண்டமாற்று வளர்ச்சியடைந்த பின்னர்ப் பொருள் பற்றிய மக்களின் சிந்தனை விரிவடைந்தது. பொருளீட்டும் நோக்கம், பொருளின் தேவை, பொருளின் பயன், பொருளின் தன்மை, பொருளற்றார் இழிவு ஆகியவற்றைப் பற்றி மக்கள் தெளிவாக உணர்ந்திருந்தமையை அறிய முடிகின்றது. குறிப்பாகப் பொருள்வயின் பிரிவு அடிப்படையில் அமைந்த அகப்பாடல்களில் பொருள் பற்றிய தெளிவான எண்ணங்களை உணர முடி கின்றது.

பொருளீட்டும் நோக்கம்

தம்மை நாடி வந்தோரையும் தம் சுற்றத்தாரையும் பாதுகாப்பதை ஒவ்வொருவரும் தம் கடமையாகக் கருதினர். அதற்காகவே பொருளீட்டும் முயற்சிகளில் ஈடுபட்டனர்.

***இரப்போர் ஏந்துகை நிறைய புறப்போர்***
***புலம்பில் உள்ளமொடு புதுவதந் துவக்கும் (அகம். 389, 11-15)***

தம்மிடம் வந்து இரந்தோர்க்கு வழங்கவும் பகைவரின் சிறுமையான சொற்கள் வாளாகவும் தம் புகழை நிலைநிறுத்தவும் பொருளீட்டச் சென்றனர் என அறிய முடிகின்றது.

***... ஈதல் இன்பம் வெஃகி மே வரச்***
***செய்பொருள் திறவர் ஆகி... (அகம். 69, 5-6)***

***சுரனிறந்து அரிய என்னார் உரனழிந்து***
***உண்மலி நெஞ்சமொடு வண்மை வேண்டி (நற். 333, 5-7)***

***இல்லென இரந்தோர்க் கொன் றீயாமை யிளிவெனக்***
***கல்லிறந்து செயல் சூழ்ந்த பொருள் (பாலைக்கலி. 2, 15-16)***

பிறருக்கு வழங்க வேண்டும் என்றும் நோக்கத்திற்காகவே பொருளீட்டப்பட்டது.

பொருளின் தேவை

வறுமையால் வாடும் மக்களின் துன்பத்தைத் தீர்க்க வேண்டும் என்ற அருள் நெஞ்சம் அமைந்திருந்தால் மட்டும் பயனில்லை. அதனைச் செயல் படுத்த பொருளும் தேவை.

ஆர் உயிர் நிற்கும் ஆறுயாது என ஊடல் தீர்ப்பானாகிய ஒரு தலைவன் பேசுகிறான். தலைவன் அறத்தால் பொருள் ஈட்டி, பொருளால் இன்பம் துய்க் கிறான். ஆகவே, அவன் பொருளுக்கு ஏதுவான வினைகளை மேற்கொள் கிறான்.

**செயல்படு மனத்தர் செய்பொருட்டு**

***அகல்வர், ஆடவ ரது வதன் பண்பே (நற். 24, 8-9)***

என்று பெரியோர் கொள்கின்றனர். பொருளால் நல்வாழ்வு வாழ்தலே அவர் தம் இலட்சியம். அதனைக் கொண்டு சுற்றத்தாரையும், இல்லோரையும் புரக்கின்ற னர் கொள் எனக் கொடுக்கும், ஈகை, அறம் வாய்ந்து, இளைஞரையும் முதி யோரையும் புலவர், பரணர், கூத்தர் முதலிய இயல் இசை வல்லாரையும் புரந்தனர்.

அறம் நிலை நிறுத்தவும், ஓதுதற்கும், மன்னன் பொருட்டுப் போரிடைச் சென்று பகை தணித்தற்கும், கலத்திலும், காலிலும் சென்று பொருளீட்டுதற்கு மாக ஆடவர் தம் மனைவியரைப் பிரிந்து செல்லுதல் உண்டு.

**கைதொழு மரபின் கடவுள் சான்ற**

***செய்வினை மருங்கில் சென் றோர் (அகம். 125, 14-16)***

என்று ஓதற்பிரிவு குறிக்கப்படுகிறது. கலத்திலும், காலினும் தருவனர் ஈட்ட நீரினம் நிலத்திலும் மக்கள் சென்று வாணிகம் முதலியன புரிந்து பொருள்

தேடுதலைப் பட்டினப்பாலை முதலியன விரிவாகக் கூறுகின்றன. போரின் பொருட்டாக மறவர் வேலும், வில்லும் தாங்கித் தம் வீரம் மறக்குடித் தாய்,

**வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நண்ணடை நல்கல் வேந்தர்க்குக் கடனே**

என்று தன் மகனுடைய கடமையை அறிவுறுத்துகின்றாள். போரிலே விழுப் புண் பட்டு இறந்தால் மகிழ்வும், புறமுதுகிடின் துயரமும் கொள்ளும் வீரத் தாய்மார் சரிதங்களைப் புறநானூற்றில் காணலாம். பகைவரது செருக்கினை அறுப்பதற்கும் தம்மைச் சார்ந்தவர்களுக்கு ஒரு துன்பம் நேர்ந்தவிடத்து உடன் உதவுவதற்கும் பொருள் தேவையாகும்.

**செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந்தோர்க்கும்**
**உறுமிடத் துய்க்கும் உதவி ஆண்மையும்**

என்னும் பாடலடிகள் விளக்கியுள்ளன. பகைவரது செருக்கினை அறுக்கும் கருவியாகப் பொருளைக் கருதும் கருத்து பிற்காலத்திலும் வழூப் பெற் றமையை,

**செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்**
**எஃகு அதனின் கூரியது இல் (குறள். 759)**

என்னும் குறள்வழி அறியலாம்.

அறத்தினின்றும் வழுவாமல் வாழும் வாழ்க்கையும் பிறருடைய வாயி லில் நின்று ஒன்றை இரந்து பெறாமல் தன்மானத்துடன் வாழும் வாழ்க்கையும் பொருளால் அமையக் கூடியதாகும் என்பதை,

***அறக்கடைப் பாடஅ வாழ்க்கையும் என்றும்***

***பிறன் கடைச் செலாஅக் செல்வமும் இரண்டும்***

***பொருளின் ஆகும் (அகம். 155, 1-3)***

*என்னும் பாடலடிகள் உணர்த்தும்.*

*நட்புடையாரின் வறுமையையும் சுற்றத்தாரின் துன்பத்தையும் பகை வரது செல்வ வளத்தையும் காணும் போது தலைவனுக்கு ஓரிடத்தில் தங்கி வாழ்தல் இயலாது அந்நிலையை மாற்ற வேண்டும் என்று எண்ணும் அவனுக்கு இரவும் பகலும் தியாகச் சுட்டது. அதனைப் பொருளீட்டும் முயற்சி என்னும் நீரால் தனித்தன்மையை அகப்பாடல் வழி அறிய முடிகிறது.*

*தலைவன் பொருள்வயின் பிரிவு மேற்கொள்வதாகக் கூறியவுடன் தோழி நன்று அன்று என்று கூறி உடன்பட்டாள். அதனையறிந்த தலைவி, பொருளுக்காகப் பிரிதல் ஆடவரின் இயல்பு எனவும் அதற்கு உடன்படுதலே பண்பான செயலாகும் எனவும் கூறி தோழியைப் பாராட்டும் நிலையை,*

***...வேற்று நாட்டாரிடைச்***

***சேறும் நாமெனச் சொல்லச் சேயிழை (நற். 24,5-9)***

*ஒவ்வொரு ஆடவனும் உழைத்துப் பொருளீட்டல் தவிர்க்க இயலாத கடமையாகக் கருதப்பட்டது. முன்னோர் ஈட்டி வைத்த பொருளைத் துய்த்து வாழ்வோர் உள்ளவராகவே கருதப்படாத நிலை இருந்தது. எனவே செல்வக் குடியில் பிறந்த தலைவனாக இருப்பினும் தன் முயற்சியில் பொருளீட்டல் அவசியம் என்பது வலியுறுத்தப்பட்டது.*

*தலைவன் பிறருக்காகவே பொருளீட்டும் முயற்சியை மேற்கொண் டுள்ள அருள் நெஞ்சமுடையவன் என்பதை,*

***பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு***

***காமர் பொருட்பிணிப் போகிய (நற். 186, 8-10)***

என்ற பாடல் அடி காட்டுகிறது.

### பொருளின் தன்மை

பொருள் எவ்வளவு ஈட்டினாலும் நிறைவு ஏற்படாத மனநிலையையே தரவல்லது எனக் கூறப்பட்டுள்ளது.

***சுரம்பல விலங்கிய அரும் பொருள்***

***நிரம்பா ஆதலின் நீடலோ இன்றே (குறும். 59 : 5-6)***

உழைப்பினால் மட்டும் பொருளைப் பெற இயலும். அவ்வாறான்றிப் பொருள் பெற விரும்புவோர் ஓரிடத்தில் குவிந்து கிடக்கும். பொருளை முகந்து கொண்டு வந்துவிட இயலாது என்பதை,

***... சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது***

என்னும் அடியினால் அறியலாம்.

### பொருளீட்டும் வழி

ஒருவர் ஈட்டக் கூடிய பொருள்கேடற்ற வழியில் வந்ததாக இருக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்துள்ளனர் என்பதை,

***அவரோ***

***கேடில் விழுப்பொருள் தருமார் பாசி மலை***

என்ற குறுந்தொகை அடிகளால் அறியலாம்.

செம்மையான வழிகளிலிருந்து நீங்கித் தவறான வழியில் பொருளீட்டி னால் அப்பொருளே இம்மைக்கும் மறுமைக்கும் பகையாக மாறும் என்பதை,

**...செம்மையின் இகந்தொரிஇப் பொருள்**

**செய்வார்க்கு அப்பொருள் (கலி-14, 14-15)**

இம்மையும் மறுமையும் பகையாது தளியானோ என்ற கலிப்பாடல் உணர்த்துகின்றது.

சமுதாயத்தின் நன்மைகளுக்கேற்பத் தீமைகளும் இருத்தல் இயற்கை. அறவழியில் பொருளீட்ட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டாலும் பொருளைக் கவரும் களவர்களும் இருந்துள்ளமை புலனாகின்றது. அவர்கள் வழிச் செல்வோரின் பொருளைக் கொள்ளையிட்டதோடு பொருள் இல்லாத நிலையில் உயிரையும் பறித்துள்ளனர். அவர்கள் வலிமையான உடலையும் புலி போன்ற நோக்கினையும் உடையவர்கள். சுருண்ட கூந்தலையும் உடைய வர்கள் அவர்கள் வழிப்போக்கரிடம் பொருள் இல்லாத நிலையில் அவர்களைத் துன்புறுத்திக் கொன்றுள்ளனர் என்பதை,

**கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்**

**துள்ளூறர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற் (பாலைக்கலி 4:4-5)**

என்ற கலித்தொகைப் பாடலால் அறியலாம்.

அரசின் பொருளாதாரம்

ஒவ்வொரு சமுதாயமும் மாற்றமடைந்து புதிய சமுதாயம் உருவாகும் போது பொருளாதார நிலையிலும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. சேகரித்த உணவுப் பொருள்களைப் பகுத்துண்டு வாழ்ந்த சமுதாய நிலை, உற்பத்தி முறை தோன்றிய பின்னர், தனியுடைமை தோன்ற வழிவகுத்தது. ஒவ்வொருவரும்

தங்களது பொருளாதாரத்தைப் பெருக்கும் முயற்சிகளில் ஈடுபடத் தொடங்கினர். மருத நில நாகரிகம் அளித்த பரிசிலாக இறுதியில் அரசு என்னும் நிறுவனம் தோற்றம் கொண்டது. அரசினை மையமாக வைத்தே சமுதாயம் இயங்கும் நிலை ஏற்பட்டது. மக்களின் வாழ்க்கை முறையிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. ஞானி இதனைப் பற்றிக் குறிப்பிடுகையில், இப்புதியச் சமுதாயம் வேளாண்மை, தொழில் வளர்ச்சியை பெருக்கி நகரங்கள், நாகரிகம், கல்வி முதலியவற்றை ஊக்குவித்ததன் மூலம் முன்னையச் சமுதாயத்தைவிட வளர்ச்சி பெற்ற சமுதாயமாகிறது. குறுகிய நிலங்களிலிருந்தும் குறுகிய வாழ்க்கை முறையிலிருந்தும் மக்களை விடுவித்து மக்களிடம் புதிய உறவு முறைகளை இது வளர்த்து வருகிறது. பண்டைச்சமுதாயத்திலிருந்த பொதுமை நீதி ஆகியவை தனது சமுதாய அடிப்படையோடு அழிந்து விடுவனஅல்ல. அவை புதிய சமுதாயத்தின் கட்டுமானத்திற்கு வருமாற்றிக் கொண்டு வாழ்கின்றன. இப்புதிய சமுதாயமும் தனக்குத் தேவையான அளவு ஏற்றுக் கொள்கிறது. பொருளாதார அடிப்படை மாறினாலும் தான் அழியாமல் புதிய நிலைகளுக்கேற்பத் தன்னை உருமாற்றிக் கொள்ளும் கலாச்சாரத்தின் தன்மை இது என்று குறிப்பிட்டுள்ளார்.

## கடமையாற்றல்

சங்ககாலச் சமூகம் ஒரு போர் விருப்பச் சமூகமாக இருந்திருக்கிறது. ஆடவனாகப் பிறந்த ஒருவனின் சமூகக் கடமை அவன் போர்க்குச் சென்று களிற்று யானைகளை வென்று வருதலே எனப் பொன்முடியார் கூறுவார். போர்க்கடமை பூண்ட ஆடவன், நாட்டில் போர்ச்சூழல் உண்டாகும் போது போர்ப்பறை கேட்டு விரும்பி அத்தொழில் மேற்செல்வான்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் நெடிய காட்டிடத்துப் பாசறையில் தங்கி போர்க் கடமைகளை ஆற்றத் தங்கியிருக்கும் போது போர் நினைப்பில் ஆழ்ந்து இருக்கிறான். வந்த வினை முடித்து அவன் ஊர் திரும்பும்போது

அச்செய்தி தலைவிக்கு மகிழ்ச்சிப் பரபரப்பை உண்டாக்குகிறது. இவ்வாறு தலைவியின் பிரிவுத் துயரையும், தலைவனின் வினை முடித்துத் திரும்பு தலையையும், தலைவனின் இன்பத் துடிதுடிப்பையும் மிக நுணுக்கமாக காண முடிகிறது.

போர் தொழில் கருதி தலைவியைப் பிரிந்து சென்ற மன்னன் பாசறை யில் தங்கியிருக்கையில் நள்ளிரவில் தீவட்டிப் பிடித்தோர் உடன் வரச்சென்று போரில் புண்பட்ட வீரர்களுக்கும் இனிய ஆறுதல் மொழிகளைக் கூறித் தேற்று வதை,

**நள்ளென் யாமத்தும் வள்ளி தேற்றுவகையும்**
**சிலரோடு திரிநறம் வேந்தன்**
**பலலோடு முரனிய பாசறைத் தொழிலே!**

எனும் வரிகள் பறைசாற்றி அறிவிக்கிறது.

அரசன் பாசறையில் உறக்கம் கொள்ளாது கடமை உணர்வோடு செயல் படும் திறத்தை எடுத்துக் காட்டுகிறது.

ஒவ்வொருவரின் கடமைகள் என்ன என்பதை ஒரு தாய் கூறுவதாக, 'என் முதன்மையான கடமை பெற்று வளர்த்து வெ ளியே அனுப்புதல்; தந்தையின் கடமையோ, சான்றோன் ஆக்குதல், வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லனின் கடமை, நல்ல முறையில் அவனுக்குப் போர்ப்பயிற்சி முதலியன அளித்தல் வேந்தனின் கடமை, இவ்வளவு கடமைகளையும் பிறர் செய்ய போரிலே அஞ் சாது நின்று ஒளிர்வாள். கொண்டு யானையுடன் பகைவரைக் கொன்று மீண்டு வருதல் வளர்ந்த காளையான அவன் கடமையாகும்' என்பதைப் புறநானூறு காட்டுகிறது. [3]

### பொருளீட்டுதல்

பிறர் உழைப்பினால் உண்டு வாழாது தன் முயற்சியில் பொருளீட்டித் தாமுண்டு வாழ வேண்டும் என்றும், பழந்தமிழர் கொள்கைக்கு பொருட்பிரிவு படுத்தியது ஆன்ற சான்றாகும். பழந்செல்வங்களுள் முதன்மையானதாகும்.

### பொருள் தேடுவதன் அவசியம்

இன்பத்திற்கும் அகத்திற்கும் அடிப்படையான பொருளைத் தேடுவ தற்கு நம் முன்னோர் மேற்கொண்ட நெறிகளைத் தொல்காப்பியம் பறைசாற்று கிறது. இல்வாழ்க்கையினை மேற்கொள்ளும் தலைவன் தன்னைச் சார்ந்த மனைவி, மக்கள், பெற்றோர், உற்றார், உறவினர்களைப் பாதுகாக்கும் கடமை யுடையது என்கிறார். இவ்வாழ்வான் குறித்துத் திருவள்ளுவர்,

***இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்***
***நல்லாற்றின் நின்ற துணை (குறள். 41)***

என்று குறிப்பிடுவதாலும், செல்வம் உடையவரைப் புகழ்ந்தும் இல்லாதாரை இகழ்ந்தும் பேசுவர் என்ற காரணத்தினாலும் மேலும் தன் முன்னோர் சேர்த்து வைத்தப் பொருள் இருந்தாலும் அப்பொருளால் வாழ்வை நடத்துவது தனக்கும் பெருமை ஆகாது என்ற எண்ணத்தாலும் தலைவன் பொருள் தேடச் செல்வான் என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன.

பொருள்வயின் பிரிவைப்பற்றி பேசுகையில் பொருள் இல்லாத குறையால் பொருள் திரட்ட வேண்டும் என்பதை,

***முந்நீர் வழக்கம் மகடூஉ வேண்டில்லை (தொல்.அகத். 980)***

என்று குறிப்பிடுகிறார். காலிலும், களத்திலும் சென்று பொருள் தேடுவதற் குரிய மக்களைச் சுட்டுகின்றபோது சமுதாயத்தில் உயர்ந்த குடிமக்கள் என்று கருதப்படுபவர்களே அத்தகு செயல்களுக்கு உரியவர்கள் என்கிறார்.[4] அது

மட்டுமல்லாமல் உயர்ந்தோர்கள், பொருள் தேடும் முறையில் அறநெறி இருத்தல் என்கிறார். இதனை பொருள் தேடும்போது அறத்திற்கு ஆக்கம் தாராத வற்றைத் தேடுவது இல்லை. அறத்திற்கு அப்பாற்பட்ட பொருள் இன்பமாகிய பொருள் பயனைத் தந்தாலும் அது சிறந்ததாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்பதையும் அறிய முடிகிறது. இதனை,

***அறக்கழிவுடையன பொருட்பயப் படவரின்***
***வழக்கென வழங்கலும் பழித்தன்று என்ப (தொல்.பொரு. 1164)***

என்கிறார்.

மேலும் பொருளைப் பாதுகாக்கவும், நிலைநாட்டவும் பிரிவு ஏற்படும் என்பதை மேவுகின்ற சிறப்பினை உடைய மக்களை அல்லாத தேவரது பூசை யும், விழாவும் முதலியனவும் முல்லை முதலாகச் சொல்லப்பட்ட எல்லா நிலங்களிலும் மக்கள் தப்பிய வழி தப்பாது நிறுத்தல் வேண்டியும் செய்யப் பெற்ற பொருளைக் காப்பதற்காகவும் செல்கின்ற வழக்கம் உண்டு.

***மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய***
***முல்லை முதலாச் செல்லிய முறையால்***
***இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே (தொல்.அகத். 974)***

தொல்காப்பியர் பொருளை அறத்திற்கும் இன்பத்திற்கும் நடுவனதாக வைத்துள்ளதோடு ஐந்து திணைகளிலும் இந்த மூன்றும் இருப்பதாகவும் குறிப் பிடுகிறார்.

***இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு***
***அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் (தொல்.கள. 1038)***

என்பதால் ஐந்திணை மக்களும் தத்தமக்குரிய ஒழுக்க நெறியில் இருந்தனர் எனலாம். மேலும் குறிப்பிட்டுள்ள ஐவகைப் பிரிவுகளையும் பார்க்கும்போது அவற்றிற்கு பொருளே அடிப்படை நோக்கமாக இருந்ததாலும்,

***வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு***

***ஊதியம் கருதிய ஒரு திறத்தானும் (தொல்.அகத். 987)***

என்று குறிப்பிடுவதாலும் அப்பிரிவுகளைப் பொருள் நோக்கில் இரண்டு பிரிவுக்குள் கொண்டு வரலாம்.

1. அறிவு முயற்சியால் தேடும் பொருள்
2. உடல் முயற்சியால் தேடும் பொருள்

இவ்வாறு பொருள் செயல் வகைக்குரிய காரணங்களைத் தொல்காப் பியம் கூறுகிறது.

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியயோர் செய்யும் தொழில் கள் இவையெனவும் தொல்காப்பியம் கூறுகின்றது.

அந்தணர்க்கு அறுவகைத் தொழில், அரசர்க்கு ஐவகைத் தொழில், வணிகர்க்கும், வேளாளருக்கும் தனித்தனியே அறுவகைத் தொழில்கள் உண்டு. இதனை,

***அறுவகைப்பட்ட பார்ப்பணப் பக்கமும்***

***ஐவகை மரபின அரசர் பக்கமும்***

***இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் (புறத். 1021)***

என்ற நூற்பாவால் அறியலாம்.

ஓதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், பொருளைப் பெறுதல் பொருளைக் கொடுக்கச் செய்தல் இவை ஆறும் அந்தணருக்கு உரியவை. ஓதல், வேள்வி செய்தல், ஈதல், நாட்டைக் காத்தல், தீயோரைக் கண்டித்தல் இந்த ஐந்து தொழில்களும் அரசருக்கு உரியவை. ஓதல், வேள்வி செய்தல், ஈதல், உழவுத் தொழில் செய்தல், மந்தைகளைக் காப்பாற்றுதல், வாணிகம் புரிதல் இந்த ஆறு தொழில்களும் வாணிகர்களுக்கு உரியவை. ஓதல், ஈதல், உழவு, பசு மந்தை களைக் காப்பாற்றுதல், வாணிகம், மேலோர் மூவர்க்கும் கீழ்ப்படிந்து நடத்தல் இந்த ஆறும் வேளாளருக்கு உரியவை.

அரசர் கொடுத்தால் படைக்கலமும் மாலையும் வேளாளர் பெறக்கூடிய பொருள்கள் என்பர்.

**வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும்**
***வாய்ந்தனர் என்ப அவர் பெறும் பொருளே (மரபி. 1582)***

ஆகவே, வேளாளர் போருக்குச் செல்வதற்கும் உரியவர்களாகயிருந் தனர். இது மன்னனின் விருப்பத்தையும் பொறுத்து அமையும்.

**இடைஇரு வகையோர் அல்லது நாடின்**
***படை வகை பெறா அர் என் மனார் புலவர் (மரபி. 1577)***

ஆராய்ந்தால் இந்த நால்வரின் இடையில் உள்ளவர்களான அரசர், வணிகர் ஆகிய இருவகையினரைத் தவிர மற்றவர்கள் ஆயுதத் தரிக்கும் உரிமை அற்றவர்கள் என்று கூறுவார்கள் புலவர்கள் எனத் தொல்காப்பியர் குறிப்பிடு கிறார்.

**விருந்தளிக்கும் பண்பு**

இல்வாழ்க்கை நடத்தும் கணவனும் மனைவியும் தம் உற்றார் உறவினரைக் காக்கக் கடமைப்பட்டவர். அவருடன் நில்லாது, தம் இல்லம் நாடி வரும் பிறரையும் உண்டியாலும் உரையுளாலும் உபசரித்தல் அவர்தம் கடமை என்று அறநூல்கள் கூறுகின்றன. இப்பணியைக் கணவன் அல்லது மனைவி மட்டும் விரும்பிச் செய்தல் இயலாது. இருவரும் மனம் ஒன்றுபட்டாலே செய்தல் இயலும். இருவருள் ஒருவர் மாறுபடினும் விருந்து நன்முறையில் நடைபெறாது. எனவே விருந்து போற்றும் கணவனும், மனைவியும் ஒத்த உணர்ச்சியுடையவராயிருத்தல் இன்றியமையாதது. ஆகவே விருந்து நடைபெறும் இல்லத்தில் உள்ள கணவனும் மனைவியும் மனம் ஒத்து வாழ்கின்றனர் என்பது கருத்தாகும். அஃதாவது அவர்களது இல்வாழ்க்கை செம்மையுற நடைபெறுகின்றது என்பது பொருளாகும்[5] என்பர்.

'தனக்கு இன்ன பிறர்க்கு இன்னா' என்பதை உணர்ந்து போற்றும் அருளுறை நெறியின் அடிப்படைப் பண்பே விருந்தோம்பலாகும்.[6] இல்லத்தாரின் கடமைகளில் விருந்தோம்பல் முதன்மைப் பண்பைப் பெற்றிருக்கிறது. இதற்கு முக்கியப் பங்கேற்பதால் தலைவியின் உயிர் பண்புகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. கணவன் மனைவியரிடையே ஊடல் தீர்க்கும் வாயில்களாகவும் விளங்குகிறது. தம்மைத் தேடி வருவோர்க்கு இன்முகம் காட்டி வரவேற்று, உணவு அளித்து உபசரிப்பது இல்லறத்தில் வாழ்பவரின் பண்பாகும். இல்லறமகளிரின் இன்றியமையாத பண்புகளில் ஒன்று விருந்தோம்பல் ஆகும்.

விருந்தோம்பலை எளிய குடும்பத்தைச் சேர்ந்த பெண்களும் தங்களுடைய தலையாய கடமையாகக் கருதியமை அக்காலத் தமிழ் மக்களின் விருந்தோம்பும் உணர்வுக்கு சிறந்த சான்றாகத் திகழ்கிறது.

இல்லற நெறியில் விருந்தோம்பல் உயர்ந்த நெறியாகும் போக்குவரத்து வசதி இல்லாத அக்காலச் சூழலே விருந்தோம்பல் நெறி உருவாகக் காரணம். உயிர்கள் துன்புறுதல் கூடாது என்ற உயர்ந்த நோக்கமே விருந்தோம்பலைச் சிறந்த நெறியாக ஆக்கியது.

**புகா அக்காலைப் புக்கு எதிப் பட்டுழிப்**
**பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும் (களவி. 1053)**

தலைவன் தன் வீட்டில் புகுந்த போது அவனை விருந்தினனாகக் கருதிய போதும் தலைவனின் விருப்பம் உணர்ந்து அவனை விருந்தினனாக ஏற்றுக் கொள்ள விரும்பும் போதும் தலைவிக்குக் கூற்று நிகழும் விருந்தினை வாய்ப் பாகக் கொண்டு கூற்று நிகழ்கிறது.

சங்கத் தமிழரின் விருந்தோம்பல் உணவியலின் அடிப்படையிலேயே உயிர் நாடியாகவே உள்ளது அக்கால விருந்துக்கு அடிப்படையாக அமைவது உணவு வகைகளே.

**நாளது சின்மையும் இளமையது அருமையும்**
**......... ......... ......... .........**
**இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும் (அகத். 987)**

வாழும் நாள் சில என்பதைக் கூறி, இளமையின் அருமையைக் கூறி முயற்சியின் சிறப்பைச் சொல், தகுதியது அமைதியும், பொருள் இன்மையின் இளிவையும், பொருள் உடைமையின் உயர்ச்சியும், அன்பினது பெருக்கத்தை யும், பிரிவினது கொடுமையும் காட்டுகின்றன.

*இல்லறக்கடமை*

*அட்டில் தொழில் வன்மை*

*இல்லறம் செம்மையுற நடைபெறுவதற்குப் பொருள் மிக இன்றியமை யாததாகும். வெளியில் சென்று தொழிலாற்றிப் பொருளீட்டுவது கணவ னுடைய கடமையாகும்.*

***இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே (தொல்.அகத். 974)***

*என்பது தொல்காப்பியம் ஒள்ளிய பொருளை ஈட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வான் என்பதை இவ்வடி உணர்த்துகிறது.*

*மனைவியின் கடமை இல்லின் கண் இருந்து இல்லத்து செயல்களைச் செம்மையுற ஆற்றுவதாகும். இல்லறத்தை ஓம்பும் மனைவி தன் கணவனுக் கும் விருந்தினர்க்கும் அளிப்பதற்குச் சுவை பொருந்திய உணவுகளை ஆக்கு வதில் தேர்ந்தவளாய் இருத்தல் வேண்டும் என்பதை உணரலாம். புறநானூறு அட்டில் தொழில் வன்மையையும் மனைவிக்குரிய சிறந்த பண்பாடாகப் போற்றுகிறது.*

*''சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி மார்பில் அணிந்த மாலையை மனை வாழ்க்கையையுடைய மகளிரின் முயக்கத்தால் மாறுபடுத்த முடியுமேயன்றிப் பகைவரின் போர் வீரர்களால் அதை மலைத்தல் இயலாது என்று ஊன்பொதி பசுங்குடையார் அம்மன்னனின் வீரச் சிறப்பைப் புகழ்ந்து பாடுகிறார். இளஞ்சேட்சென்னியை முயங்கும் மனை வாழ்க்கையுடைய மகளிர் அட்டில் தொழில் வன்மையில் சிறப்புற்று விளங்குபவர் என்று இப்புலவர் கூறுகின்றார்.''* [7]

*அன்பு, கற்பு, பொறுமை, நிறை, விருந்தோம்பல், அட்டில், தொழில் வன்மை ஆகியவை மனைவிக்குரிய மாண்புகள் என்பதே மேலே குறிப்பிடப்*

பட்டுள்ளது. இவ்வாறு பல்வேறு கடமைகளை இல்லறத்தில் புரிந்து வாழும் பெண்கள் அதன் காரணமாகத் தங்களைத் தாங்களே உயர்ந்தவர்களாக கருதிக் கொண்டு நடந்ததாகச் சான்று ஏதும் இல்லை. மகளிர் சமுதாய வாழ்வில் சுதந்தரமான அதே நேரத்தில் தங்களுக்கு இயல்பான நாணத்தோடு கலந்து பழகினர் என்று கனகசபைப் பிள்ளை சுட்டிக் காட்டுகிறார்.

பொருள் ஈட்டச் செல்லப் பிரியும் காலத்தும் என்று பொருளின் அவசியத்தையும், பொருள் தேடும் பருவத்தையும், பொருளின் மேன்மையையும், பொருள் இல்லாதானின் இழிவையும் உரைக்கிறார். இதனால்தான் உழைப்பின் மூலம் வாழ்க்கை நடத்துவதே சிறந்த இல்லறம் என்ற எண்ணம் உடையவர்களாக இருக்கின்றனர்.

**காதலினும் கடமைக்கு முதலிடம்**

பழந்தமிழ் மக்கள், காதலினும் கடமைக்கு முதலிடம் அளித்தனர் எனலாம். தலைவன் வினை செய்தல் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல நினைப்பதைத் தோழியிடம் கூறினான். இதனைக் கேட்ட தோழி தலைவனை நோக்கித் தலைவி உம்மைவிட்டுப் பிரிதலைச் சிறிதும் விரும்பாதவன். அதனால் நீர் செல்வீராக என்று சொல்வதற்கு அஞ்சுகின்றேன். எனவே சென்று வினை முடிப்பீராக. சென்ற இடத்தில் நெடுங்காலம் தங்காமல் விரைவில் வருவீராக என்று கூறினாள். இக்கருத்தமைந்த பாடல் நற்றிணையில் 229 வது பாடலாக உள்ளது.

தலைவியின் காதல் நினைவு அதனையும் கடந்து, தலைவன் கடமையை நிறைவேற்றுதலின் இன்றியமையாக் கடமை செய்யாத வரை பிறர் இகழ்ந்துரைத்தல் ஆகியவற்றைப் புலவர் புலப்படுத்தியிருப்பது நல்ல பயன் தருவதாகும்.

### கல்வி நிலையும் மேம்பாடும்

தொல்காப்பியர் காலத்தில் கல்வி முறை எவ்வாறு இருந்தது என்பதனை ஒருவாறு உய்த்துணர முடிகிறது. இனி கல்வியின் பொருட் பிரிகின்றமைக்குக் காலவரையறை கூறுகின்றார். வேண்டிய கல்விக்குரிய காலவரையறை வகுக்கப் பட்டது. ஆகவே, அன்று கல்வியைப் பொதுக்கல்வி என்றும் சிறப்புக் கல்வி என்றும் இரு பிரிவாகப் பிரித்திருந்தனர். பொதுக்கல்வி என்பது யாவரும் பெற வேண்டிய எண்ணும் எழுத்துமாகும். சிறப்புக் கல்வி என்பது ஏதேனும் ஒரு தொழில் பற்றிய கல்வியாகும். திருமணம் ஆன பின்னர் சிறப்புக் கல்வியின் பொருட்டு மூன்று ஆண்டு பிரிந்திருக்கலாம் என்பதால் திருமணம் ஆகும் வரையில் தான் ஊரிலேயே பொதுக் கல்வியைக் கற்றிருப்பர். வெளி யூர்க்குக் கல்வியின் பொருட்டுப் பிரிவது தம் ஊரில் பெற முடியாத உயர் கல்வி என்று தான் கொள்ள வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் பொதுக் கல்வி, சிறப்புக்கல்வி, ஆராய்ச்சிக்கல்வி என மூன்றும் எல்லா மக்களுக்கும் உரியன வாய் இருந்தன. தகுதியுடையோர் பெற்றனர். வருண வேறுபாட்டால் சிலர் விலக்கப்பட்டிலர் அன்று தமிழகத்தின் வருண வேறுபாடும் கிடையாது. இன்ன வருணத்திற்கு இன்ன கல்வி தான் என்று வரையறுக்க வேண்டிய நிலை யும் உண்டாக வில்லை.

**வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது** *(தொல்.கற்பு. 1134)*

என்ற அடிகள் புலப்படுத்தியது.

உயர்கல்வி தனிமனிதனுக்கு வேண்டிய கல்வி என்றும் அவன் நாட்டிற் கும் வேண்டிய கல்வி என்றும் இரு வகைப்படும் தனக்கு வேண்டிய கல்வி என்றும், தன் நாட்டிற்கு வேண்டிய கல்வி என்றும் ஒருவன் பொருள் கொள்ளும்படி தொல்காப்பியர் சூத்திரம் அமைந்திருப்பது கற்றறிந்தார் கண்டு மகிழத் தகுந்ததாய் உள்ளது.

அந்தக் கல்வியும் வேற்று நாட்டில் சென்று கற்றுக்கொள்வதாயினும் அந்நாட்டில் மூன்றாண்டுக்கு மேல் தங்கிவிடக் கூடாதென்றும் மூன்றாண்டுக் குள்ளேயே தன் நாடு திரும்பிவிட வேண்டுமென்றும் தொல்காப்பியர் வலி யுறுத்திக் கூறுவர்.

**கல்வி பற்றிய சங்ககாலச் செய்தி**

நாட்டிற்கு நலம் தரும் கல்வியின் பொருட்டுப் பிரிந்து செல்வதெனத் தீர்மானித்த தலைவன், தலைவி, தோழி இருவரிடமும் தெரிவித்துப் பிரிந்து போனான். தலைவி தோழியைப் பார்த்துச் சொன்னார். உயர்ந்த செல்வமும் ஆகிய கல்வியைத் தன் நாட்டிற்குக் கொண்டு வரும் பொருட்டு வள்ளிக் கொடி படர்ந்த காட்டைக் கடந்து சென்றார் தலைவர் என்றாள் தலைவி.

இதனை,

**அவரே கேடுஇல் விழுப்பொருள் தருமார் பாசிலை**
**வாடா வள்ளி அம் காடு இறந் தோரே**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

கல்வி பங்காளிகளால் திருடர்களால் வலியோர்களால் அரசர்களால் கவர்ந்து கொள்ள முடியாதது. தக்காரிடத்திலேயே கல்வி இருப்பதால் அது விழுப்பொருள் ஆகும். இக்கருத்துக்களைக் கருதியே கேடு இல்விழுச்செல் லும் கல்வி என்றும் (குறள்-400) கூறப்பட்டது.

மேற்கண்டவாறு தலைவி கூறியதைக் கேட்ட தோழி தான் முன்பே தலைவன் கல்விக்காகப் பிரிவதை அறிந்ததுண்டு என்றும் அதனால் அவனோடு பேசியதுண்டு என்றும் பேசிய செய்தி என்றும் கூறினாள்.

கற்றும் கேட்டும் நிறைந்த அறிவையுடைய பெரியோரிடம் சென்று நீர் குற்றமற்ற பல நூல்களைக் கசடறக் கற்க விரும்புதல் நல்ல செய்திதான். ஆனால் இவள் முகம் இனிய நிலாக்கதிர்களையுடைய தீபங்களைப் போன்றது. அந்த முகம் நீர் பிரிந்தால் பாம்பால் விழுங்கப்பட்டுப் பாழடையுமே நீர் கற்கும் கல்வியால் அந்த முகத்தை மீட்க முடியுமா? (கலி-14) என்கிறாள்.

**கல்வியின் பிரிதல்**

தலைவியை விட்டுத் தோழி சென்றாள். தனியாக இருந்த தலைவி தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். ‘பிரிவுத் துன்பத்தால் நான் வருந்திக் கொண்டிருக்கிறேன். எனினும் கரையை முட்டி விழும் காட்டாற்றினால் இடிந்து போன கரையிலே நிற்கும் மாமரத்தின் வேர்கள் யாவும் நீரால் அலசப் பட்டுக் கண்ணுக்கு விளங்கித் தோன்றும் காலத்தில் காற்றால் அலையும் அம்மரத்தின் அழகிய தளிர்கள் நடுங்குதல் போலவிடாமல் நடுங்கும்’ என நெஞ்சத்தோடு இப்பிரிவுத்துன்பத்தையும் நான் எப்படித் தாங்குவேன் என்று வருந்தினாள். [8]

தலைவன் பிரிவில் மிகவும் வருந்தி மெலிந்த தலைவியைத் திரும்பி வந்ததைக் கண்ட தோழி வற்புறுத்திச் சொன்னார்கள். பெரிய விசும்பு அதிரும் படி மின்னி இடி முதலான தொகுதிகளோடு கூடிய கரிய மேகம் மழை பெய்வ தற்காகக் கடல் நீரை முகந்து கொண்டு வந்து நிற்கிறது என்று கூறித் தலைவன் வரும் கார் காலப் பருவத்தைக் காட்டித் தலைவியை வற்புறுத்தி ஆற்றியிருக் கும்படி கூறினார் தோழி.

தலைவன் கல்விக்குப் பிரிந்தான் என்பதில் தலைவிக்கு வருத்தமில்லை. ஆனால், பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதனால், வருந்துகிறாள்.

மாஞ்சோலையிலுள்ள குயில்கள் ஆணும் பெண்ணும் உட்கார்ந்து கொண்டு ஒன்றையொன்று எதிர் எதிர் நின்று வண்டுகள் மொய்க்கும்படி மலர் களைத் தட்டிலில் வைத்து ஏற்றிக் கொண்டு தெரு தோறும் விலை கூறிவரும் 'பூவிலை மடந்தையீர் வாங்கீரோ' என்ற குரலும் தலைவியை மிகவும் வருத்து கின்றன என்பதை அறிந்த தோழி கூறினாள். [9]

## தலைவியும் தோழியும் வருந்துதல்

தலைவியும் தோழியும் தலைவனது பிரிவால் வருந்தியிருந்தனர். எனி னும் அவர்கள் சிந்திக்கத் தொடங்கினர். நாட்டின் நலன் நாடி கல்விக் கற்கச் சென்ற தலைவன் உரிய முறையில் அவனை முடித்துக் கொண்டு வருதற்கேற்ற காலம் கழியும் வரை ஆற்றியிருத்தல் வேண்டுமென்ற முடிவுக்கு வந்தனர். அதனால் அமைதி பெற்று வாழ்ந்து வந்தாள்.

கல்வியின் பொருட்டுச் சென்ற தலைவன் தான் போன நாட்டிலுள்ள கல்வியைப்பற்றி ஆய்ந்தான். சிற்சில பகுதிகளில் தன் நாட்டுக்கல்வி அந்நாட்டி னுள்ளதைவிட விஞ்சியதாக இருப்பதைக் கண்டான். அந்நாட்டு அறிஞர் களிடம் அது பற்றித் தெரிவித்தான். அவர்களும் தலைவனிடம் மகிழ்ச்சியோடு விஞ்சியுள்ள பகுதிகளை விளக்கும்படி வேண்டினர். அவனும் அவ்வாறே செய்தான். அந்நாட்டு அறிஞர்களும் அவனுக்குப் பாராட்டுச் செய்து பொன் முடிப்பைப் பரிசாகத் தந்தனர். கல்வியின் சிற்சிலவற்றை அந்நாட்டினர் எளிமையாக்கி வைத்திருந்தனர். அவற்றை அந்நாட்டு அறிஞர்களிடம் தலை வன் நன்கு விளங்கிக் கொண்டான். இவ்வாறு கல்வியைக் கொடுத்தும் கொண் டும் செயற்பட்டு உரிய காலத்தையும் பயனுடையதாகச் செலவிட்டு குறித்த நாளில் தன் நாடு திரும்பி வந்தான்.

### சங்க சமூகத்தின் கல்வியின் பெருமை

சங்க நூல்கள் புலமை வாய்ந்த பெண் மக்களைக் காட்டுகின்றன. ந.சஞ்சீவியின் சங்க இலக்கிய ஆராய்ச்சியில் பெண்பாற் புலவர் என உறுதி படக் கூறக் கூடியவர்கள் முப்பதின் மரைக் காட்டுகிறது. இவர்கள் மிக அதிக மாக (59) பாடல்களைப் பாடியுள்ள ஔவையாரே. புறநானூற்றில் மிகுதியாகப் பாடிய புலவர் என்ற சிறப்பினைப் பெண்களுக்கு ஔவையார் பெற்றுத் தரு கிறார். பதிற்றுப் பத்தின் ஆறாம் பத்தைப் பாடிய காக்கைப்பாடினி நற்சென் னையர் குறிக்கத் தக்கவராவார்.

சங்கப் பாக்கள் 2379இல் 154 மட்டுமே இவரால் பாடப்பெற்றன என்ப தும் கருதத்தக்கது. அவை அகப்பாடல் 67 ஆக அமைகின்றன. எண்ணிக்கையில் இவை மிகக் குறைவாயினும் அன்று கல்வியில் வல்ல பெண்டிர் பலர் இருந் ததை ஔவையாரை நோக்க அறிய முடிகிறது. அன்றைய மகளிர் கற்ற கல்வி அவர்களில் உடலுறுப்புகளுக்குப் பயிற்சி தருவதாகவும், திருமணத்திற்குப் பிறகு இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்குத் துணை செய்யும் கருவியாகவும் குடும்பக் கல்வியைத் தாயிடமும் செவிலித் தாயிடமும் தோழியிடமும் கற்றனர் எனலாம்.

### தனிமனித மேம்பாடு

தனி மனிதனைச் சமுதாய உறுப்பினராகவும் குடும்பத்தைச் சமுதாயத் தின் அடிப்படையாகவும் ஏற்றுக்கொள்வதற்குத் திருமண உறவு முறை மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. திருமண உறவில் ஒரு ஆணும் பெண் ணும் ஒரே வீட்டில் சேர்ந்து வாழ்ந்தாலும், சமூகம் அதனைக் குடும்பம் என்றோ அவர்களைக் குடும்பத்தார் என்றோ ஏற்றுக்கொள்வதில்லை. சமுதாயத்தின் அக ஒழுக்கத்தைப் பற்றிப் பேச வருகின்ற தொல்காப்பியர் அதனைக் களவு, கற்பு என இருவகையாக பாகுபடுத்துகிறார்.

## தனிக்குடும்பம்

*இரட்டைக் காப்பியங்களில் தனிக் குடும்ப அமைப்பே காணப்பட்டன. கோவலன்-கண்ணகி திருமணம் முடிந்த பின்னர் கோவலனது தாய் அறவோர் ஓம்புதல் விருந்தினரைப் பேணுதல் முதலிய சிறப்புடைய கண்ணகியின் இல் வாழ்க்கையும் பல்வேறு செல்வங்களுடன் சிறப்புப் பெறும் நிலையையும் காண அவர்களைத் தனிக்குடும்பமாக அமர்த்த எண்ணுகிறாள். அவர்கள் தனிக் குடும்பம் நடத்த ஏற்பாடுகளையும் செய்கிறாள்.*

***வாரொலி கூந்தலைப் பேரியற் கிந்தி***
***மறப்படும் கேண்மையோ டறப்பரி சாரமு (சிலம்பு. 284, 88)***

*மேற்கூறிய செய்தி அக்காலத்தில் திருமணம் முடிந்தவுடன் மணமக்கள் தனிக்குடும்பம் நடத்திச் செல்வதைத் தெரிவிக்கின்றது. மனிதச் சமுதாயத்தின் வளர்ச்சி நிலையை ஆராய்ந்த மார்கன், மனிதப் பண்பாட்டில் குடும்பம் என்ற நிறுவனத்தை மட்டும் ஐந்து படி நிலைகளில் கூறுகிறார். [10]*

## தொல்காப்பியம் காட்டும் குடும்பம்

*இதில் அறியப்படும் குடும்பம் தனிக்குடும்பமே ஆகும். இந்த நெறியே மிகுதியாகப் போற்றப்பட்டு வந்துள்ளது. உடன்போக்கினை அடுத்து நிகழும் திருமணமும் பின்னர் அவர்களைத் தனிக் குடும்பமாக வைக்கும் மனையறப் படுத்தும் நெறியும் விளக்குகின்றன. தலைவன் காதற்பரத்தையோடும், காமக் கிழத்தியோடும் சேர்ந்து வாழ்ந்த குறிப்பும் காணப்படுகிறது. அகத்திணையில் களவியல், கற்பியல் பெரும்பாலும் தாய், செவிலித்தாய், தோழி ஆகியோரைப் பற்றிய செய்திகள் அதிகமாகக் காணப்படுகிறது. இவர்கள் இருவரும் தலைவி யின் வீட்டில் எல்லா நேரத்திலும் தங்கி உடனுறைபவர்களாகவும் இருக்கின்ற னர் தலைவியின் தந்தையைப் பற்றியும் தமையனைப் பற்றியும் ஓரிரு இடங்களில் குறிப்பிடுகிறார்.*

*தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப (களவியல், 1083)*

*பெரும்பாலும் பெண்களின் கூற்றுகளே காணப்படுகின்றன. இதற்கான காரணம் அகவாழ்வின் கடமைகளைப் பெண்ணுக்கும், புறவாழ்வின் கடமை களை ஆணுக்கும் அக்காலச் சமுதாயம் வகுத்திருந்ததேயாகும்.*

பெண்டிர் பொறுப்புகள்

*அவரவர் இயல்பிற்கேற்பச் சமூக அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் ஒவ் வொரு சூழலிலும் சில பொறுப்புகள் உள்ளன. எச்சூழலிலும் அவற்றை அவர் நிறைவேற்றுவது அவரது கடமையாகிறது. இவ்வகையில் ஒவ்வொரு பெண் ணும் தனது பருவம் மற்றும் தகுதிக்கு ஏற்ப இல்லப் பொறுப்புகளை மேற் கொண்டுள்ளனர். வாழ்வின் தலையாய பகுதியாக நடுநிற்கும் பருவத்தில் பெண், மிக எளிய நிலையிலும் இல்லத்தைச் சிதையவிடாது சிறப்பாக நடத்திச் செல்பவளாகத் (குறுந். 295:3-6) திகழ்ந்து கணவனுக்கும் அவள் தாயாகிறாள் (குறு.19:1) இத்தாய்மைப் பண்பு பல்வேறு சூழ்ல்களிலும் பலவாறாகச் சங்கப் பாக்களில் எதிரொலிக்கின்றன. அவற்றுள் குழந்தை வளர்ப்பு முதன்மை பெறு கிறது. சிறுபருவத்திலேயே பெண்டிர் இல்லப் பணிகளில் ஈடுபடுத்தப் பட்டதை, வினைவயிற் பிரிந்த தலைவன் திரும்புவதைக் குறிக்கும் பாடல்கள் மிகுதியும், 'மாலை நனி விருந்து அயர்மார் தேர்வரும் என்னும் உரை வாராதே' (குறுந்-156;6-7) என்ற வரிகள் காட்டுகின்றன. [11]*

*1. ஆடவர் பரத்தையிற் பிரிந்த பொழுது, பெண்டிரின் ஏவல் மகளிர் நிகழ்த்தும் செவ்வணி (பரி. 20-22) நிகழ்வு பெண்டிரின் மதிப்பு குறைத்தலில் ஆழமாக நோக்கத்தக்கதாகும். அது சங்கச் சமூகத்தில் பெண்டிர், ஆடவருக்கு வாரிசுகளைப் பெற்று தரும் கருவியாகக் கருதப்பட்டனரோ என்ற எண்ணத்தை எழுப்புகிறது. ஒவ்வொரு சான்று தவிர வேறு சங்கப் பாக்களில் அறியவராமை*

அக்காலத்திலேயே இவ்வழக்கம் கடியப்பட்டிருக்கலாம் என்ற உணர்வையும் தருகிறது.

### சங்கச் சமூகத்தின் பெண்டிர் நிலை

சங்கச் சமூகம் பெண்மைக்கு அளிக்கும் விளக்கம் பெண்டிரின் பொறுப்பாக கடமையாகக் காட்டுவன. பெண்டிரின் செயற்பாடுகள் பெண்டிர் பெற்ற மதிப்புகள், பெண்டிர் மதிப்புக் குறைத்தல் சில தனிக்கூறுகள், பெண் டிர் ஆடவர் இடையே காணும் வேறுபாடுகள் ஆகியன இவளுள் நோக்கப் பட்டு அன்றைய பெண்டிரின் நிலை உறுதியளிக்கப்படுகிறது.

கணவனுக்காக மட்டுமே தன்னை அணி செய்து கொண்டு (ஐங். 496;3-5, நெடு. 53-56) அவனது நலத்திற்காக வழிபட்டு (மது.550, 556, குறுந்.218) சாதல் அஞ்சேன், அஞ்சுவல் சாவல் பிறப்பு பிரிதாவது, ஆயின் மறக்குவேன். சொல் என் காதலன் என (நற்.397:7-9) வருந்தி, இம்மை மாறி மறுமையாயினும் நீயாகியர் என் கணவனே யானே நின் நெஞ்சில் நிறைய வேண்டும் (குறு-49) என வேண்டிய பெண்மை தன்னை ஆணுக்குள் அடக்கமாக வெளிக்காட்டு கிறது.

### பெண்கள் குடும்பத்தின் மையம்

பண்டைய காலத்தொட்டு உலக வரலாற்றில் பெரும்பான்மையான காலம் இந்திய நாடு முதன்மையானதாக இருந்து வருவதற்கு மிக அடிப்படை யான காரணம் தமது இல்வாழ்க்கை முறையே. குடும்ப வாழ்வில் ஒவ்வொரு வருக்குமே தனித்தனியானதும் அதே சமயம் சிறப்பானதுமான பங்கு உள்ளது. குடும்பத்துக்கு மையமாக அச்சாணியாக பெண்களே விளங்குகின்றனர்.

பெண்டிர் இல்லப்பணி

- இளையோர்
  - பொதுநிலை
    1. நீர் கொணர்தல்
    2. வீட்டுத் தோட்டம் அமைத்தல்
    3. உணவுப் பொருள் கொடுத்தல்
    4. சமைத்தல்
  - நில அடிப்படை
    - இல்லத்தைச் சுற்றி
      - குறிஞ்சி
        - தினை உணத்தல்
      - முல்லை
        1. ஆநிரை பாதுகாத்தல்
        2. தந்தைக்கு உணவு கொண்டு செல்லல்
        3. சிறுசிறு இல்லப் பணிகள்
      - மருதம்
        - அறி வுறுத்தல்
      - நெய்தல்
        1. மீன் உணத்தல்
        2. தந்தைக்கு உணவு கொண்டு செல்லல்
    - இல்லத்திற்கு வெளியே
      - குறிஞ்சி
        - தினைப் புனக் காவல்
      - முல்லை
        1. மோர், நெய் விற்றல்
        2. மாடு மேய்த்தல்
      - மருதம்
        1. களை எடுத்தல்
        2. கதிர் பாதுகாப்பு
        3. பூ விற்றல்
      - நெய்தல்
        1. மீன் விற்றல்
        2. உப்பு விற்றல்
- தாய்
  - இல்லப்பணி
    1. குழந்தை வளர்ப்பு
    2. விருந்தோம்பல்
    3. சமைத்தல்
    4. இல்லத்தூய்மை
    5. தேவையான பொருள் வாங்கல்
    6. துணைவர் விழுப்புண் ஆற்றல்
    7. திருமணம் நிகழ்த்துவித்தல்
  - புறப்பணி
    1. பொருட் பங்கீடு
    2. உப்பு விற்றல்
    3. பொருள் உற்பத்தியில் ஈடுபடல்
- முதியோர்
  1. விரிச்சி கேட்டல்
  2. குறி பார்த்தல்
  3. குழந்தைகளைப் பேணல்
  4. பூ பண்ணியும் விற்றல்

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையும் தாயின் கருவில் தொடங்கி மனைவியின் ஆதரவில் முடிகிறது. குடும்பத்தில் உள்ள அனைவருமே தன் தாய்மையாலும் பெண்மையாலும் வழி நடத்தப்படுகின்றனர். தாய்மையின் தெய்வீகமும் பெண்மையின் அன்பும் தான் குடும்ப வாழ்க்கையை நிறைவு செய்கிறது. எனவே, பெண்களே குடும்பத்தின் மையமாக உள்ளனர் எனச் சொல்வது மிகையாகாது.

### கடமையும் உரிமையும்

குடும்பத்தை நடத்துகின்ற பொறுப்பில் உள்ளவர்களுக்கு குடும்பம் அடிப்படையான கடமைகளை விதித்துள்ளது. தனது குடும்பத்தாரைக் காப் பாற்றுவது என்பது ஒரு குடும்பத் தலைவரின் தலையாய கடமையாகச் சொல் லப்பட்டுள்ளது. அதற்காக அவர் நியாயமான முறையில் உழைத்து, பொருள் சேர்த்து, வீண் செலவு செய்யாமல் தனது குடும்பத்தாரின் ஒட்டுமொத்த நலனுக் காக வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். தனது சொந்த நலனைவிட குடும்பத்தாரின் நலனையே முன்னிறுத்த வேண்டும. அதேபோல குடும்பத் தலைவிக்கு என்று தலையாய கடமைகள் உள்ளன. அவ்வாறே குடும்ப உறுப் பினர்கள் ஒவ்வொருவரும் தனது கடமைகளைத் தவறாமல் செய்கின்ற போது குடும்பங்கள் நிறைவானதாக விளங்கும்.

### திருமணத்தோற்றம்

வளர்ச்சியடைந்த மனிதனால் ஏற்படுத்தப்பட்ட பல சடங்குகளில் திருமணமும் ஒன்றாகும். குடும்பத்தில் ஆணின் ஆட்சி நிலை பெறுவதும், தனது சொத்துக்கு வாரிசாக குழந்தைகள் பெறுவதும் இத்திருமணத்தின் இலட்சியங்கள் என்று எங்கெல்ஸ் கூறுகிறார். வாழ்க்கையை கூட்டுப் பொறுப் பில் நடத்துவதற்குப் பலரறிய செய்து கொள்ளும் ஒப்பந்தம் என்கிறார் பெரி யார் ஈ.வெ.ராமசாமி. இந்தச் சமூகவியல் அறிஞர்கள் கூற்றிலிருந்து திருமணத் தின் உண்மை நிலையினை உணர முடிகின்றது. [12]

புறக்காரணிகள்

*தனிமனிதன் சார்ந்த சமுதாயம், சமூகம், பண்பாடு, பிற தொடர்புகள் சார்ந்தது. அன்றியும் சமூகத்தில் அவ்வப்போது நிகழ்கின்ற புற மாற்றங்கள் அனைத்தும் குடும்பத்தைச் சிதைக்கின்றன. கல்வி, நகர்மயமாதல் தொழில் மயமாதல், திருமண முறைகளில் ஏற்படுகின்ற மாற்றம், சட்ட முறைமைகள் போன்றன குறிப்பிடத்தக்க புறக்காரணிகளாக விளங்குகின்றன.*

பெண்ணுக்கே கற்பு

*கற்பு கற்பென்று சொல்ல வந்தார் இரு கட்சிக்கும், அஃது பொதுவில் வைப்போம் என்பது இக்காலத்து மக்கள் வேண்டும் நீதி. கற்பொழுக்கம் ஆணுக்கும், பெண்ணுக்கும் பொதுவாகும். முன்பு தொல்காப்பியர் காலத் திலே கற்பு பெண்களுக்குரிய தனி உடைமை என்றே கருதப்பட்டது.* [13]

*ஒரு பெண் ஒரே ஆடவனை மணந்து அவனுடன் இணைபிரியாக் காதல் கொண்டு இன்புற்று வாழ வேண்டும். அவன் எவ்வளவுதான் தவறுகள் செய் தாலும் அவள் மட்டும் தவறுகள் செய்யாமல் அவனுக்கு அடங்கியே நடக்க வேண்டும். காதலின் உள்ளம் களிக்க, உடல்நலம் பெற அவனுக்குப் பணி விடை புரிவதே கற்புள்ள பெண்ணின் கடமை. கணவன் செய்யும் இழி செயல் களை ஊரார் அறிந்தால் அவனைப் பற்றி இழிவாக எண்ணுவார்கள். ஆதலால் அவன் செய்யும் குற்றங்களை மறைப்பதே மனைவியின் கடமை. இதுபோன்ற குணங்கள் பெண்களுக்கு வேண்டும். இவை கற்புடைமையாகும்.*

***போக்குடன் அறிந்தபின் தோழியோடு கெழீஇக்***
***கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும் (தொல்.பொருள். கள. 1061)***

*இவை பெண்களுக்குக் கற்பே உயிர் என்பதை விளக்குகின்றன. கற்பின் வழி நடப்பதே கடமை எனக் காட்டப்பட்டுள்ளது.*

## கற்புக் கோட்பாடு

சங்க இலக்கியங்களில் பெரிதாகச் சொல்லப்படும் வாழ்க்கை மதிப்பு கற்பு என்பதாகும். நிலவுடைமை ஆதிக்கம் தோன்றுகிற காலங்களில் எல்லாம் பெண்கள் ஆடவனின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியிருக்கின்றனர். நிலத்திற்கும் உடையவனான ஆடவன் பெண்ணைத் தனக்குரிய உடைமைப் பொருள்களில் ஒன்றாகக் கருதுகிறான். தமக்குரிய உடைமைப் பொருள், தமக்குரிய போகப்பொருள் தமக்கு அடங்கி நடக்க வேண்டிய உயிர் என்றே பெண்ணை அவன் மதிப்பிடுகிறான். இதனால் பெண்ணைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்து காக்க வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்படுவதால் அவளுக்கு உயர்ந்த மதிப்புகளைக் கூறி அம்மதிப்புகளையே அவளைக் காக்கும் கவசமாக ஆக்கி விடுகிறான்.

இதனை வள்ளுவர்,

**சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை (குறள் 57)**

என்பார்.[14]

சங்க இலக்கியத்தில் கற்பு என்கிற மிகப்பெரிய பெருமை அவளுக்குப் வலியுறுத்தப்படுகிறது. ஆடவனைப் பற்றி எளிமையாகக் கூறும் சங்க இலக்கியம் பெண்களின் கற்பைப் பற்றிப் பலவாறாகப் பாராட்டுவது கொண்டு அவள் ஏற்றம் பெறுகிறாள்.

## சங்க இலக்கியத்தில் பெண்கள் வீரம்

சங்க காலத்தில் பெண்கள் வீரர்களையே மணந்தனர். காளை அடக்குதல், வில் வித்தை போன்ற போட்டிகள் நடத்தப் பெற்று, போட்டிகளில் வெற்றி பெற்ற ஆடவர்களையே அவர்கள் கணவர்களாக ஏற்றுக் கொண்டனர். அதனைப் போலவே பெண்களும் வெற்றி வீராங்கனைகளாகவே திகழ்ந்துள்ள

னர். முதல் நாள் போரில் மன்னனுக்கு உதவச் சென்ற தனது இளம் வயது மகனை (சிறுவனை) தயார்படுத்தி வாளைக் கையில் கொடுத்து அனுப்பினாள். அவனும் போர்க்களத்தில் இறந்துபடுவான். பெண் ஆனவள் தந்தை, தனது கணவன், மகன் போர்க்களத்தில் வீரமரணம் அடைந்தனர் எனக் கேட்டால் மகிழ்வுறுவர். போர்க்களத்தில் புறமுதுகிட்டு ஓடினர். புறப் புண்பட்டனர் என்று கேள்வியுற்றால் வேதனைப்படுவாள்.

***கொல் ஏற்றுக் கோடு***

***அஞ்சு வானை மறுமையும் புல்லாளே ஆயமகள் (முல்லைப்பாட்டு)***

கூர்மையான கொம்புகளை உடைய காளையினை அடக்கக்கூடிய ஆடவனையே ஆய மகள் மணந்து கொள்வாள் என்று சோழன் நல்லுருத்திரன் குறிப்பிடுகிறார்.

மக்கட்பேறு

மனைவியின் மாண்பு வீட்டிற்கு மங்கலமாகும். அம்மாண்பிற்கு அணிகலனாகத் திகழ்வது மக்கள்பேறு என்பதை,

***மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்***

***நன்கலம் நன்மக்கட் பேறு (குறள்-60)***

என்பார் வள்ளுவர். மக்கட்பேறு என்பது ஒருவனையும் ஒருத்தியையும் தம் வாழ்நாள் முழுவதும் ஒன்றுபடுத்துவதாகும் என்பர். [15]

குடும்பம் என்பது தனித்தியங்கும் போக்குடையதன்று. ஒவ்வொரு தனிமனிதனும் குடும்பம் என்ற குழுவாகி இரத்த உறவுடைய பல குடும்பங்கள் கால்வழிக் குழுக்கள் சமூகமாகி பல சமூகங்கள் பெரும் சமுதாயமாகின்றன.

தனிமனிதன் தொடங்கிச் சமுதாயமாக விரிந்து நிற்கும் மனிதப் பரப்பின் உறவில் பல தொடர் நிலைகள் உள்ளன. குடும்பம் கால்வழிக் குழுக்கள், சமூ கம், சமுதாயம் என்பன நில உடைமைச் சமூகத்திடம் காணப்படும் அமைப் பாகும்.

### குடும்ப மேம்பாடு

### குடும்பம் பொது வரையறைகள்

குடும்பம் பற்றிக் குறிப்பிடும்பொழுது பலவிதமான கருத்துக்களைக் காணலாம். குடும்பம் ஒரு நிறுவனம் என்றும், நிலையம் ஒரு குழு என்றும் வழங்குகின்றனர். மூன்றும் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்ட பொருள் உடையவை.

குடும்பம் என்பது திருமணத்தின் மூலம் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நிலையான நெருக்கமான இணைப்பினால் அவிழ்க்க முடியாதபடி பிணைக்கப்பட்ட ஒன்றாக இருக்கின்றது. அவை அவர்களுடைய உறவுகளை ஒரு குறிப்பிட்ட திட்டவட்டமான வழியில் ஒழுங்குபடுத்துகின்றது. அந்தப் பிணைப்பு இருவருக்குமிடையே ஒருவித ஈடுபாட்டையும், கவர்ச்சியையும் பொதுநல உணர்ச்சியையும், கணவன் மனைவி என்ற ஆன்மீக இரத்த உறவையு முதன்மையாகக் கொள்கிறது.

குடும்பம் அதன் நிறுவன மதிப்பிலும், சமூக வாழ்க்கையில் அவை செலுத்தும் ஆதிக்கத்திலும் தனக்கு நிகராக எந்தக் குழுவையும் நிறுவனத்தை யும் பெறாது ஈடும் எடுப்புமின்றித் தலைதூக்கி நிற்கின்றது என்பது புலனாகும்.

### குடும்பத்தின் தோற்றம் வளர்ச்சி

குடும்பம் தோன்றி வாழ்வதற்காக சூழ்நிலைகள் இப்படிதான் தோற்றம் பெற்றிருக்க வேண்டும் என்று படிமலர்ச்சி இயலார் விளக்கம் அளிக்கின்றனர்.

மக்களும் உயிரினங்களும் தோன்றி வாழ்வதற்கான சூழ்நிலைகள் அடங்கிய இந்த மண்ணுலகம் தோன்றிய காலம் முதல் இன்று வரை ஏற்பட்ட அனைத்து வகையான மாற்றங்களையும் வளர்ச்சியோடு பண்பாடுகளின் வளர்ச்சியும் ஒன்றிவிட்டன. உலகம் உயிரினம், பண்பாடு இம்மூன்றின் வளர்ச்சி நிலைகளுள் ஒவ்வொன்றின் வளர்ச்சி நிலையிலும் உரிய தனித்தன்மை உண்டு. பல மில்லியன் ஆண்டுகளுக்கு முன் படிமலர்ச்சி அடையத் தொடங்கிய மண்ணுலகத்தில் பனியாறுகள் நிறைந்த சூழ்நிலை காலப்போக்கில் வெவ்வேறு சூழ்நிலைகளில் வாழ்ந்த மக்களும் தனித்தனியான பண்பாட்டினை ஏற்படுத்திக் கொண்டனர்.

குடும்பத்தின் தோற்றம் குறித்து இருவேறு கொள்கைகள் அறிஞர்களிடையே நிலவுகின்றன. ஒன்று குடும்பம் என்ற அமைப்பு இயல்பாகவே மனிதச் சமூகத்தில் அமைந்திருந்தது. இரண்டு குடும்பம் என்ற அமைப்பு சமூக வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் தோன்றியது எனலாம்.

### தோற்றக் கொள்கை ஒன்று

''பாஸ்கர் கிஸ்பர்ட், வெஸ்டர் மார்க் போன்ற அறிஞர்கள் குடும்ப அமைப்பு இயல்பாக அமைந்துவிட்ட ஓர் அமைப்பு எனவும் விளக்கியிருக்கின்றனர்.'' சமூக வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் குடும்பம் தோன்றியிருக்க வேண்டும் என்பவர்களின் கருத்தை இவர்கள் மறுத்துரைத்தனர். [10]

### தோற்றக் கொள்கை இரண்டு

எல்.எச்.மார்கன், ஜே.எல்.லப்டாக், ஜே.ஜி.பிரேசன், ஆர்.பிரிஸ்பால்ட் முதலிய அறிஞர்கள் குடும்பம் சமூக வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் தோன்றியது என்ற கொள்கையை உடையவர்கள்.[17] குடும்பம் எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் காணப்படுகின்ற ஒரு நிறுவனம் என்பதை

இவர்கள் ஏற்கவில்லை. குடும்பம் என்பது இயக்கமுள்ளது என்பதும் மாறுதல் களுக்குட்பட்டது என்பதும் இவர்கள் கொள்கையாகும்.

குடும்பம் என்பது இயக்கமுள்ள சித்தாந்தத்தையே குறிக்கிறது. என் றைக்கும் இயங்காதிருப்பதில்லை. சமுதாயம் சூழ்நிலையிலிருந்து மேல் நிலைக்கு முன்னேற குடும்பமும் கீழான வடிவத்திலிருந்து மேலான வடிவத் திற்கு முன்னேறிச் செல்கிறது என்பதை எங்கெல்ஸ் 1884-ல் விளக்குகிறார். [18]

''மனிதச் சமூகத்தின் தொடக்கக் காலத்தில் குடும்பமோ மணமுறையோ இருந்தது கிடையாது எனவும் மனிதர்களிடம் வன்முறையற்ற புணர்வு நிலை கள் காணப்பெற்றன எனவும், ஓர் ஆடவர் குழு ஒரு பெண்டிர் குழுவுடன் கட்டுப்பாடாற்ற முறையில் உறவு கொண்டனர் என்பதும் அறிஞர்களின் கருத் தாகும்.[19] இக்கருத்திற்கு அரணாக எண்ணற்ற பழங்குடி மக்களின் வாழ்க்கை முறைகளைச் சான்று காட்டினர். கட்டுப்பாடாற்ற புணர்ச்சி உ றவுநிலைக்குப் பிறகு தாயினுடைய பொருளாதார சமூகப் பாதுகாப்பு தேவைகளின் காரணம் பற்றித் தாய்வழித் தலைமுறைக் குடும்பம் எழுந்தது என்பர். பிறகு ஆடவ னுடைய கைப்பற்றும் ஆர்வம் சொத்துரிமை ஆதிக்கம், வாரிசுரிமை போன்ற காரணங்களினால் ஆண்வழித் தலைமை தோன்றி ஒருதார மணமுறை வலி யுறுத்தப் பெற்றது. ஒருதாரக் குடும்ப முறைக்கு முன்பாகப் பல்வேறு குடும்ப முறைகள் வழக்கிலிருந்தமையை அறிஞர்கள் விளக்கியுள்ளனர். இரத்த உறவுக் குடும்பம், இணைக் குடும்பம் முதலிய குடும்ப நிலைகளின் வளர்ச்சி நிலை யில் ஒருதாரக் குடும்பம் தோன்றியது.

குடும்பம் என்பது ஓர் இயக்கமுள்ள நிறுவனம், அது சமூக வளர்ச்சியில் ஒரு காலக்கட்டத்தில் தோன்றியது, பொருளாதார நிலைகள் அடியொற்றியது என்பன அறிஞர்களின் கருத்துரையாகும்.

## கூட்டுக்குடும்பம்

கணவன், மனைவி, பிள்ளைகள் அடங்கிய குடும்பம், தனிக்குடும்ப அமைப்பு எனவும், இவர்களோடு அவர் தம் பெற்றோர், சகோதரர்கள் மற்றும் பலர் அடங்கிய குடும்பம் கூட்டுக்குடும்ப அமைப்பு எனவும் குடும்ப அமைப்பு எனவும் இருவகைப்படும்.

தாய், தந்தை, பிள்ளைகள் அடங்கிய குடும்பம் நடுவணுக் குடும்பம் (Nuclear family) அல்லது முதனிலைக் குடும்பம் (Primary family) அல்லது உடனடி குடும்பம் (Immediate family) என வழங்கப்படும் இவர்களோடு உறவினர் சேர்ந்த குடும்பம் விரிந்த குடும்பம் (Extended family) எனப் பெறும். இவ்வுறவு முறையே நெருங்கிய உறவு கொண்டது, தூரத்து உறவு கொண்டது என இருவகைப்படும்.

இந்தியச் சமூக அமைப்பில் கூட்டுக்குடும்பம், தனிக்குடும்பம் எனும் இரு அமைப்புகள் இருந்தன என்று ம.சு,கோபாலகிருஷ்ணன் (1963) கூறு கிறார்.[20] ஆரியரின் ஆதிகுடும்பம் கூட்டு குடும்பமாக இருந்தமையை வேதங் கள் விளக்கியுள்ளன. பாடகர் இனத்து ஆண்கள் திருமணம் செய்து கொண்டு பிரிந்து செல்வர் பெற்றோருடன் கடைசி வரை இருந்து காப்பாற்றும் பொறுப்பு இளைய பிள்ளைக்கு உரியது. (எட்கர் தர்சன் 1986) சங்கத் தமிழரின் குடும்பம் தனிக்குடும்ப அமைப்பினை உடையது. [21]

## குடும்பத்தின் பன்முகத் தன்மை

மனிதச் சமூகத்தின் முக்கியமான நோக்கம் மனித இனமும், சமூக வாழ்வும் தொடர்ந்து நிலை பெற்றிருக்க வேண்டும் என்பதே. இந்த நிலை யைப் பேணிக் காக்க வேண்டுமானால் மனித இனத்தவர் ஒவ்வொரு தலை முறையினரை உருவாக்க வேண்டும். மனித சமுதாயத்தில் தோன்றி வளர்ந்

துள்ள மிகப் பழமையான நிறுவனமாக குடும்பம் விளங்குகிறது. மனிதச் சமுதாயத்தைக் கட்டியமைக்கும் முக்கிய அலகாகவும் மனிதர்களின் பண்பாட் டைப் பேணிக் காக்கும் ஆதாரக் களமாகவும் அமைகிறது.

ஆதிமனிதன் தொடங்கி இன்றைய வரையிலும் காலத்தளத்தை வென்று நிற்பதாலும் தொல்குடி முதல் நாகரிகச் சமூகம் வரை காணப்படும் சம காலத் தளத்தின் வேறுபட்ட பண்புகளை வென்று நிற்பதாலும் குடும்பம் என்னும் நிறுவனமானது பல பொதுப் பண்புகளைப் பெற்றுள்ளது. குடும்ப அமைப் பானது சமூகத்திற்குச் சமூகம் பண்பாட்டிற்குப் பண்பாடு வேறுபட்டதாகவும் உள்ளது. இவ்வேறுபாடுகள் சாது, வர்க்கம், சமயம், இனம், வரலாற்றுப் பின்புலம் ஆகிய பொதுவான அடிப்படைகளில் காணப்படுகின்றன.

குடும்பம் என்னும் நிறுவனமானது, உலகளாவிய அமைப்பாகவும் பல பொதுப் பண்புகளைக் கொண்டதாகவும், மாறுபட்ட தன்மைகளைக் கொண்ட தாகவும் உள்ளது. தனிமனிதர்களே சமுதாயத்தைக் கட்டியமைக்கிறார்கள். தனிமனிதர்களுக்கும் சமுதாயத்திற்கும் இடையே ஒரு இயைபு பெறாத முரண் பாட்டு போக்கும் கூட உள்ளது. தனி மனிதர்களின் வாழ்வியல் போக்கு வேறு வகையில் காணப்படுகிறது. தனிமனிதன் மற்றும் சமுதாயப் போக்குகளின் கருத்தியல் நிலைகளில் முரண்பாடு காணப்படும். குடும்பம் என்னும் நிறு வனத்தின் இயல்புகளின் மீது தனித்த பண்புகளை ஏற்படுத்துவதாகும்.

### குடும்பத்தின் பணிகள்

குடும்பத்தின் அமைப்பு, செயல்பாடுகள் ஆகியவற்றில் பன்முகத் தன்மை உள்ளது. அதன் பணிகளிலும் பன்முகத்தன்மை காணப்படுகிறது. குடும்பம் தனிமனிதருக்காகவும், சமூகத்திற்காகவும் பெரும் பங்காற்றுகிறது. பன்முகப் பணிகளுள் பாலியல், இனப்பெருக்கம், பொருளாதாரம், கல்வி

ஆகிய நான்கு பணிகள் முதன்மையானது என்று லெவியும், பாலர்சும் கூறு கின்றனர்.[16]

ஹெலன் பொசான்கு என்பவர் குடும்பமானது அன்பு செலுத்தும் இடமாகவும் பொழுது போக்கிடமாகவும், பொருளாதாரப் பணியிடமாகவும் கல்வியளிக்கும் இடமாகவும் விளங்குவதாகக் கூறுகின்றார். [22]

கூட்டுக் குடும்பங்கள் தனிக்குடும்பங்களாக மாறும்போது பொருளா தார நிலையிலும் மாறுதல்கள் ஏற்படுகிறது. சொத்துகள் பங்கிடப்படுவதையும் வருவாயின் தன்மை வேறுபடுவதையும் காணலாம்.

**இல்வாழ்க்கை**

இல்வாழ்க்கை என்பதே மனிதன் பக்குவப்படும் தளம் என்பதால் பல துன்பங்கள் வந்து சேர்வது இயற்கை.

குடும்ப வாழ்வின் மற்றவரோடு கூடி வாழும் வாழ்க்கையில் சக மனித ரின் உணர்வுகளையும், சுக துக்கங்களையும் பகிர்ந்து கொள்ளும் போது சகிப்புத் தன்மையும், பிறர் மீது அன்பும் அரவணைப்பும் கொள்ளும் மனப்பக்குவமும் பெறப்படுகின்றது. உலக வாழ்க்கையில் இல்லறம், துறவறம் என்ற இரண்டு நிலைகளும் எதிரெதிர் தன்மையை கொண்டவை. அவற்றுள் துறவறம் என்பது தவத்தின்பால் செல்லும் தனிமனித விழுமியமாகும். வான்முகியார் என்னும் புலவர் இல்லறத்தையும் துறவறத்தையும் சீர்தூக்கிப் பார்த்து தவத்திற்கு உள்ள பெருமையில் சிறு கடுகு போன்றது. உலக வாழ்க்கையான இல்லற வாழ்க்கை என்று குறிப்பிடுகின்றார்.

***வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு***
***ஐயவி அனைத்தும் ஆற்றாது (புறம். 358)***

இல்லறம் என்ற சிறு கடுகு போன்ற வாழ்க்கையினாலேயே மனித மனம் பக்குவமடையாததோடு கூட்டுணர்வையும் வாழ்க்கை ஒத்திசைவையும் ஏற்படுத்துகின்றன. தனிமனிதன் குடும்பம் சமூகம் என்ற கட்டமைப்பில் தனிமனிதன் சிறக்கக் குடும்பம் என்று கூறுவதற்குப் பொருத்தமானதாகும்.

**மனைவிளக்கு**

வயது முதிர்ந்த பிசிராந்தையார் என்ற புலவருக்கு தலை மயிர் நரைக் காதலைக் கண்டவர்கள் அதற்குரிய காரணத்தை வினவியபோது அதற்குப் பல காரணங்களைக் கூறும் புலவர் தம் மனைவி மனையறம் சிறப்புறுதற்கேற்ற பண்பாடுகள் நிறைந்தவள் என்பதை முதற்காரணமாகக் குறிப்பிடுகிறார். ‘மாண்ட என் மனைவி என்கிறார். என் மனைவி இல்லறத்திற்குரிய மாட்சிமை நிறைந்தவள் ஆதலின் அவர் எள்ளவும் துன்பமின்றி இன்பமாக வாழ்ந்தார் என்பதும் அதனால் அவருக்கு நரை தோன்றவில்லை என்பது கருத்தாகும். [23]

தன் அரசனுக்குப் பகைவரால் துன்பம் நேரின் தன் அரசர் படைக்கே அரணாக விளங்கும் இணையற்ற ஒரு வீரனை,

***மனைக்கு விளக் காகிய வாணுதல் கணவன் (புறம். 314)***

என்று ஐயூர் முடவனார் என்னும் புலவர் கூறுகிறார்.

தன் அரசனையே பகைவரிடமிருந்து பாதுகாக்கும் பெரு வீரனாயினும் அவனுக்குப் புகழைத் தருபவள் இல்லத்திற்குரிய மாண்புகள் எல்லாம் நிறையப் பெற்று மனைக்கு ஒளி விளக்காக விளங்கும் அவன் மனைவியே என் பதை புறநானூறு உணர்த்துகிறது. ஒரு குடும்பம் ஒளிர்வதற்கேற்ற மனைவி யின் பண்பாடுகளைப் புறநானூறு அறிவுறுத்துகிறது.

மனைமாட்சி

கணவனும், மனைவியும் கூடி அறம், பொருள், இன்பம் வழுவாமல் வாழும் வாழ்க்கை இல்லறமாகும். தலைவன் தன் குலப் பெருமை விளங்க மனை வாழ்க்கை நடத்துவாள் என்பதை நன்னெறிப்படரும் தொன்னலம் என்கிறார் தொல்காப்பியர். [24]

கற்பியல்-184

சேரமான் குடக்கோர் சேரல் இரும்பொறையைக் காண வருகிறார். பெருங்குன்றூர்கிழார். தம் மனைவி வறுமையால் துன்புறுவதைப் பொறுக்க இயலாது வந்ததாகக் கூறுகிறார். [25]

**மனைத்தொலைந் திருந்த வெண் வானுதற் படர்ந்தே**

என்றார் வறுமையால் வாழும் தன் மனைவியின் துன்பத்தைக் கண்டு அதைத் தீர்த்தற் பொருட்டுப் பெருந்தலைச்சாத்தனார் குமணனிடம் வந்தாகப் பாடு கிறார்.

**மனையோள் எவ்வம் நோக்கி நினைகி**
**நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண (புறம். 164, 7-8)**

அன்புப் பெருக்கினால் மனைவி பல் வகையிலும் மாண்புடையவளாக விளங்குகிறாள்.

கணவன் மனைவியர் மேற்கொள்ளும் இல்வாழ்க்கை அறம், பொருள் இன்பங்களால் சிறப்புறும். இம்மூன்றாலும் தன் குடிப்பெருமை விளங்கத் தலைவன் மனை வாழ்க்கை நடத்துவான் என்பதை,

***நன்னெறிப் படரும் தொன்னலம் (தொல். பொருள். கற்பு. 1092)***

*என்று தொல்காப்பியம் குறிக்கின்றது.*

*சோழன் நலங்கிள்ளிக்கு முதுகண்ணன் சாத்தனார் என்ற புலவர் கூறும் நல்லுரையில்,*

***அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்***
***ஆற்றும் பெருமிறின் செல்வம்***
***ஆற்றாமை நிற் போற்றாமையே (புறம். 28, 15-17)***

*என்று அறிவுறுத்துகிறார்.*

*எல்லா அறங்களுக்கும் அன்பே அடிப்படை என்பதை வள்ளுவர்,*

***அறத்திற்கே அன்பு சார்பென்ப (குறள்-6)***

*என்று கூறுகிறார்.*

*அன்புடைமை அதிகாரத்தில் இல்லறம் இனிது நடத்தலும், பிற உயிர் கள் மேல் அன்பு பிறத்தலும் அன்பின் பயனாதலின் இவை வேண்டப்பட்டது எனலாம். கணவன் மனைவியிடத்து வேரூன்றி வளரும் அன்பு நாளடைவில் தம் மக்கள், உற்றார், உறவினர், சமுதாயத்தினர் ஆகிய பலரிடமும் பரவி அமைந்து பல அறங்களுக்கு வழிகோலுவதாகும் என்பர்.*

*போருக்கு வீறிட்டெழுந்த பூதப் பாண்டியன்,*

***அவர்ப்புறங் காணே னாயின் சிறந்த***
***பேரமர் உண்கண் இவளினும் பிரிக (புறம். 71,5-6)***

*என்று கூறும் வஞ்சினம் மனைவியைப் பிரிதல் மிகப்பெரிய கொடுமை என விளக்குகின்றது.*

*அரசர்களைப் போல புலவர்களும் மனைவியரிடத்துத் தாம் கொண்டிருந்த அன்பினைப் புலப்படுத்தியுள்ளனர். வறுமையால் வாடும் தன் மனைவியின் துன்பத்தைக் கண்டு அதனைத் தீர்த்தற்பொருட்டு வந்தாகக் குமணனிடம் கூறுகிறார் பெருந்தலைச்சாத்தனார்.*

***மனையோள் எவ்வம் நோக்கி நினைகி***
***நற்படர்ந் திசினே நற்போர்க்குமண (புறம். 164,7-8)***

*என்ற புறநானூற்றுத் தொடர்கள் விளக்குகின்றன.*

*கணவன்மார்கள் தத்தம் மனைவியரிடம் காட்டிய அன்பைப் போல, மனைவியரும் தத்தம் கணவன் மார்களிடம் அன்பு செலுத்தி இல்லறம் நிகழ்த்தியுள்ளனர். கணவன் பிரிவிலேயே அன்பு பெரிதும் புலப்படுகின்றது.*

**மனை வாழ்க்கை**

*மனை வாழ்க்கையில் ஒத்த அன்பு, கணவன், மனைவியர் இருவருக்கும் உரிய பண்பாகும். ஒத்த பண்பையே 'காதல்' என அழைத்தனர்.*

***யாக்கைக்கு***
***உயிரியைந்தன்ன நட்பின் உயிர்***
***வாழ்தல் அன்ன காதல்***
***சாதல் அன்ன பிரிவு அரியோளே (அகம்-339, 11-14)***

*என்பது உத்தமக் காதல் வாழ்க்கையின் இலட்சியத்தைப் புலப்படுத்துகிறது. காதல் வாழ்வில் இருவரும் பிரியாது கூடி வாழ்தலையே பெரும் பேறாகக்*

கருதினர். வறிய வாழ்க்கை வந்தாலும் பிரியா வாழ்க்கையே பெருமை தரும் வாழ்க்கை என்று அறிவுறுத்தப்படுகின்றது.

**வாழ்க்கை வகை**

உலக வாழ்க்கை, இல்லறம், துறவறம், தனி வாழ்க்கை என மூவகைப் படும்.

ஒரு கற்புடைப் பெண்ணை மணந்து இல்லத்திலிருந்து அறஞ்செய்து வாழும் வாழ்க்கை இல்லறமாகும். உலகப் பற்றை ஒழித்து வீடுபேற்று முயற்சி யில் ஈடுபடுவது துறவறமாகும். மானஞ்செய்யாது உலகப் பற்றோடு தனியா யிருப்பது தனி வாழ்க்கை, இவற்றுள் இல்லறத்தையே சிறந்ததாகக் கொண்ட னர் தமிழர். இறைவன் மக்களை ஆணும் பெண்ணுமாய் படைத்தார். அவர்கள் கூடி வாழ்தற் பொருட்டே இல்லறத்தாலும் ஒருவர் வீடு பேற்றை அடைய முடியும்.

***அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்***
***போ ஒய்ப் பெறுவது எவன் (குறள். 46)***

என்றார் அற நூலாசிரியர் திருவள்ளுவர்.

***இல்லற மல்லது நல்லற மன்று***

என்றார் ஔவையார்.

*சங்க காலத்தில் பெண்களின் நிலை*

பெண்ணுக்கு இல்லத்தில் எத்தகைய இடம் தரப்பட்டுள்ளது என்பதைக் கண்டறிவதுதான் அவனுடைய உரிமையை அந்தக் காலத்தில் அறம் விடுவ தற்கு ஏற்ற வழியாகும். 'இல்லாள்' என்று பெண் அழைக்கப் பட்டாள். 'வாழ்க் கைத் துணை நலம்' என்றும் குறிப்பிடப்படுகிறாள். மனைக்கு உரியவள்

என்பதால் 'மனைவி' என்றும் சுட்டிக்காட்டப்படுகிறாள். இவ்வாறு மனைவி 'இல்லாள், வாழ்க்கைத்துணை ஆகிய சொற்களால் அவள் எட்டப்படுவதி லிருந்து எவ்வாறு வாழ்க்கையில் மிக இன்றியமையாத பங்கை அவள் பெற்றி ருந்தாள் என்பதை உணர முடிகிறது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் பெண்கள் இல்லறத்தில் சிறப்பான பங்கை ஆற்றியிருக்கிறார்கள். இல்லறத்தில் பெரும் பங்கை ஜே.ஞானம்பாள் குறிப்பிடுகிறார். [26]

நிறைந்த பெருமைகளை அவளுக்குச் சூட்டிய போதும் ஆடவர் செய்த தவறுகளால் அவள் அமைதி குலைந்து வாழ்ந்திருப்பதற்கு வாய்ப்பு இருந்திருக் கிறது என்பது உண்மைதான். இருப்பினும் 'ஊடல்' என்ற ஒன்றைத் தவிர மிகப் பெரிய கருத்து வேறுபாட்டையோ, சண்டையையோ இல்லற வாழ்க்கையில் பெண்கள் நிகழ்த்தியதாக சான்றுகள் கிட்டவில்லை. இக்கருத்தை அரண் செய்வது போல் அ.ச.ஞானசம்பந்தன் அமைதி இல்லாத வாழ்வில் பண்பாடு, நாகரிகம், குறிக்கோள் என்பன தோன்றாமல் தோன்றினாலும் நிலைத்து வராது என்கிறார். [27]

மேன்மைத் தன்மை வாய்ந்த பெண்கள் மென்மைத் தன்மை காரணமாக இல்லறத்தில் புறக்கணிக்கப்பட்டிருக்க கூடுமோ, என்ற ஐயத்திற்கும் சங்க இலக்கியம் சரியான விடையைச் சுட்டிக் காட்டுகிறது. உடலால் பெண் மென்மைத் தன்மை பெற்றிருந்தபோதிலும் உணர்வுகளால் அவளது வன்மை மதிக்கப்பட்டே இருந்திருக்கிறது. இதை கே.கே.பிள்ளை மகளிர் தம் உடல் மென்மை கருதியும் எதிர்த்து நிற்கும் ஆற்றலின்மை கருதியும் மகளிர் அனு தாபத்தோடு கவனிக்கப்பட்டார்கள் என்று சுட்டுகின்றார். [28]

சமுதாய மேம்பாடு

*சங்க காலச் சமுதாயத்தின் வாழ்க்கைக் கூறுகளை அகம், புறம் என்னும் இரண்டு பிரிவுகளுக்குள் அடக்கிக் கூறுகின்றன. சங்க இலக்கியங்கள் குடும்பம் சார்ந்தன என்றும் அறக் கடமைகள் சார்ந்தன என்றும் நம்வாழ்வில் இரு கூறுகள் உள்ளன. இச்சமுதாய அடிப்படையிலேயே அகம் (காதல் - கணவன் - மனைவி - உறவு - குடும்பம்) என்றும் புறம் போர் (போர் ஆட்சி - புறக்கடமை கள்) என்றும் இருபிரிவாயின. அகம், திணை நில அடிப்படையிலும் புறம் சமுதாய வாழ்வு அடிப்படையிலும் பிரிவுப்பட்டன (2008;85) என்கிறார்.*[29]

*ஒரு சமுதாயத்தின் உயர்ந்த பண்பாட்டிற்கு அளவுகோலாக விருந்தோம் பல்தான். இவ்விருந்தோம்பலின் சிறந்து விளங்கியவர்கள் சங்க காலப் பொது மக்கள் என்பதை,*

***நீரின்றமையா யாக்கைக் கெல்லாம்***

***உண்டி கொடுத்தோருயிர் கொடுத் தோரே (புறம். 18–19)***

*என்று புறநானூறு கூறுகிறது.*

*குதிரை பூட்டிய தேரில் ஆரவாரித்துக் கொண்டு வரும் விருந்தினரை எதிர்கொண்டால் எந்நாளும் புலவியை மறப்பேன் என்று கூறும் பெண்ணைக் கலித்தொகையும் (கலி-75, 16-17) இல்லம் நாடி வந்த விருந்தினரை ஓம்பத் தன் பழைய வாட படையை ஈடாக வைத்ததைப் புறநானூறும் (புறம்-31,5-6) எடுத்துக்காட்டும். ஒரு தலைவி நடுகல்லை வணங்கி நான் விருந்து பெறுவே னாக (புறம்-306,3-5) என்று வேண்டுவதைப் புறநானூறு கூறும்.*

அகத்திணையும் சமுதாயப் பின்னணியும்

திணை மரபு என்பது கவிதை, மரபு மட்டுமில்லை. அது சமுதாய மரபாகும். இந்தச் சமுதாய மரபை, சமுதாயப் பின்புலத்தை ஐந்திணைக் கோட்பாடு வெளிப்படுத்துவதை காண முடிகிறது.

மலைக்குப் புணர்ச்சியையும், பாலைக்குப் பிரிவையும், காட்டுக்கு இருந்தலையும், கடற்கரைக்கு இரங்கலையும் பண்டையோர் கொண்டதற்குத் தொல்காப்பியத்தில் அதன் உரையிலாவது ஏற்புடைய காரணம் காண்டல் அரிதாம் என்ற இராகவய்யங்காரின் கருத்தை முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியும்.

இராகவையங்கார் ஒழுக்க முறைகள் திணைக் கோட்பாட்டோடு தொடர்புடையவை என்றும், ஒவ்வொரு ஒழுக்க முறையும் ஒரு நிலப் பகுதிக்குத் தேவையானதொன்று என்றும், அக்காலச் சமுதாயத் தேவைகளுக்கு இல்வொழுக்க முறைகள் தொடர்புடையன என்றும் இத்தொடர்புகளாலேயே இலக்கிய மரபுகள் தொல்காப்பியர் வருணித்த முறையில் வளர்ச்சி பெற்றன என்றும் கூறுகிறார். (2003-280) பி.டி.சீனிவாச ஐயங்கார், இராமச்சந்திர தீட்சிதர், தனிநாயக அடிகள் போன்றோர் கருத்துகளை எடுத்துக்காட்டி திணைக்கோட் பாடு சமுதாய வாழ்வியல் அடிப்படையில் எழுந்ததைக் குறிப்பிட்டுக் காட்டி யுள்ளார்.[30] மலையில் தொடங்கிய வாழ்வு சமதளம் நோக்கியும் வளமான வாழ்விடம் நோக்கியும் படிப்படியாக வளர்ந்த வளர்ச்சியே ஐந்திணை வாழ்வு என்பது பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்தாகும்.

நிலப்பரப்பின் இந்த ஐந்து இயற்கைப் பிரிவுகளும் தமிழ்நாட்டில் சிறுசிறு அளவிலேனும் காணப்படுகின்றன. தென்னிந்தியர் ஒரு நிலப்பிரிவி லிருந்து பிறிதொரு நிலப் பிரிவிற்கு பரவி வாழ்ந்தமையால் அந்நிலப்பரப்பு ஒவ்வொன்றும் உருவாக்கி அளித்த நாகரிகத்தை படிப்படியாக வளர்த்துள்ள

னர். மனிதன் பண்டு கடந்து வந்த நாகரிகத்தின் படிக்கட்டுகள் ஐந்தாகும். அவை வேட்டையாடுதல், நாடோடி வாழ்க்கை, கால்நடை மேய்த்தல், கடல் மேற்சேறல், தொழில் மயக்கம் கலந்த உழவுத் தொழில் மேற்கோடல் இவை முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதத் திணைக்கு நிகராகும். ஒவ்வொரு நிலப்பிரிவையும் சார்ந்த இயற்கை வளங்கள் இயல்புகள் நிலத்திற் குரிய நாகரிக வளர்ச்சிக்குத் தூண்டுதலாய் அமைந்தன. (1989,15-16)

'சங்க கால வாழ்வியல்' (1986) என்னும் நூலில் என்.சுப்பிரமணியன் சீனிவாச ஐயங்காரின் கருத்தை மறுத்துள்ளார். இந்நிலங்கள் முறையே வேடர், கள்ளர், இடையர், மீனவர், உழவர் என்பார் வாழிடங்கள் இவ்வாறு அமைக் கப்பட்ட ஒரு சமுதாய ஏற்பாடு தென்னிந்திய நாகரிக வளர்ச்சியின் வரலாற் றைத் தோற்றுவதாக அவர் கண்டார். வேடர், இடையர், மீனவர், கள்ளர், உழவர் என்போர் இன்று போலவேதான் அன்றும் ஒருவர் பக்கலில் ஒருவராக வாழ்ந்தனர். முதலில் மலைப்பகுதியில் தொடங்கிய வாழ்வு பின்னர் படிப்படி யாக சமநிலம் நோக்கி வந்து வளர்ந்து ஏற்புடையதாக இல்லை. சங்க இலக் கியச் சான்றுகளே இதை மறுப்பதற்கான ஆதாரங்களாக அமைகின்றன. பத்துப் பாட்டின் ஆற்றுப்படைப் பாடல்களும், மதுரைக்காஞ்சியும் ஏக காலத்தில் நானில வாழ்வு நிலவியதைக் காட்டுகின்றன.

### கற்பு - விளக்கம்

அன்றைய கற்பு என்பது மரபுப்படியும், சடங்கு முறையுடனும் தலைவி யின் உறவினர் மணம் செய்து கொடுப்பர். உறவினர் இல்லாதபோது சடங் கோடு கூடிய திருமணம் நடைபெறும். கற்பென்று சிறப்பித்துச் சொல்லப்படு வது சடங்கோடு பொருந்திக் கொள்ளுதற்குரிய மரபினையுடைய தலைவன் கொள்ளுதற்குரிய மரபினையுடைய தலைவியைக் கொடுத்தற்குரிய தலைவி யின் தமர் மணம் செய்து கொடுப்ப மணந்து கொள்ளுதலாகும்.

தலைவன் தலைவனுடன் சேர்ந்து உடன்போக்கில் சென்றவிடத்துக் கொடுத்தற்குரிய தமர் இல்லாதவிடத்தும் சடங்கோடு கூடிய மணம் நடைபெறுதல் உளதாகும். இவற்றிலிருந்து இன்று பேசப்படும் கற்பு அன்று உயர் குடியில் நிலவவில்லை. களவொழுக்கத்திலேயே பாலுறவு நிகழ்ந்து விடுகிறது. பின்னர் சடங்குமுறை, கணவன் மனைவி என்ற குடும்ப உறவு சொத்துரிமைக்கு முக்கியமாகிறது. இன்றும் சடங்கு முறை கணவன், மனைவி, குடும்பம், சொத்துரிமை வாரிசுக்குக் குழந்தை என்ற நிலை நீடிக்கிறது.

காமக் கிழத்தியைத் தலைவன் வைத்திருத்தல் பரத்தையரிடம் செல்லல் அன்று நடைமுறையாயிருந்தது. இன்றும் செல்வந்தரிடம் தொடர்கிறதைக் காணலாம். காமக்கிழத்தியும் பரத்தையும் சொத்துரிமை பெற முடியாது.

தொல்காப்பியம் கூறும் சமூகம் ஆணாதிக்க சமூகம் என்பதில் சந்தேகமில்லை. உயர்குடியினருடன் மட்டுமே பழகினார். அவர்களின் நெறியற்ற வாழ்க்கையையே எழுதினர். சிறுபான்மையினரான உயர்குடிப் பிறந்தவரையே தலைவன் தலைவியையும் தன் நூலில் கொண்டுள்ளனர். அவர்கள் வாழ்க்கையே பொதுமைப்படுத்தினர். பொதுமக்கள் வாழ்க்கை அவ்வாறில்லை, காமக்கிழத்தியர், பரத்தையர் உயர்குடியினருக்கு மட்டும் அனுமதிக்கப்பட்டனர். இவர்களுக்குச் சொத்துரிமை கிடையாது. சடங்குடன் கூடிய திருமணமே சொத்துரிமைக்கு முக்கியமாகும். காமக்கிழத்தியர், பரத்தையர் உயர்குடிப் பிறந்தவர் எனக் கூறிவிட முடியாது. பொருள் தேட அரசுப்பணி காரணமாக தலைவன் பிரிந்திருக்கும் காலம் வரை தலைவியின் ஏக்கம் கற்பனையாக ஆண் புலவரால் கற்பிக்கப்பட்டிருக்கலாம்.

### மரபும் சமூகமும்

மரபு பழமை அல்லது தொன்மை என்ற பொருளில் எழுதப்படாத சமூகச்சட்டமாக இருந்து வருகிறது. ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிய ஒன்றாக

ஒரு சமூகத்தினரின் பண்பாட்டைக் கட்டிக் காப்பதற்காக அவ்வச் சமூகத் தாராலேயே பழங்காலத்தில் உருவாக்கப்பட்டு காலங்காலமாக நடைமுறை யில் இருந்து வருவதாகும். மக்கள் தலைமுறை தலைமுறையாகக் குழுவாகச் சேர்ந்து கற்பித்துக் கொண்ட நடத்தை முறைகளும் நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் சேர்ந்த தொகுதியே மரபு என்று சமூக விஞ்ஞானிகள் விளக்கம் தந்துள்ளனர். [31]

கேட் மில்லட் என்ற பெண்ணியவாதி மரபு மற்றும் பண்பாடு அடிப் படையிலான கருத்துருவம் என்பது மேலாதிக்கம் செய்யும் குழுவினரின் தேவை மற்றும் மதிப்புகளுக்கேற்ப ஆண்களை அழிவு போர், ஆற்றல், சக்தி, திறமை போன்ற பண்புகள் உள்ளவர்களாகவும், பெண்களை அமைதி, அறி யாமை, கற்பு போன்ற பண்புள்ளவர்களாகவும் உருவாக்கியுள்ளது என்பர். [32]

மரபு நோக்கில் இன்றைய சமூகம் எதிர்கொள்ளும் பழக்க வழக்கங்கள் முந்தைய தலைமுறை ஏற்படுத்தி வைத்து காலங்கடந்தும் நிற்கும் காரணத் தினால் தொடர்ந்து பெரிதும் பின்பற்றி வரப்படுகின்றன. மரபு மாற்றம் உடை யது. அதுபோல மரபு என்ற சொல்லின் பொருளும் சிற்சில மாற்றங்களைக் கண்டாலும் பழமை, தொன்மை என்ற மூலத்தினை ஒட்டியதாகவே கருதலாம். காலம் கடந்து நின்ற பழக்க வழக்கங்கள் மரபாக ஏற்கப்படுகின்றன என்பதை அறிய முடிகிறது.

மரபு குடும்பத் தளத்தில் அதிகம் கட்டிக்காக்கப்படுகிறது. பெண்ணின் பிறப்பு, வளர்ப்பு, உணர்வு, உடை, நடத்தை வெளிப்பாடு, இயங்குவெளி, திருமணம், குடும்பப்பாங்கு, நிலை என்ற அனைத்து நிலையிலும் மரபின் ஆட்சியில் பெண் சிறைப்பட்டிருக்கிறாள். மரபுப் பழக்க வழக்கங்கள் ஒவ்வொரு சமூகத்திலும் ஆண்களுக்கு வேறாகவும் பெண்களுக்கு வேறாகவும்

கட்டமைக்கப்பட்டு குடும்பத்திலும் சமூகத்திலும் இருவருக்கும் தனித்தனி பங்கு நிலைகளையும் தகுதிகளையும் வரையறுத்து உள்ளன.

மரபும் மரபுசார், பண்பாடும் இருபாலருக்கும் உரியனவாக உணரப் பட்டாலும் இவ்விரண்டும் காலங்காலமாகப் பெண்களிடத்தில் தான் அதிகம் வற்புறுத்தப்பட்டு வருகின்றன. ஆண்களின் பண்பாட்டை எதிர்நோக்கும் சமூகம் அவர்களுக்குக் கட்டாயமாக அதனை வற்புறுத்தவில்லை. ஆனால் பெண்களுக்கு மரபும் பண்பாடும் வற்புறுத்தப்படுகின்றன. ஒரு சமூகத்தின் மரபும் பண்பாடும் காக்கப்படுவது சமூகப் பெண்களிடமே உள்ளதாகவும் நம்பப்படுகிறது.

பெண்களின் வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரை பல மரபு சார்ந்த பழக்க வழக்கங்களும் சட்ட திட்டங்களும் கடைப்பிடிக்கப்படுகின்றன. சிறு வயதிலேயே மரபு குறித்த செய்திகளைத் தாய்வழி அடிமைப்படப் போவதைத் தாம் உணராமலேயே தம் உரிமையை விட்டுக் கொடுத்து வருகின்றனர்.

தேவையற்ற சடங்குகள் கூட மரபின் பெயரால் நடத்தப்படுகின்றன. மரபை மீறக்கூடாது, என்பதுவே ஒரு மரபாக ஆகி இருக்கின்றது. பெண்கள் கடைப்பிடிக்கின்ற மற்றும் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளாகச் சில வற்றை இன்னும் வழக்கில் பயன்பாட்டில் வைத்துள்ளனர்.

### பண்பு

தொல்காப்பியர் தலைவன், தலைவியைப் பெயர் கூறிச் சுட்டாவிட்டா லும் அவ்விருவருக்கும் சில பண்புகள் பொருந்தியிருத்தல் வேண்டும் என்பர். பிறப்பு, ஒழுக்கம், ஆண்மை, வயது, உரு, அன்பு, நிறை, அருள், செல்வம் என்று பத்து வகைப் பண்புகள் ஒத்தவராகத் தலைமக்கள் இருத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் வலியுறுத்தும் மரபாகும்.

பழமை

தமிழிலக்கியம் மூவாயிரம் ஆண்டுகளாக இருந்து வரும் மரபுகளை உடையது எனலாம். இன்றுள்ள பழைய இலக்கண நூலாகிய தொல்காப்பியம் இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது. அந்நூல் இலக்கிய மரபு களைப் பற்றிக் கூறியுள்ளது.

**நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**

**பாடல் சான்ற புலனெறி வழக்கம் (தொல்.பொருள்.அக. 999)**

என்று தொல்காப்பியர் கூறியது கற்பனையும் உண்மையும் கலந்த இலக்கிய மரபாகும்.

காலத்தால் மிகப் பழயனவாய் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் அமைந்தனவாய் இருப்பினும், அந்த மரபுகளில் சில இன்றும் போற்றத் தக்கன வாக இருத்தல் குறிப்பிடத்தக்கது. (எ.கா.) காதல் பாட்டுகள் அகத்திணைப் பாட்டுகளாய்ப் பாட வேண்டும்.

**மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**

**சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர் (தொல். அகத். 1000)**

என்பர்.

அடையாளங்கள்

ஒவ்வொரு இனமும் தங்களுக்குள் தங்களுடையதாகக் கருதப்படும் வாழ்க்கை, பண்பாட்டு அடையாளங்களைக் கொண்டிருக்கும் தமிழர்கள் வாழ்வியலில் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், வழிபாடுகள், விழாக்கள், கலைகள் என பல மரபுவழி அடையாளங்களைக் கொண்டுள்ள னர். இவ்வடையாளங்களைத் தம் பண்பாட்டோடு ஆழமான நெருக்கம் உடை யனவாகக் கருதுகிறார்கள். என் பக்தவத்சல ரெட்டி, ஆறு. இராமநாதன்

ஆகியோர் தனக்கென அடையாளங்களை உள்ளடக்கிய எந்தவொரு குழுவிற்கும் அல்லது சமூகத்திற்கும் பண்டைய காலத்தில் மரபு உரிமைகள் என்பவை அக்குழுவின் அல்லது சமூகத்தின் பண்பாட்டு மதிப்புகள், சமூக அக்கறைகள் மற்றும் நடத்தை முன்மாதிரிகள் ஆகியவற்றைக் கொண்டிலங்கும் முதுகெலும்பு போன்று முக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்றும், கடந்த காலத்தின் பொருள் பொதிந்த மதிப்பீடுகளை நாம் உறவு முறைகளிலும் குடும்ப அமைப்பிலும், நம்பிக்கைகளிலும், பழக்க வழக்கங்களிலும், உணவு முறைகள், இருப்பிடங்கள் ஆகியவற்றிலும் கண்டுகொள்ளலாம் என்கின்றனர்.

திருமணம்

ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் முறையான அற வழிப்பட்ட வாழ்க்கை சிறந்த இல்லறம் எனச் சான்றோரால் போற்றப்படுகிறது. இவ்வில்லறத் தொடக்கத்திற்கான ஆண், பெண் உறவு, இணைப்பு சடங்கு திருமணம் எனப்படுகிறது. படித்த பெண்கள், வசதியுடைய பெண்கள் சராசரிப் பெண்கள் யாராக இருப்பினும் அனைவருமே ஒவ்வொரு வகையிலும் மரபு சார்ந்து சில விதிமுறைகள் காரணமாக இன்னல்களை எதிர்கொள்கின்றனர்.

ஆண்கள் தங்களது ஆணாதிக்க நிலை, பெண் கல்வியின்மை பெண்களின் பெண்மைப் பண்பு எதிர்ப்புணர்வின்மை ஆகியவற்றையெல்லாம் தங்கள் சுயநலத்திற்காக செயற்கையாக பெண்கள் மேல் திணிக்கின்றனர் எனும் கருத்தாக்கம் பெண் அடிமையுறக் காரணத்தை விளக்குவதாக அமைகிறது என்று விளக்குகிறார். பெண் இன்னும் ஒரு பெண்ணாக, மனைவியாக, குழந்தை பெறுபவளாக, குடும்பத்தை நிர்வகிப்பவளாகப் பார்க்கப்படுகிறாள். பெண் ஆணுக்கு நிகர் எனச் சமத்துவப் பேச்சு சில சமயம் எழுகிறது.

மனித வாழ்க்கையில் மூன்று முக்கிய நிகழ்வுகள் ஏற்படுகின்றன. இம்மூன்று நிகழ்வையும் குடும்பம், சமூகம், சார்ந்த சடங்குமுறைகளுடன்

நிகழ்த்து வதையும் காணலாம். ஒன்று பிறப்பு, இரண்டாவது திருமணம், மூன்றாவது இறப்பு இம்மூன்றிலும் பிறப்பும் இறப்பும் அறியாமலே ஏற்பட்டு விடுகிறது.

சமுதாயம் என்பது சமுதாய உறவுமுறைகளால் பின்னப்பட்ட ஒரு வலை எனலாம். இவ்வுறவு முறைகள் குடும்பம் திருமணம் என்றும் சமுதாய நிறுவனங்களால் ஏற்படுகின்றன.

**சான்றெண் விளக்கம்**

1. தமிழண்ணல் தொல்காப்பியம் பொருளதிகாரம், ப. 22
2. உலக நாயகி பழனி (ப.ஆ), இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனை, ப. 40
3. ஞானி, மார்ச்சியமும் தமிழ் இலக்கியம், பக். 3,9
4. ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 50
5. இராசமாணிக்கனர் பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 205
6. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 39
7. ப. பூங்காவனம் குடும்ப உ றவுகள் (ஒரு பெண் நிலை நோக்கு), ப.21
8. ஈ.வே. இராமசாமியின் சிந்தனைகள் பாகம், ப. 85
9. கோ.சுரேஷ், இலக்கியங்களில் வாழ்வியல் சிந்தனைகள், ப. 8
10. சிலம்பு நா.செல்வராசு, பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை, ப. 180
11. மேலது, ப. 181
12. மேலது
13. மேலது, ப. 182
14. சே. மாணிக்கம், திருக்குறள், 12
15. மேலது, ப. 201
16. ப. பூங்காவனம், குடும்ப உறவுகள் (ஒரு பெண் நிலை நோக்கு), ப.21
17. மேலது, ப. 18
18. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 4

19. மேலது, ப. 41

20. தமிழண்ணல், தொல்காப்பியம் பொருளதிகாரம், கற்பு-ப.184

21. செ. பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப. 29

22. தமிழண்ணல் தொல்.பொருள்.கற்பு, ப. 5

23. மேலது, ப. 22

24. மேலது, ப. 58

25. புறநானூறு, (மூலமும் உரையும்) ப. 72

26. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 35

27. தமிழண்ணல், தொல்காப்பிய பொருளதிகாரம், ப. 35

28. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.19

29. மேலது, ப. 20

30. ஆ.செந்தாமரைகண்ணி, பெண்களும் மரபுகளும், ப. 5

31. மேலது, ப. 5

32. தமிழண்ணல், சங்க மரபு, ப. 98

# முடிவுரை

தொல்காப்பியத்தின் அகத்திணைக் கோட்பாட்டில் பாலைத்திணைக் கோட்பாடு மிகமிக முக்கியமானதாக உள்ளது. பாலைப் பாடல்கள் நானிலப் பொதுமையை எடுத்துக்காட்டுகின்றன. பாலை, பிரிவு பற்றியதாக இருப்பதே இதற்கு அடிப்படைக்குரிய பிரிவு நிகழும் என்பதைத் தெரிவிக்கின்றது.

ஓதல், பகை முதலான பிரிவுகள் எல்லாம் அகத்திணையிலே பேசப் பட்டிருப்பதைப்போல் காதலர்களின் முக்கியச் செயற்பாடும், காதலர்கள் செயல்பாடுமாகிய உடன்போக்கும் தொல்காப்பிய அகத்திணையில் பேசப்பட் டுள்ளன. உடன்போக்கு தொடர்பான கொண்டு தலைக்கழிதல், போர் முறை கள் ஆகியவை அகத்தில் கொண்டுள்ளன. கற்பியலில் மட்டுமே பரத்தையர் பிரிவு பேசப்பட்டுள்ளது. இதன் மூலம் தொல்காப்பியத்தில் உள்ள களவு, கற்பில் தலைவன் தலைவியின் பிரிவுகள் பற்றிய செய்திகளும் தரப்பட்டுள் ளன. பிரிவில்தான் காதல் உள்ளங்களின் நெருக்கம் அதிகமாகப் புலனாகு மென்பதால் களவு, கற்பு வாழ்க்கையில் ஏற்படும் பிரிவுகளின் அடிப்படையில் நூல்கள் தோன்றியுள்ளன. பாலைத் திணையில்தான் அதிகமாகச் செசலழங் குவித்தல் பாடல்கள் உள்ளன. வரைவிடை வைத்துப் பிரிதல், இற்செறிப்பு, அலர், தலைவன் வரைவு நீட்டல் ஆகிய நிலைகளில் வருந்தும் தலைவியைத் தோழி ஏற்ற முறையில் கூறி ஆற்றுவிக்கிறாள்.

குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை என்னும் நான்கு திணைகளைவிட மருதத் திணையில் பிரிவு வேறுபடுகிறது. பிற திணைகளில் பிரிவு, தலை

வனின் உயர்வைக் குறிக்க பரத்தையிடத்துச் செல்லும் மருதத் திணையில் இழிவைச் சுட்டுகிறது. நான்கு திணைகளிலும் தலைவன் நெடுந்தொலைவு சென்றாலும், அன்பு மாறாத உடல் பிரிவாக அமைகிறது. மருதத் திணையில் மனையை விட்டு மட்டுமே நீங்கிய அன்பு மாறிய உளப்பிரிவு அமைகிறது. பிற திணைகளில் தலைவி பிரிந்த தலைவனுக்காக இரங்க, மருதத்தில் தலைவன் நம்மை மறந்து மற்றொருத்தியை நாடினானே என்று ஏங்குகிறாள். இதன்மூலம் திணை அடிப்படையிலும் இலக்கிய அடிப்படையிலும் பிரிவுகளை வகைப் படுத்திக் கூறியுள்ளான்.

சங்க இலக்கியங்களில் காதலுறவும் செய்கைகள், மகிழ்வில் தொடங்கு கின்றன. மெல்ல மெல்ல அம்மகிழ்வு குறைகிறது. அது வாழ்க்கையில் போராட்டங்கள் நிகழ்வதை அடிப்படையாகக் கொண்டு முடிகின்றது. இப் போராட்ட முதிர்வே பரத்தையர் பிரிவு எனலாம். இப்போராட்டத்தின் முடி வாகத் தலைவனை வாயில் நேர்தல் அமைகிறது.

இதன்மூலம் களவில் அலர் தலைவியையும், கற்பில் தலைவனையும் பாதிக்கிறது. தோழியும், தலைவியும் அவரை வெறுக்கின்றனர். பரத்தையர் பிரிவுக்குரிய காரணத்தை அறிய முடிகிறது.

போர் என்பது நாடுகளுக்கிடையே மாறாத ஒன்று. பழங்காலத்தில் போர் தவிர்க்க இயலாததாகவும் காலத்தின் தேவையாகவும் அமைந்திருந்தது. பொருள்வயின் பிரிவில் குடிமை நலம் காக்கவும், அறப்பணி புரியவும், வேண்டும் ஆக்கம் தேடலுக்குப் புரிதலாகும். பொதுநலப் பிரிவில் காலில் பிரிவு, கலத்தின் பிரிவு, எல்லை அடிப்படையில் பிரிதல் ஆகியவை கொண் டுள்ளன.

இதன் மூலம் போர் தவிர்க்க இயலாததாகவும் காலிற்பிரிவுக்குச் செல் லும்போது தலைவனுடன் தலைவியும் உடன் செல்லுகின்றாள். மரக்கலத்தில் கடல் கடந்து செல்லும் வழக்கம் பெண்களுக்கு இல்லை. கலத்தில் பிரிவில் பெண்களை உடன் அழைத்துச் செல்லுகின்றனர். எல்லை அடிப்படையில் தலைவியை விட்டுச் செல்கின்றனர்.

தான் வாழும் சூழலில் சமுதாயத்தில் நிலவும் பண்பாட்டைப் பெறு கின்றான். சங்க இலக்கியத் தோழி தலைவிக்கு வாழ்க்கையின் உண்மைகளை அறிவுறுத்த, மணிமேகலை, சிந்தாமணி காலத் தோழியர் அறிவுரை கூறு கிறாள். ஒவ்வொரு சமுதாயமும் மாற்றமடைந்து புதிய சமுதாயம் உருவாகும் போது பொருளாதார நிலையிலும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. சங்க காலச் சமூகம் ஒரு போர் விருப்பச் சமூகமாக இருந்திருக்கின்றது. ஆடவனாகப் பிறந்த ஒருவனின் சமூகக் கடமை அவன் போருக்குச் சென்று களிற்று யானைகளை வென்று வருதல் ஆகும்.

தொல்காப்பியர் காலத்தில் பொதுக்கல்வி, சிறப்புக்கல்வி, ஆராய்ச்சிக் கல்வி என மூன்றும் எல்லா மக்களுக்கும் உரியனவாய் இருந்தன.

மனித வாழ்க்கையில் மூன்று முக்கிய நிகழ்வுகள் ஏற்படுகின்றன. இம்மூன்று நிகழ்வையும் குடும்பம், சமூகம் சார்ந்த சடங்கு முறைகளுடன் நிகழ்த்துவதையும் காணலாம். ஒன்று பிறப்பு, இரண்டாவது திருமணம், மூன்றாவது இறப்பு. இம்மூன்றிலும் பிறப்பும் இறப்பும் அறியாமலே ஏற்பட்டு விடுகிறது. இதன் மூலம் தலைவன் தலைவி பொருளீட்டுவதாக கடமையாற்ற லும், கல்வி நிலை மேம்பாடும், சமுதாய மேம்பாடுகளால் இருவரும் பிரிந்து வாடுகின்றனர். தலைவன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்பன இவ்வாய்வின் முடிபுகளாகும்.

# துணைநூற்பட்டியல்


இராகவையங்கார், மு. - ***ஆராய்ச்சி தொகுதி***
*திருவல்லிக்கேணி,*
*சென்னை-122*

இராணி, ந. - ***சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள்***
*பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்,*
*16(142) ஜானி ஜான் கான் சாலை,*
*சென்னை - 14.*

இராமகிருட்டிணன், ஆ. - ***அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு***
*சர்வோதய இலக்கியப் பண்ணை,*
*32/1, மேல வெளி வீதி,*
*மதுரை - 625 001.*

இராமலிங்கம் - ***சங்க இலக்கியத்தில் வேந்தர்***
*ஸ்ரீ பாரதி புத்தகாலயம்,*
*7/40 கிழக்குச் செட்டித்தெரு,*
*பரங்கிமலை,*
*சென்னை - 600 616.*

இராமையா பிள்ளை - **தொல்காப்பியர் புறத்திணை விளக்கம்**
ஏ-3, அடையாறு அடுக்குக் கட்டிடம்,
கோட்டூர்புரம்,
4 வது முதன்மைச் சாலை,
சென்னை - 600 085.

இலக்குவன் - **தொல்காப்பிய ஆராய்ச்சி**
மதராஸ் ரிப்பன் பிரஸ்,
புதுக்கோட்டை.
முதற்பதிப்பு-1961

இலக்குவனார், சீ. - **இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்ககாலம்)**
வள்ளுவர் பதிப்பகம்,
வடக்கு இராச வீதி,
புதுக்கோட்டை.
முதற்பதிப்பு - 1962

இலக்குவனார் - **முல்லை வாழ்க்கை**
கன்னி பதிப்பகம்,
19, முனிசாமி அவின்யூ,
காஞ்சிபுரம் - 631 501.

கதிர் முருகு - **புறப்பொருள் வெண்பாமாலை**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3-ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 14.

கந்தசாமி, சோ.ந., - **குறுந்தொகை திறனாய்வு**
அபிராமி பதிப்பகம்,
அண்ணாமலை நகர்
1978

கிருட்டிணமூர்த்தி, சா. - **தமிழிலக்கிய வகைமையியல்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.

குருசாமி, ம.ரா.போ., - **சங்க காலம்**
மெர்க்குரி புத்தகக் கம்பெனி,
கோயம்புத்தூர்
1967

குழந்தை புலவர் - **தொல்காப்பியர் காலத் தமிழர்**
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-14.
முதற்பதிப்பு - 2008

கேசையா, ம., - **சங்கத்தமிழ் விருந்து**
36, தெற்கு சிவன் கோவில் தெரு,
சென்னை - 600 024
முதற்பதிப்பு - மே, 1989

கேசையா, ம. - **சங்கத் தமிழர் வாழ்வியல்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத்தொழில் நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி,
சென்னை - 600 113.

கோதண்டபாணி, கு., - **நெடுநல்வாடையின் பா நலன்**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
1947

சரளா இராசகோபாலன் - **சங்க இலக்கியங்களில் தோழி**
ரவி பதிப்பகம்,
19, அய்யப்பன் நகர்,
ஆசிரியர் காலனி,
கொளத்தூர்,
சென்னை - 099.

சாமிநாதையர், உ.வே. - **பதிற்றுப்பத்து**
உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்,
சென்னை
1980.

சாரங்கபாணி, இரா., - **பரிபாடல் திறன்**
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்
1972

சிவசுப்பிரமணியன், வே.,
(ப.ஆ) - **அகநானூறு களிற்றியானை நிரை**
டாக்டர் உ.வே. சாமிநாதையர்
நூல் நிலையம்,
சென்னை - 1090.

சுப்பிரமணியம், கா., - **சங்க காலச் சமுதாயம்**
என்.சி.பி.எச்.,
சென்னை
மூன்றாம் பதிப்பு - 1993

சுப்பிரமணியம், ச.வே., - **தொல்காப்பியம் தெளிவுரை**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை - 600 108.

சுப்புரெட்டியார், ந., - **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை**
சந்தியா பதிப்பகம்,
சென்னை.
2011

சுரேஷ், கோ - **இலக்கியங்களில் வாழ்வியல்**
**சிந்தனைகள்**
அறிவுப் பதிப்பகம்,
சென்னை-2007.

செந்தாமரைக் கண்ணி, ஆ. - **பெண்களும் மரபுகளும்**
பாவைப் பப்ளிகேசன்ஸ்,
சென்னை.
*2008*

செல்லையா, ஜெ.வி. - **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
தமிழ்த்துறை வெளியீடு எண்-26,
முதல் வெளியீடு 1970

சோமசுந்தரனார், பொ.வே. - **கலித்தொகை**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
*1973.*

சோமசுந்தரனார், பொ.வே. - **புறப்பொருள் வெண்பாமாலை**
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 18.

தமிழண்ணல் - **சங்க மரபு**
சிந்தாமணி,
மதுரை.
*2009*

*தமிழண்ணல்* - **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை.*
*2003*

*தமிழண்ணல்* - **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**
*பெரியநாயகி அச்சகம்,*
*மதுரை*
*1975.*

*தமிழண்ணல்* - **ஆய்வுக்கோவை**
*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*
*மதுரை - 625 021*
*முதல் தொகுதி - 2008*

*திருஞானசம்பந்தம், ச.,* - **அகப்பொருள் விளக்கம்**
*கதிர் பதிப்பம்,*
*தெற்கு வீதி,*
*திருவையாறு - 613 204.*

*திருவாவடுதுறை ஆதீனம்* - **சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு**
*தமிழ்ப் பல்கலைக் கழகம்,*
*திருவள்ளுவராண்டு 2039*
*டிசம்பர் - 2008*

*துரைசாமிபிள்ளை, சு. (உ.ஆ)* - **புறநானூறு**
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்.*
*1984*

*துரைசாமிப்பிள்ளை (ப.ஆ)* - **புறநானூறு**
*சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்,*
*சென்னை.*

*துரைசாமிப்பிள்ளை, ஞா.சா.* - ***சங்கத் தமிழ் இலக்கியம்***
*பாரி புத்தகப் பண்ணை,*
*90, பிராட்வே,*
*சென்னை-108.*

*நக்கீரனர்* - ***இறையனார் களவியல்***
*வானதி பதிப்பகம்,*
*தி.நகர், சென்னை - 17.*
*முதற்பதிப்பு ஆகஸ்ட் 1970.*

*நச்சினார்க்கினியர்* - **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
***அகத்திணையியல்***
*திருநெல்வேலி தென்னிந்திய சைவ*
*சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்*
*(பி) லிமிடெட்,*
*சென்னை - 1.*

*நடராசப்பிள்ளை, க.ப.,* - ***முல்லைப்பாட்டு***
*திருநெல்வேலி தென்னிந்திய சைவ*
*சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்*
*சென்னை.*
*1930*

*நாராயணசாமி ஐயர் (உ.ஆ)* - ***ஐங்குறுநூறு***
*சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்,*
*சென்னை - 1940*
*1967*

*நாராயணசாமி ஐயர் (உ.ஆ.)* - ***நற்றிணை***
*திருநெல்வேலி தென்னிந்திய சைவ*
*சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை.*
*1967*

*நிர்மலா மோகன்* - ***சங்கச் சான்றோர் ஆளுமைத்திறன்***
*செல்லப்பா பதிப்பகம்,*
*மயூரா வளாகம்,*
*48, தானப்ப முதலி தெரு,*
*மதுரை-01.*

*பழனிச்சாமி, செ.* - ***புறநானூற்றில் தமிழர் பண்பாடு***
*வாணி பதிப்பகம்,*
*கோவை.*
*1989*

*பாக்கியமுத்து, தி.* - ***தமிழ் நாவல்களில் குடும்ப சக்தி***
*கிருத்துவ இலக்கியச் சங்கம்,*
*திருச்சிராப்பள்ளி*
*1978*

| | | |
|---|---|---|
| *பாண்டுரங்கன், அ.* | - | **தொகை இயல்**<br>*30,19 ஆவது குறுக்குத்தெரு,*<br>*அவ்வை நகர்,*<br>*இலாசுப்பேட்டை,*<br>*புதுச்சேரி - 605 008.* |
| *பாலசுந்தரன், தி.அ.,* | - | **எட்டுத்தொகையும் தமிழ்ப் பண்பாடும்**<br>*ஐடியல் பிரிண்டர்ஸ்,*<br>*சென்னை.*<br>*முதற்பதிப்பு, மே 1957* |
| *பாலசுப்பிரமணியன்,*<br>*கு.வெ.,* | - | **சங்க இலக்கியத்தில் வாகைத்திணை**<br>*மணிவாசகர் பதிப்பகம்,*<br>*சென்னை*<br>*1989* |
| *பானு நூர்மைதீன், வ.ச.,* | - | **பழந்தமிழ் அகப்பாடல்களில்**<br>**நிகழும் பொழுதும்**<br>*பர்வீன் பதிப்பகம்,*<br>*திருச்சிராப்பள்ளி*<br>*1993* |
| *புலியூர்க் கேசிகன் (ப.ஆ)* | - | **அகநானூறு மணிமிடை பவளம்**<br>*சைவ சித்தாந்தக் கழகம்,*<br>*சென்னை - 18*<br>*1960* |

புலியூர்க் கேசிகன் - **ஐங்குறுநூறு குறிஞ்சியும் பாலையும்**
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை - 01.

மனோன்மணி சண்முகதாஸ் - **குறுந்தொகை ஒரு நுண்ணாய்வு**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.ஐ.டி.வளாகம்,
தரமணி,
சென்னை - 600 113.

மாணிக்கம், வ.சுப., - **தமிழ்க் காதல்**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்.

மாணிக்கம், வ.சுப., - **சங்க இலக்கிய ஆய்வுகள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113

மாதையன், பெ. - **அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை-14.

முத்துராசன் - **சங்க இலக்கியக் கட்டுரைகள்**
தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு-3,
தி.ஆ.2015 சித்திரை,
ஏப்ரல்-1984.

வரதராசன், மு., - **இலக்கிய மரபு**
பாரி நிலையம்,
சென்னை.
1968

வரதராசன், மு. - **குறுந்தொகைச் செல்வம்**
பாரிநிலையம்,
59 பிராட்வே,
சென்னை-1,
முதல் பதிப்பு - மார்ச்சு-1955

வில்வபதி, கோ. புலவர் - **சங்க இலக்கியம் பட்டினப்பாலை**
ஏஷியன் அச்சகம்,
சென்னை-600 014.
முதற்பதிப்பு-1988.

வேங்கடசாமி, சீனி. மயிலை - **சங்ககால வரலாற்று ஆய்வுகள்**
சோசப் குடியிருப்பு
ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.

வேலுப்பிள்ளை, ஆ. - ***தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்***
*குமரன் புத்தக இல்லம்,*
*சென்னை.*
*மறுபதிப்பு - 2009*

வைத்தியநாததேசிகர் - ***இலக்கண விளக்கம் (பொருளியல்)***
*முதற்பதிப்பு நவம்பர்-1962,*
*இரண்டாம் பதிப்பு மார்ச்-1968.*

வைத்தியலிங்கன், செ. - ***தமிழ்ப் பண்பாட்டு வரலாறு***
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,*
*அண்ணாமலைநகர்.*
*1997*

வையாபுரிப்பிள்ளை, எஸ். - ***இலக்கிய உதயம் (இரண்டாம் பகுதி)***
*சங்க இலக்கியம்*
*(பாட்டும் தொகையும் பகுதி 1, 2)*
*பாரிநிலையம்,*
*சென்னை.*
*1967.*

- ***ஐந்திணை வளம்***
*ஐந்திணைப் பதிப்பகம்,*
*சென்னை*
*1990*

ஜீவானந்தம், ப., - ***சங்க இலக்கியத்தில் பாலைத்திணை***
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர் - 613010*
*அக்டோபர் - 2004.*

ஜெயபாலன், க. - ***தமிழர் இலக்கியப் புரட்சி***
*திருக்குறள் பதிப்பகம்,*
*சென்னை*
*2003*

- *அகத்திணைக் கொள்கை*
*பாரி நிலையம்,*
*184, பிராட்வே,*
*சென்னை-01.*

***ஸ்ரீ வாசன், வி.,*** - *சங்க இலக்கியத்தில் அவலச்சுவை*
*திரு. வே.ப. 1978, இசரேயல்,*
*மேர் அகத்திணைக் கொள்கை,*
*அகத்திணை மாந்தர் சமூக அமைப்பு,*
*இலக்கிய மரபுகள் யாப்பு*

ஆய்வேடுகள்


- ***சங்கஇலக்கியத்தில் பரத்தமை***
  *முனைவர் பட்ட ஆய்வேடு,*
  *மதுரை பல்கலைக் கழகம்,*
  *மதுரை - 1979.*

- ***சங்க இலக்கியத்தில் சமூகவியல்***
  *அடிப்படைக் கோட்பாடுகள் ஓர் ஆய்வு,*
  *இலக்கியத்துறை*
  *தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
  *தஞ்சாவூர்*
  *ஜுன் - 2002.*

- ***சங்க இலக்கியத்தின்***
  ***குடும்பக் கட்டமைப்பு***
  *தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
  *தஞ்சாவூர்.*